"பட்டுப் புடவைகளில் அழகானவை

# ராசி பட்டுப் புடவைகளே!"

என்கிறார் **பட்டு மாமி**

"எத்தனையோ பட்டுப் புடவைகள் உடுத்தி இருக்கிறேன். எல்லா வற்றிலும் கவர்ச்சி மிகுந்தது ஒன்பதரை கஜம் ராசி பட்டுப புடவை" என்கிறார் சௌகார் ஜானகி.

கண்கவர் நிறங்கள், அழகிய டிசைன்கள், பலவித பார்டர்களில் ஒன்பது, ஒன்பதரை கஜங்களில் ராசிப் பட்டுப் புடவைகள் கிடைக்கின்றன. புராதன மற்றும் நவீன நாகரிக டிசைன்கள் விசேஷங்களில் அணிய உயர்ந்த விலையிலும், அன்றாட உபயோகத் திற்கு சகாய விலையிலும் ராசிப் பட்டுப் புடவைகள் உள்ளன.

# ராசி

இன்றே எல்லா ரக ராசிப் பட்டுப் புடவைகளையும் எங்களது ஏர்கண்டிஷன்ட் ஷோரூம்களில் பார்வையிடுங்கள்

**ராதா சில்க் எம்போரியம்**
14, சன்னதித் தெரு, மைலாப்பூர்
மதராஸ்-4

**ராதா சில்க்ஸ்,**
'தன் பில்டிங்ஸ்' மவுண்ட் ரோடு,
மதராஸ்-2

**ராதா சில்க் எம்போரியம்,**
பம்பாய் சுதேசி கோஆப்பரேடிவ்
ஸ்டோர்ஸ் கம்பெனி கட்டிடம்
வெஸ்டர்ன் இந்தியா ஹவுஸ்,
ஸர் பி. எம். ரோடு பம்பாய்-1



EP-RASI-38

எங்கள் மவுண்ட் ரோடு ஷோரூமிலும்
9, 9½ கெஜம் ராசிப் பட்டுகள் கிடைக்கும்

# கல்கி

பொங்கல் சிறப்பு மலர்

## பொருளடக்கம்

பராபவ, தை 2 – ஜனவரி 15


| | | |
|---|---|---|
| ''எப்படி ஒன்றுசேரலாம்?'' | | 5 |
| குறையொன்றும் இல்லை | – | 6 |
| ராஜாஜியின் கருத்துக்கள் | – | 8 |
| ஆணவத்தை அடக்குங்கள்! | – | 11 |
| 67-ல் சந்திப்போம்! | – | 12 |
| பேட்டியாளரோடு பேட்டி | – | 18 |
| நீ அணைத்த தீரர்கள் | – | 22 |
| கல்லுக்குள் ஈரம் | – | 26 |
| ஜிம்மி | – | 35 |
| இனிக்கும் கிரிக்கெட் | – | 37 |
| நான் கண்டேனு? | – | 41 |
| இலையுதிர் காலம் | – | 63 |
| பட்டு டாக்டர் | – | 94 |
| சொர்க்கத்தை நோக்கி... | – | 116 |


''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

வாழ்க பொங்கல்!

ஆனந்தம் என்பது பரம்பொருளின் பேரிலக்கணங்களில் ஒன்று. விழாக்களும் கூத்துக்களும் ஆடலும் பாடலும் தேரும் திருநாளும் பூஜைகளும் உற்சவங்களும் சமுதாய மகிழ்ச்சிக்கு வேண்டிய அவசியமான சாமக்கிரிகைகள்.

இவற்றில் என்ன பொருள், ஏது பயன் என்று எண்ணித் தள்ளி விட்டோமானால் வாழ்க்கை வளர்ச்சி குன்றி வறண்டு உலர்ந்து போகும். நம்முடைய விழாக்கள் அறிவீனத்தினாலோ மூடபக்தியினாலோ ஏற்படுத்தப்பட்டவை அல்ல; சமுதாய வாழ்க்கைக்கு அவசியமான சிறந்த சாதனங்கள். வாழ்க பொங்கல்! பொங்குக வாழ்க்கை!

-ஸ்ரீ சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

கல்கி, ஜனவரி 12, 1947

இலங்கையில் 35 சதம் தபால் செலவு தனி



மாய வாழ்வைத் துறந்து நிதம்
வையம் வாழத் தவ மிருக்கும்
ஐயன் காஞ்சி அருளாளன்
தூய பாதம் பணிந்திடுவோம்

தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 26 □ இதழ் 24



# "எப்படி ஒன்று சேரலாம்?"

சுதந்திரக் கட்சி, திராவிட முன்னேற்றக் கழகம், முஸ்லீம் லீக், தமிழரசுக் கழகம் ஆகியவற்றின் கொள்கைகளுக்கிடையே உள்ள வேறுபாடுகளைச் சிலர் கட்டிக்காட்டி, இவை எப்படி ஒன்று சேரலாம் என்று கேட்கிறார்கள்.

மற்றக் கொள்கைகளில் மாறுபட்டாலும் ஒரு கொள்கையில் இவை அனைத்தும் ஒரேபோல் மனப்பூர்வமான ஈடுபாடு கொண்டிருப்பதாலேயே தேர்தல் காரியங்களில் இணைந்திருக்கின்றன.

இருபதாண்டுகள் தனியரசு செலுத்திய காங்கிரஸ் மீண்டும் ஐந்தாண்டுகளுக்கு ஆட்சி அதிகாரம் பெற்றுவிட்டால், அதோடு ஜனநாயகத்துக்கே இந்தியாவில் சமாதி கட்டப்படும். எனவே இப்போது நாட்டில் ஜனநாயகப் பண்பைக் காப்பாற்ற வேண்டிய அவசரம் நேர்ந்துள்ளது. இந்த உன்னதமான கொள்கைக்காகவே சுதந்திரக் கட்சியும், தி.மு.க.வும், முஸ்லிம் லீகும், தமிழரசுக் கட்சியும் ஒன்றுகூடிச் செயலாற்றுகின்றன.

சுதந்திரக் கட்சிக்கும் தி. மு. க.வுக்கும் கொள்கை அடிப்படையில் உள்ள வேற்றுமைகளைச் சிலர் கூறும் அதே தருணத்தில், சுதந்திரக் கட்சியின் செல்வாக்கினால் தி. மு. க.வின் கொள்கைகளில் பல மாறியிருக்கின்றன என்று வலது சாரிக் கம்யூனிஸ்ட் தலைவர் திரு கலியாணசுந்தரம் குற்றம் கூறியிருக்கிறார். 'கூட்டுச்சேரா தடஸ்தக் கொள்கையை மீண்டும் பரிசீலிக்க வேண்டும்; ஆசியாவில் ஒரு பொதுச் சந்தை ஏற்பட வேண்டும்; தமிழகம், ஆந்திரம், கர்நாடகம், கேரளம் ஆகியன இந்திய யூனியனுக்குள்ளேயே ஒரு மண்டலமாக இருக்க வேண்டும் என்றெல்லாம் தி. மு. க.வின் தேர்தல் அறிக்கையில் காணப்படுவது ராஜாஜியின் கருத்துக்களைப் பின்பற்றியவையே' என்கிறார் அவர்.

எதிர்ப்புக் கூட்டணியில் உள்ள கட்சிகள் தங்கள் கொள்கைகளையெல்லாம் ஒரேபோல் மாற்றிக்கொள்ளப் போவதாக ஒருபோதும் சொல்லவில்லை. தனித் தனிக் கட்சிக் கொள்கைகளைவிட முக்கியமானது, 'ஜனநாயகத்தைக் காப்பதற்காகக் காங்கிரஸின் இடையறா ஆட்சியைத் தவிர்க்க வேண்டும்' என்ற பொதுக் கொள்கைதான்.

தமிழகத்தில் மட்டுமின்றி அகில இந்தியாவிலும் தேசிய அடிப்படையில் எதிர்க் கட்சிகள் பரஸ்பரப் போட்டியை இதே ரீதியில் தவிர்த்து, ஒன்று சேர்ந்து காங்கிரஸை எதிர்க்கின்றன. இதனால் பலமுனைப் போட்டிகள் தவிர்க்கப்படும். எனவே காங்கிரஸின் ஸ்தானங்கள் கணிசமாகக் குறையும். இவ்வாறு சர்க்கார் அமைப்பதற்குத் தேவையான பலத்தைக் காங்கிரஸ் பெறுமற் செய்தால்தான் ராஷ்டிரபதி தேசிய அரசாங்கத்தை ஏற்படுத்த முடியும். எனவே தேசிய அரசாங்கம் ஏற்பட வேண்டுமென விரும்புகிறவர்கள் எதிர்ப்புக் கூட்டணியின் அவசியத்தை உணருவர்.

ஹிட்லரின் யதேச்சாதிகாரத்தை ஒழிப்பதற்காக சர்ச்சிலும் ஸ்டாலினும் ஒன்று சேர்ந்தார்கள். 'பிரிட்டிஷ் சர்க்காரின் கொள்கைகளுக்கும், ருஷிய சர்க்காரின் கொள்கைகளுக்கும் இடையில் பொருத்த வேறுபாடுகள் உள்ளனவே; இவை எப்படி ஒன்று சேரலாம்?' என்று அப்போது ஒருவரும் கேட்கவில்லை. ஹிட்லர்-ஆட்சி நடத்தும் காங்கிரஸைப் பதவியிலிருந்து இறக்குவதற்காக எதிர்க்கட்சிகள் சேரும்போதும் இக்கேள்விக்கு இடமில்லை.

'ஆக்கத்துக்காக ஒன்று சேர வேண்டும்; காங்கிரஸை அழிப்பது என்ற ஒன்றுக்காக ஒன்று சேரலாமா?' என்றும் சிலர் தர்க்கவாதம் செய்கிறார்கள். தீமையை அழிப்பதே ஆக்கம்தான். பாம்பை அடித்துப் போடும்போது, 'இது அழிவுதானே! ஆக்க ரீதியாக ஏதேனும் செய்யுங்கள்' என்பார்களா? நம்முடைய சமயத்திலேயே சிஷ்ட பரிபாலனம் என்பதைச் சொல்லும் போது அதோடுகூட துஷ்ட நிக்கிரகம் என்பதையும் சொல்வார்கள். தீமையை மாய்ப்பதே நன்மையை வளர்ப்பதுதான்.

குறையொன்றும் இல்லை மறைமூர்த்தி கண்ணா
குறையொன்றும் இல்லை கண்ணா!

கண்ணுக்குத் தெரியாமல் நிற்கின்றாய் கண்ணா
கண்ணுக்குத் தெரியாமல் நின்றாலும் எனக்கு
குறையொன்றும் இல்லை மறைமூர்த்தி கண்ணா!

வேண்டியதைத் தந்திட வேங்கடேசன் நின்றிருக்க
வேண்டியது வேறில்லை மறைமூர்த்தி கண்ணா
— குறையொன்றும் இல்லை மறைமூர்த்தி கண்ணா!

திரையின்பின் நிற்கின்றாய் கண்ணா! உன்னை
மறையோதும் ஞானியர் மட்டுமே காண்பார்
என்றாலும் குறையொன்றும் எனக்கில்லை கண்ணா
குன்றின்மேல் கல்லாகி நிற்கின்ற வரதா
— குறையொன்றும் இல்லை மறைமூர்த்தி கண்ணா!

கலிநாளுக் கிரங்கிக் கல்லிலே இறங்கி
நிலையாகக் கோயிலில் நிற்கிறாய் கேசவா
— குறையொன்றும் இல்லை மறைமூர்த்தி கண்ணா!

யாதும் மறுக்காத மலையப்பா! உன்மார்பில்
ஏதும் தரநிற்கும் கருணைக் கடல் அன்னை
என்றும் இருந்திட ஏதுகுறை எனக்கே
ஒன்றும் குறையில்லை மறைமூர்த்தி கண்ணா!

குறையொன்றும் இல்லை மறைமூர்த்தி கண்ணா
குறையொன்றும் இல்லை கண்ணா!

ராஜாஜி
(சோமு உதவி)

# ராஜாஜியின் கருத்துக்கள்

**ம**க்கள் சபைக்கான தேர்தலும், ராஜ்ய சட்டசபைக்கான தேர்தலும் ஒரே சமயத்தில் ஒரே வாக்குச் சாவடியில் நடைபெறுவது ஆட்சேபகரமானதாகும். சட்டசபை அங்கத்தினர்களும், மக்கள் சபை அங்கத்தினர்களும் ஈடுபடும் பிரச்னைகளின் தன்மை மாறுபட்டது. இரண்டு தேர்தல்களும் ஒரே போதில் ஒரே இடத்தில் நடப்பதால், தேசியப் பிரச்னைகளைக் கவனிக்க வேண்டிய ஒரு மக்கள் சபை அபேட்சகர் உள்ளூரில் பஸ் ஸ்டாப் வைப்பது பற்றி என்ன நினைக்கிறார் என்பதைப் பார்த்துக்கூட வாக்காளர்கள் வாக்கு அளிக்கும்படியாகிறது. உள்ளூர்ப் பிரச்னைகளும் தேசியப் பிரச்னைகளும் குழப்பப்படாமலிருக்க வேண்டுமாயின் லோக சபைத் தேர்தலும் சட்ட சபைத் தேர்தலும் வெவ்வேறு நாட்களில் நடைபெற வேண்டும் என்று ஸ்ரீ கே. சந்தானம் நீண்ட காலமாகக் கூறி வருகிறார். சீர்திருத்தத்தால் செலவு அதிகமாகும் என்பது உண்மை.

தேர்தல் செலவு குறித்து ஒரு விஷயம்: அபேட்சகர்களின் சொந்தச் செலவைக் குறைத்துச் சர்க்காரே அதனை ஏற்க நிறைய அம்சங்களில் இடமுண்டு. வாக்காளர்கள் தங்களுக்கு வாக்குரிமை உண்டா என்றறியவும், வாக்குப் பதிவு முறையை அறியவும் இன்று அபேட்சகர்களையே நம்பியிருக்கின்றனர். இது அபத்தமாகும். சர்க்கார் அதிகாரிகள்தான் இதற்குப் பொறுப்பேற்க வேண்டும். ஆனால், அதிகாரிகளைக் காங்கிரஸ் ஆட்சி தவறான வழியில் பயன்படுத்தி வந்திருப்பதால் அதிகாரிகளிடம் அதிகமாகத் தேர்தல் பொறுப்பைத் தருவதற்கும் மக்கள் அஞ்சுகிறார்கள்.

ஃஃஃ

"**கா**ங்கிரஸை விட்டதில் எனக்கு எவ்வித வருத்தமுமில்லை" என்று ஸ்ரீ வி. கே. கிருஷ்ணமேனன் பேசியிருக்கிறார். தம்முடைய இஷ்டம் பலிக்கவில்லை என்பதால்தான் அவர் காங்கிரஸை விட்டு, பம்பாயின் வடக்குத் தொகுதியில் சுயேச்சையாக நிற்கிறார். அவர் வருந்தினாலும், வருந்தாவிட்டாலும், இத் தேர்தலில் அளவுக்கு மீறிய கவனம் செலுத்தப்படும்.

சமூக நீதி நிலைபெற உதவ வேண்டும், சட்டத்தின் ஆட்சி ஸ்திரமாக வேண்டும், தனியார் சுதந்திரத்தில் மிகுந்த தலையீடு





மேனாடுகளில் 'சங்கீத' இக் விஜயம் செய்து திரும்பிய ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களுக்குச் சென்னை நகர மக்கள் சார்பில் மேயர் வரவேற்பளித்துப் பாராட்டினார். நகர சபையின் அன்பளிப்பாக மேயர் திரு சம்பந்தம் வெள்ளி வீணை யொன்றை ஸ்ரீமதி எம். எஸ். ஸுக்கு வழங்குகிறார். பாராட்டுக்கு நன்றி தெரிவித்துப் பேசுகிறார் ஸ்ரீமதி எம். எஸ். துணை மேயர் திரு கிருஷ்ணமூர்த்தியையும் ஸ்ரீ சதாசிவம் அவர்களையும் படத்தில் காணலாம்.

ஏற்பட்டிருப்பதை நீக்கித் தனிநபர் சுதந்திரத்துக்குள்ள மதிப்பை மீண்டும் ஏற்படுத்த வேண்டும் என்றெல்லாம் ஸ்ரீ மேனன் பேசுகிறார்! சர்க்காரின் சட்டத்தை நீதிமன்றம் ஒப்புக் கொள்ளவில்லை என்றால், அதற்காகவே சாஸனத்தைச் சர்க்காருக்குச் சாதகமாகத் திருத்திவிடக் கூடாது என்கிறார்.

எல்லாவற்றிலும் சர்க்கார் குறுக்கிட்டுக் கட்டுப்படுத்தும் சர்வாதிபத்தியம்தான் நாட்டுக்குகந்த சோஷலிஸம் என்று மட்டும் ஸ்ரீ மேனன் எண்ணாமலிருப்பின் அவரது கொள்கைகளையும் லட்சியங்களையும் யாருமே எதிர்க்க மாட்டார்கள். துரதிருஷ்டவசமாக, ஒரு நல்ல இலட்சியத்தை அடைவதாக எண்ணிக் கொண்டு, அதற்காகச் செல்லுபடியாகாத சாதனத்தை வகுத்துக் கொண்டு, சாதனமே லட்சியம் என்று சிலர் எண்ணி வருகிறார்கள்!

❖❖❖

**நா**ட்டுப் பொருளாதாரத்தில் மிகவும் சக்தி வாய்ந்த ஸ்தானத்தைத் தேர்தல் காலத்தில் பெற்றுள்ள காங்கிரஸ் பிரதமர் இதோடு திருப்தியடையவில்லை. தாம் செல்லும் இடங்களிலெல்லாம், காங்கிரஸே நிச்சயமாக மீண்டும் பதவிக்கு வரும் என்று 'ஆருடம்' கூறுகிறார். தன்னம்பிக்கை குறைந்ததற்கே இது ஒரு சாட்சியம். அதே போதில், 'ஜாக்கிரதை: பதவிக்கு வரப்போகிற எங்களுக்கே வோட்டுப் போடுங்கள்' என்ற பயமுறுத்தலும் இதில் அடங்கி இருக்கிறது.

❖❖❖

**ப**ழைய ஸம்ஸ்தான மன்னர்களில் பலரைக் காங்கிரஸ் கட்சி ஏதோ ஒரு வழியில் பிடித்து வைத்துக் கொண்டுள்ளபோது குவாலியர் மன்னரின் அன்னை விஜயராஜ் ஸிந்தியா காங்கிரஸிலிருந்து ராஜிநாமாச் செய்துவிட்டு குவாலியரின் மக்கள் சபை, சட்ட சபை இரண்டுக்கும் சுயேச்சை அபேட்சகராக நிற்க முடிவு செய்திருப்பது நல்ல சேதி.

❖❖❖

**ப**ஞ்சாபில் காங்கிரஸை எதிர்ப்பதில் மாஸ்டர் தாரா சிங்கும் தம்முடன் சேர வேண்டும் என்று ஸந்த் ஃபதே சிங் கோரியிருக்கிறார். இதற்குத் தாராசிங் இணங்க வேண்டும் என்பதே என் ஆசை. தம்முடைய கோஷ்டியும் ஃபதே சிங்கின் கோஷ்டியும் இணைவதற்கான நிபந்தனைகளை அவர் பிற்பாடு போடலாம். உடனடியாக காங்கிரஸ் எதிர்ப்பில் இருவரும் சேர வேண்டும்.

## அன்பார்ந்த நேயர்களுக்கு

**பொ**ங்கல் வாழ்த்துக்கள்.

தமிழ் பேசப்படும் இடங்களிலெல்லாம் மகிழ்ச்சி பொங்கவும் இன்பம் நிலவவும் இத் திருநாளில் இறைவனைப் பிரார்த்திக்கிறேன்.

தலைவர் ராஜாஜி அவர்கள் இந்த இதழில் எழுதியிருப்பது போல ஆண்டவனிடம் மனத்தைச் செலுத்தினால் நமது பாரங்கள் குறைந்து பலம் பெருகுவதைக் காண்போம்; நமக்குக் குறையொன்றுமில்லை என்பதை உணர்வோம். இந்த மனப் பக்குவத்தை நாம் பெறத் திருப்பதி வேங்கடாசலபதியின் திருவருளை வேண்டி வணங்குகின்றேன்.

இந்தப் பத்திரிகையைக் கடந்த இருபத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாக விற்பனை எண்ணிக்கையில் மட்டுமல்லாது தரத்திலும் சிறந்த குடும்பப் பத்திரிகையாக நடத்தி வர முழு ஒத்துழைப்பையும் நல்கிய நேயர்களுக்குத் தமிழ்த் திருநாளாகிய இன்றைக்கு, என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இன்றைய ஆட்சி முறையில் நிலவும் தவறான பொருளாதாரக் கொள்கைகளின் விளைவாக விலைவாசிகள் விஷம் போல் உயர்ந்தபடியிருக்கின்றன. அதுவும் சமீப காலத்தில் ரூபாயின் மதிப்புக் குறைக்கப்பட்டதிலிருந்து பத்திரிகைத் தொழிலுக்கு ஒன்றன் பின் ஒன்றாகப் பல சோதனைகள் ஏற்பட்டிருக்கின்றன. காகிதம், அச்சு இயந்திர சாதனங்கள் ஆகியவற்றுக்கு இறக்குமதிக் கட்டுப்பாடுகள் இருந்தது போதாதென்று ரூபாயின் மதிப்புக் குறைப்பினால் இவற்றின் விலைகள் கட்டுக்கடங்காமல் உயர்ந்து விட்டன. பத்திரிகைகளின் ஜீவாதாரமான நியூஸ் பிரிண்டின் விலை ஏகத்தாறாக உயர்ந்திருப்பதால் இத்தொழில் எவ்வளவு பாதிக்கப்பட்டிருக்கும் என்பதை நேயர்களே அநுதாபத்துடன் உணர முடியும். இதனால் பத்திரிகைக் காரியாலயங்களின் செலவினம் வெகுவாக உயர்ந்து விட்டது. இவ்வாறு செலவுகள் உயருவதை ஈடுகட்ட எல்லாப் பத்திரிகைகளுமே விலையைக் கூட்ட நேர்ந்திருக்கிறது. இதற்கேற்ப கல்கியின் தனிப் பிரதி விலையை ஐந்து காசுகள் கூடுதலாக்க வேண்டிய நிர்ப்பந்தம் தவிர்க்க முடியாமல் ஏற்பட்டுள்ளது.

அடுத்து வரும் ஜனவரி 22ந் தேதி இதழ் முதல் கல்கியின் தனிப் பிரதி விலை நாற்பது காசுகளாகும். இலங்கையில் அந்நாட்டு நாணய மதிப்புப்படி கல்கியின் விலை தபால் செலவு நீங்கலாக நாற்பது சதம்.

விலை உயர்வைப் போலவே, கல்கிப் பத்திரிகை வாசகர்களுக்கு அளிக்கும் இலக்கிய சேவையின் தரமும் நிச்சயமாக உயரும் என்று கூறிக் கொள்ளுகிறேன். பல புது அம்சங்களுடன் திகழவிருக்கும் 'கல்கி'க்கு உங்களது மாறாத ஆதரவை அன்புடன் கோருகிறேன்.

— ஆசிரியர்

# நமது புதிய



















# மகாராஜாக்கள்








# ஆணவத்தை அடக்குங்கள்!

ம.பொ.சிவஞானம்

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து அறுபத்தேழு பிப்ரவரியில் நடைபெற விருக்கும் பொதுத் தேர்தல், நாற்பத்தெட்டு கோடி மக்களின் தலையெழுத்தை நிர்ணயிக்கப் போகின்றது. ஒரு நாள் நாம் அளிக்கும் வாக்கு ஐந்தாண்டுகளுக்கான பாரத சமுதாயத்தின் வாழ்க்கையை முடிவு செய்யக் கூடியதாகும்.

இருபதாண்டுகள் தொடர்ந்து அதிகார பீடத்தில் இருந்து வந்த ஒரு கட்சியின் ஆதிக்கம் இனியும் நீடிக்க வேண்டுமா என்ற வினா எழுந்திருக்கிறது. நீடிக்கக் கூடாது என்ற விடையைத் தேர்தல் நாளில் மக்கள் தர வேண்டும். ஆட்சி பீடத்தில் ஒரு கட்சியை அகற்றி இன்னொரு கட்சியை அமர்த்துவது அரசியல் விபத்து ஆகாது; அது ஜனநாயக தேவதையின் விளையாட்டு.

இருபதாண்டு காலம் ஒரு கட்சியே அனைத்து மாநிலங்களிலும் மத்தியிலும் ஆதிக்கம் செலுத்தியதால் ஜனநாயக வளர்ச்சி தடைப்பட்டு விட்டது. ஆளும் கட்சியினருக்கு, 'நம்மை அதட்டிக் கேட்க ஆளில்லை' என்ற நினைப்பில் ஆணவம் வளர்ந்துவிட்டது. அந்த ஆணவத்தை அடக்க வாக்காளர்கள் எதிர்க் கட்சிகள் அமைத்துள்ள கூட்டணிக்கே வாக்களிக்க வேண்டும்.

உணவுப் பஞ்சத்தை அகற்ற, விலைவாசிகளை மட்டுப்படுத்த, லஞ்சத்தை ஒழிக்க, நாட்டின் ஒருமைப்பாட்டை உருவாக்க, பொருளாதாரச் சீர்குலைவைத் தவிர்த்து வளத்தை வளர்க்க, இருபதாண்டு காலம் காங்கிரஸ் கட்சிக்கு அவகாசம் அளித்தோம். நாம் எதிர்பார்த்தது எதுவும் நடக்கவில்லை என்பதோடு, மேலே குறிப்பிட்ட ஒவ்வொரு துறையிலும் மேலும் மேலும் நலிவையும் நாசத்தையுமே கண்டு வந்திருக்கிறோம். இந்த நிலையில் இரும்பவும் காங்கிரஸ் ஆட்சிக்கே வாக்காளர்கள் 'வாய்ப்பளித்து விட்டால், நாட்டில் நல்லாட்சி ஏற்படாது என்பதோடு அதிருப்தி அடைந்த மக்கள் அராஜகப் போக்கிலும் செயல்படக் கூடும். அதற்கான அறிகுறிகளை இப்போதே கண்டு வருகிறோம். அந்த அபாயத்தைத் தடுப்பதற்காகவும் மக்கள் கூட்டணி வேட்பாளர்களுக்கு வாக்களிக்க வேண்டும்.

தலைவர் ராஜாஜி தமது முதிர்ந்த அனுபவத்தையும் அறிவையும் கூட்டணியினருக்குக் கொடுத்துதவி அதற்கு ஆதரவு அளித்து வருகிறார். அவருடைய பேராதரவால் கூட்டணிக்கு வெற்றி கிடைக்க வாக்காளர்கள் வாய்ப்பளித்தால் கடந்த இருபதாண்டு காலமாக அடைந்த இன்னல்களிலிருந்து நாடு விடுதலை பெறும் என்பது உறுதி.

வாக்காளர்களே! அறிவுக்கும் திறமைக்கும் பெயர் போன தமிழ்நாட்டின் பெருமையைக் காப்பாற்றும் வகையில் உங்கள் வாக்குகளைப் பயன்படுத்துங்கள். எப்பொழுதும் எதிலும் நிலையற்ற நன்மையைச் செய்வதிலே பாரதப் பெரு நாட்டில் நம் தமிழகமே முன்னோடியாக இருந்து வந்திருக்கிறது. காங்கிரஸ் ஆட்சியை மாற்றுவதிலேயும் நாம் அந்தப் பழம் பெருமையை நிலைநாட்டிக் கொள்வோமாக.

'**எ**ன்னமோ கூடினர்; கலைந்தனர்' என்கிற விதத்தில் நடைபெறும் மாநாடுகள் உண்டு. ஆனால், சென்னையில் திராவிட முன்னேற்றக் கழகம் நடத்திய நான்காவது பொது மாநாடு இதுவரை தமிழகம் கண்டிராத வகையில் கூடி, தமிழகத்துக்குத் தேவையான புத்துணர்ச்சியை வழங்கி, பலவிதங்களில் வரலாற்று முக்கியத்துவம் பெற்றுத் திகழ்கிறது என்றால் அது ஏதோ எதிர்பாராமல், சந்தர்ப்பவசத்தால் ஏற்பட்ட நிகழ்ச்சியல்ல; சிறந்த தலைமையில் இயங்கும் ஒரு மகத்தான மக்கள் இயக்கம் (Mass-Movement) எதிர்பார்த்து உருவாக்கிய ஒப்பற்ற சாதனையாகும்.

'பர்மிட்டு'கள் மூலம், அல்லது கள்ளமார்க்கெட்டில் மட்டுமே கிடைக்கக் கூடிய பித்தம் பிதுத்தநாகத் தகடுகளை அடைப்பாகக் கொண்டு படாடோபமாக நடைபெற்ற மாநாட்டினைத் தமிழகம் கண்டிருக்கிறது. அதற்கும் மக்கள் கூடத்தான் செய்தனர். ஆனால் கூடியோரில் பலர் ஆயிரக் கணக்கில் கட்டு அடுக்கும் ராட்சத 'இட்லிப் பானை'யை வேடிக்கை பார்க்க வந்தவர்கள் என்பதனை நாடறியும்.

ஆனால் தி. மு. க. மாநாட்டிற்கு வந்தவர்கள் வேடிக்கை பார்க்க வந்தவர்கள் அல்லர்; பத்தொன்பது ஆண்டு காலமாய் நாட்டை வேதனையில் ஆழ்த்தி






"முரசொலி மாறன்"

வேடிக்கை காட்டும் ஒரு துரைத்தனத்தை மாற்றி அமைக்கச் சூளுரைத்து, அதற்கான வழிவகை காண வந்தவர்கள் !

சரியாகப் பதினைந்து நாட்கள்கூட இருக்காது. சென்னையை அடுத்த விருகம்பாக்கம் கிராமத்தில் மாநாடு நடத்த வேண்டும் என்பதை முடிவு செய்து. மாநாட்டிற்காக முதலில் தேர்ந்தெடுக்கப்பட்ட இடம் தலைநகரின் இதயம் போலத் திகழும் 'தீம்காரு மைதானம்' ஆகும். அதைப் பெறுவதற்காகக் கழகம் இரண்டு முறை தில்லி பாதுகாப்பு அமைச்சரவைக்கு விண்ணப்பம் செய்து கொண்டது. ஆனால், அதே இடத்தில் 1963ம் ஆண்டு பஞ்சாயத்து யூனியன் தலைவர்கள் மாநாடு நடத்துவதற்கு அனுமதி அளித்த அரசினர், கழக மாநாடு நடத்த அனுமதி மறுத்து விட்டனர். அதற்குப் பிறகுதான் விருகம்பாக்கம் தேர்ந்தெடுக்கப்பட்டது.

விருகம்பாக்கம் வீரம் மணக்கும் மண். அங்குதான் சென்ற ஆண்டு ஜனவரி 21ம் நாள் அன்று காலை கழக உறுப்பினர் அரங்கநாதன் இந்தியை எதிர்த்துத் தீக்குளித்து, உயிர்த் தியாகம் செய்து, தென்னகத்திலே இந்தி எதிர்ப்புத் தீயைக் கொழுந்து விட்டெரியச் செய்தார். அந்த மண்ணிலே மாநாடு நடத்துவது எழுச்சி தரத்தக்கதன்றோ!

மாநாட்டிற்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட இடமோ பாம்புக் கூட்டம்

நடமாடும் கருவேலங்காடு! ஆனால் பம்பரம் போல் பணியாற்றும் கழகத் தொண்டர்கள் தங்கள் தலைவர்களின் மேற்பார்வையில் இரவுபகல் பாராது உழைத்து அந்த இடத்தைச் சமதரையாக்கி, 650 அடி — 400 அடி கொண்ட அழகுப் பந்தலைப் போட்டு; அந்த இடத்துக்கு 'நீலமேகம் நகர்' என்றும், பந்தலுக்குப் 'போளூர் சுப்ரமணியம் பந்தல்' என்றும் பெயரிட்டனர்.

அருமையான முகப்பு வாயில் மாநாட்டிற்கு எடுப்பான தோற்றம் கொடுத்தது. 1967 எனும் எண்களே நான்கு நுழைவு வாயில்களாக அமைக்கப்பட்டிருந்தன. அதற்கு



மேலே மலையிடை தோன்றும் உதய சூரியன் சின்னம்; அந்த உதய சூரியனில் அறிஞர் அண்ணாவின் திருவுருவம் – இந்தக் கவர்ச்சிமிகு முகப்பு மகாநாட்டுப் பந்தலுக்குள் நுழைவோர் நெஞ்சிலெல்லாம் புத்தாண்டு அரசியலில் பழையன கழித்துப் புதியன பெறும் உற்சாகத்தை அளித்தது.*

'1967'-ல் நுழைந்து உள்ளே வருவோர் இடது பக்கம் ஓர் உள்ளம் உருக்கும் காட்சியைக் கண்டனர். சென்ற ஆண்டு தமிழகத்தில் நடைபெற்ற இந்தி எதிர்ப்புப் போராட்டத்தின் போது போலீசாரின் துப்பாக்கிக் குண்டுகளுக்குப் பலியாகி, ஒரு கை 'இந்தி ஒழிக' என்று எழுதப்பட்ட பலகையைத் தாங்க; இன்னொரு கை 'குபு குபு'வென இரத்தம் பீறிட்டு வரும் நெஞ்சை அழுத்திப் பிடித்துக் கொள்ள, குற்றுயிரும் குலையுயிருமாகத் தரையிலே சாய்ந்து கிடக்கும் பள்ளிச்சிறுவர்கள், உயிர் போகும் நேரத்திலும் மலையென நிமிர்ந்து நின்று உரத்த குரலில் போராட்ட முழக்கமிடுவதை அப்படியே தத்ரூபமாகச் சிலை வடிவிலே வடித்திருந்தார் ஓவியர் அங்கமுத்து. 'செந்தமிழுக்கே தீமை வந்த பின்னும் இந்தத் தேகம் இருந்தொரு லாபமுண்டோ?' என்று கேட்பது போல் அந்த மாணவ மணிகள் அடக்குமுறை உடலுக்கு இழைத்த துன்பத்தைச் சிறிதும் பொருட்படுத்தாது கைகளை உயர்த்திப் போராட்ட உத்வேகத்தை வெளிப்படுத்துவது வரலாற்றுச் சுவடிகளில் நாம் பார்க்கும் ஓவியங்களை நினைவுபடுத்தியது.

இதைப் பார்த்து ஒரு சொட்டுக் கண்ணீர் உகுத்து விட்டு வலது புறம் திரும்புவோரை வரவேற்றது, 'குடிமக்கள் அஞ்சும்படியான கொடுமைகளைச் செய்து ஆளும் கொடுங்கோல் மன்னன் விரைவில் கெடுவது திண்ணம்' என்று உரைக்கும் உலகப் பொது மறை தந்த திருவள்ளுவர் சிலை!

" வெருவந்த செய்தொழுகும்
வெங் கோலனாயின்
ஒருவந்தம் ஒல்லைக்
கெடும் "

—குறள் 563

'இந்த வள்ளுவர் வாக்குப் பலிக்காமல் போகுமா?' என்று மனசாட்சியோடு பேசியவாறு பிரும்மாண்ட

---

* குடந்தை நீலமேகமும், போளூர் சுப்பிரமணியமும் அரும்பாடுபட்டு இயக்கத்தை வளர்த்து மறைந்த பெரியவர்கள்.

இந்த முகப்பு 'புரட்சி நடிகர்' எம். ஜி. ஆர். அவர்களது அன்பளிப்பாகும்.





மான பந்தலுக்குள் மக்கள் நுழைகின்றனர், கருத்து விருந்து பெற.

மாநாட்டு முதல் நாள் நிகழ்ச்சி ஜிம்கானா மைதானத்திலிருந்து புறப்பட்டு மாநாட்டுப் பந்தலை அடைந்த ஊர்வல நிகழ்ச்சிதான்.

ஊர்வலம் என்றால் ஊரை வலம் வருவது என்பது பொருள். ஆனால் இந்த ஊர்வலம் அப்படியல்ல; ஒரு பெரிய ஊரே அணிவகுத்து வலம் வந்தது போல் இருந்தது. 'சென்னை நகரையே பிரமிக்க வைத்த தி.மு.க. ஊர்வலம்' என்று 'தினமணி' பத்திரிகை கொடுத்திருந்த தலைப்பு சரியான தலைப்பாகும்.

'கடல் மடை திறந்தது போல்' என்று பழமொழி கேட்டிருக்கிறோம். ஆம்; சென்ற டிசம்பர் 29ம் தேதியன்று மாநாட்டு ஊர்வலத்தைப் பார்த்தவர்கள் அந்தப் பழமொழியை நடைமுறையில் கண்டனர். ஆர்ப்பரித்து வந்த அந்த மக்கள் வெள்ளம், அப்பப்பா....! அந்த அணிவகுப்பு தந்த எழுச்சியை எழுதிப் படித்துப் பெறுவது என்பது இயலாத காரியம்.

ஊர்வலத்தின் முன்னணியில் ஆயிரக்கணக்கான கழகத் தொண்டர்கள் சைக்கிள்களில் இருவண்ணக் கொடி ஏந்திக் கழக முழக்கங்களை முழங்கி வந்தனர். இடையிடையே சுதந்திரக் கட்சியின் நீலநிற நட்சத்திரக் கொடியும், முஸ்லிம் லீக்கின் பச்சைப் பிறைக் கொடியும் பறந்தது பரவசமளிப்பதாய் இருந்தது.

அவர்களைத் தொடர்ந்து தலைநகரின் நூறு வட்டங்களைச் சேர்ந்த கழகக் கிளைகள் அலங்கரிக்கப்பட்ட இரட்டை மாடு பூட்டிய 'டிரக்' வண்டிகளில் ஒரு நடமாடும் கண்காட்சியையே அமைத்து வந்தன.

'குடிசை வாழ்வோர் சங்கம்' அமைத்திருந்த வண்டியில் சென்னையில் நாம் காணும் ஓர் ஓலைக் குடிசை உருவாக்கப்பட்டிருந்தது. அதிலிருந்தவர்கள் மேனியைப் பாதி மறைக்கும் கந்தலாடை உடுத்தி, 'எங்களுக்கு உண்ணச் சோறில்லை! உடுக்க உடையில்லை! இந்தக் காங்கிரஸ் ஆட்சி நீடிக்க வேண்டுமா?' என்று காலியாகக் கிடக்கும் சோற்றுப் பானைகளைக் காட்டி முழங்கியவாறே வந்தனர்.

மற்றொரு வண்டியில் பெரிய பெரிய கழிவு நீர் இரும்புக் குழாய்கள் இரண்டு தென்பட்டன. ஆனால் அதற்குள்ளே பலர் படுத்துக் கிடந்தனர். 'ஜனநாயக சோஷலிசத்தில் இதுதான் எங்களது குடியிருப்பு!' என்று பக்கத்தில் நின்று கொண்டிருந்த ஒருவர் சப்தம் போட்டுக் கொண்டு வந்தார்.

இன்னொரு வண்டியில் ஒருவர் 'மிளகாய் விலை உயர்ந்தது யாரால்?, அரிசி விலை உயர்ந்தது யாரால்?' என்று ஒவ்வொரு பண்டத்தின் பெயரையும் சொல்லிக் கேட்பார். உடன், அருகிலிருப்பவர் காங்கிரஸ்காரர்போல் வேடமணிந்து நிற்கும் நண்பரைக் காட்டி, 'இந்தக் காங்கிரஸ்காரரது ஆட்சியால்!' என ஒவ்வொன்றுக்கும் பதில் கூறுவது போல் கோஷம் எழுப்புவார்.

(அடுத்த இதழில் முடியும்)





முன் பக்கம்: ஊர்வலத்தில் ஒரு காட்சி. மகாநாட்டில் அண்ணாதுரை, ஏ. கோவிந்தசாமி, எம். ஜி. ஆர். ஆகியோர்கள்.

இந்தப் பக்கம்: மகாநாட்டு ஆரம்ப விழாவில் சர்வகட்சித் தலைவர்களும் அமர்ந்திருக்கிறார்கள்.

# விவேகானந்தர் விஜயம்

வி. எஸ். ஸாக்டண்கர்

**கோவாவின் எதிர்காலம் எப்படி நிர்ணயமாக வேண்டும் என்பதற்கு மக்களின் அபிப்பிராயத்தைத் திரட்டும் பொருட்டு அண்மையில் அங்கு தேர்தல் நடக்கவிருக்கிறது. இத்தருணத்தில் கோவாவின் சரித்திரத்தில் அவ்வப்போது நிகழ்ந்த சில சுவையான நிகழ்ச்சிகளைத் தொகுத்துத் தருகிறார் திரு வி. எஸ். ஸாக்டண்கர். இதழுக்கு ஒரு துணுக்காக இந்தச் சம்பவங்கள் கல்கியில் அடுத்த சில வாரங்களுக்கு இடம் பெறும்.**

— ஆசிரியர்

சுவாமி விவேகாநந்தர் புகழுடல் பெறுவதற்குச் சிறிது காலத்துக்கு முன்னதாக பேலூர் மடத்தில் கடைசி முறையாகத் தங்கியிருந்தார். ஏகாதசி தினத்தன்று தாம் உபவாசம் இருந்த போதிலும் தமது சிஷ்யர்களுக்குத் தாமே காலை உணவு படைக்க வேண்டும் என்று பெரிதும் விரும்பினார். ''சுவாமிஜி! இதை யெல்லாம் நாங்கள் தங்களுக்குச் செய்ய வேண்டுமே தவிர, தாங்கள் எங்களுக்குச் செய்வதாவது?'' என்று சில பக்தர்கள் மறுத்துரைத்துத் தடுத்தனர்.

விவேகாநந்தரின் பதில் அவர்களைத் திடுக்கிடச் செய்து விட்டது.

''ஏசு கிறிஸ்து தமது சீடர்களின் பாதங்களைக் கழுவவில்லையா?'' என்று கேட்டார் சுவாமிஜி.

இதன் பின்னர் விவேகாநந்தர் தமது சிஷ்யர்களுக்கு உணவு பரிமாறியது மட்டுமல்ல, அவர்கள் கைகழுவ நீர் மொண்டு ஊற்றினார். துண்டை எடுத்து அவர்கள் கரங்களை ஈரம் போக ஒற்றினார்.

மனத்தைத் தொடும் இந்த நிகழ்ச்சியுடன் சுவாமிஜி ஒரு முறை வெளியிட்ட ஒரு கருத்தையும் இணைத்துப் பார்த்தால் அவர் கிறிஸ்துவ மதத்தையும் எத்துணை உயர்வாக மதித்தார் என்பது விளங்கும். அவர் வெளியிட்ட அந்தக் கருத்து இதுதான்:

''நான் மட்டும் ஏசு கிறிஸ்து வாழ்ந்த நாட்களில் பிறந்திருந்தேனானால் அவரது பாதங்களைக் கழுவியிருப்பேன் — என் கண்ணீரால் அல்ல; என்னுடைய இருதயத்தின் இரத்தத்தால்!''

கிறிஸ்துவ மதத்தின் கோட்பாடுகளை சுவாமிஜி உன்னிப்பாக ஆராய்ந்தார் என்பதற்கு அவரது கோவா விஜயமே சான்று.

1892ல் ஒருமுறை பெல்காமில் இருந்த போது சுவாமிஜி அந்நகர்ப் பிரமுகரான டாக்டர் வி. வி. ஷிர்கவோங்கர் அவர்களிடம் கோவாவுக்குச் செல்லத் தாம் விரும்புவதாகக் கூறினார். சாதாரணமாக அங்கு போய்த் திரும்ப நினைக்கவில்லை அவர். அந்த எண்ணத்தின் பின்னே திட்டவட்டமான ஒரு காரிய காரணம் இருந்தது. டாக்டர் ஷிர்கவோங்கர் தமது கோவானிய நண்பரும் சிறந்த அறிவாளியுமான சுப்ராய் நாயக் என்பவருக்கு சுவாமிஜியின் விருப்பத்தை எழுதினார்.

மார்கோவாவில் சுவாமிஜி ரயிலை விட்டு இறங்கியதும் சுப்ராய் நாயக்கின் வீட்டுக்குக் கோச்சு வண்டியில் ஊர்வலமாக அழைத்துச் செல்லப்பட்டார்.

சம்ஸ்கிருத மொழியில் பாண்டித்தியமும், ஹிந்து மத நூல்களின் ஆராய்ச்சியில் ஆழ்ந்த ஈடுபாடும் கொண்டிருந்த சுப்ராய் நாயக் விவேகானந்தரின் பேரறிவொளியால் வெகுவாகக் கவரப்பட்ட போதிலும் சுவாமிஜியின் கோவா விஜயத்துக்கு முக்கிய காரணத்தை அறிந்தபோது அவர் அடைந்த வியப்பு கொஞ்ச நஞ்சமல்ல.

கோவாவிலன்றி வேறெங்கும் அகப்படாத — லத்தீன் மொழியில் உள்ள பழங்காலத்திய நூல்கள், கையெழுத்துப் பிரதிகள் சிலவற்றைப் படித்துக் கிறிஸ்துவ மதக் கோட்பாடுகளை ஆராய விரும்பினார் சுவாமிஜி.

சுப்ராய் நாயக் சிறந்த அறிவாளியான ஒரு கிறிஸ்துவ நண்பரை சுவாஜியைச் சந்திக்குமாறு அழைத்தார். ஜே. பி. ஆல்வரேஸ் என்ற இந்த அறிஞர் உடனடியாக விவேகானந்தர் ராஷோல் கிறிஸ்துவ மடாலயத்தில் தங்கியிருக்க வசதிகள் செய்து கொடுத்தார். இந்த மடாலயமும் அதை யொட்டியுள்ள கல்லூரியும் கோவாவில் உள்ளவற்றில் மிகப் பழைமையான கிறிஸ்துவ ஸ்தாபனமாகும். மார்கோவாவிலிருந்து நான்கு மைல் தொலைவில் உள்ள இந்த இடத்தில் மூன்று நாட்கள் தங்கியிருந்தார் சுவாமிஜி. லத்தீன் மொழியில் உள்ள பழங்காலத்திய கிறிஸ்துவ வேத நூல்களையும் அதையொட்டிய பிற இலக்கியங்களையும் கூர்ந்து ஆராய்ந்தார். கிறிஸ்துவ மதம் பற்றிய அவரது கருத்துக்களும் ஆராய்ச்சி பூர்வமான சில புதுமையான முடிவுகளும் அம்மதத்தில் அவர் கொண்டிருந்த ஈடுபாடும் ஆராய்ச்சிப் புலமையும் அங்கிருந்த கிறிஸ்துவ மத குருமார்களையே பிரமிப்பில் ஆழ்த்தி விட்டன.

இவ்விதமாகத் தமது புலமையின் ஆழத்தையும் விஸ்தீரணத்தையும் அதிகரித்துக் கொண்டே போக சுவாமிஜி என்றும் தயாராக இருந்ததன் காரணமாகவே ரொமெய்ன் ரோலண்ட் அன்னாரைப் பற்றி ''அவர் எவ்வளவு கொடுத்தாரோ, அவ்வளவுக்கு ஏற்றுக் கொள்ளவும் செய்தார்'' என்று குறிப்பிட்டார்.



# விலைகள் பெரிதும் குறைக்கப்பட்டிருக்கின்றன!

தேர்தல் பிரசாரப் பிரச்னையா? கவலை வேண்டாம். உங்களிடம் ஒரு 'பெல்ஹேலர்' இருந்தால் பிரச்னையைச் சுலபமாகச் சமாளிக்கலாம். ஒவ்வொரு அபேட்சகரும் வாங்கக்கூடிய விதத்தில், குறைந்த விலையில் இப்பொழுது அது கிடைக்கிறது.

அபேட்சகர்களும், தேர்தல் பிரசாரம் செய்பவர்களும் தங்கள் கொள்கைகளைத் தெளிவாகவும், கணீரென்றும் எடுத்துச் சொல்ல உதவும் கணபமான 'பெல்ஹேலர்' டிரான்ஸிஸ்டர் மெகாபோனின் விலையைப் பெரிதும் குறைத்திருப்பதை பாரத் எலக்ட்ரானிக்ஸ் லிமிடெட் மகிழ்ச்சியுடன் அறிவிக்கின்றனர்.

'பெல்ஹேலர்' கைக்கு அடக்கமானது. அதனுள்ளேயே பொருத்தப்பட்டிருக்கும் ஒவ்வொன்றும் 1.5 வோல்ட்ஸ் சக்தியுள்ள 6 பாட்டரி செல்களின் உதவியால் இயங்குவது. பாட்டரி செல்களையும் சேர்த்து இதனுடைய கனம் மூன்றே கிலோகிராம்தான். தூக்கிச் செல்லலாம். சைக்கிள் அல்லது இதர வாகனங்களில் இணைத்துச் செல்லலாம். உள்ளே அமைந்திருக்கும் மைக்ரோபோனைத் தவிர, வெளியேயும் ஒரு மைக்ரோபோன் அமைக்கப்பட்டிருக்கிறது.

இப்பொழுது ஒரு 'பெல்ஹேல'ரின் விலை ரூ. 275/- தான். வரிகள் பிரத்யேகம். ஒரே சமயத்தில் ஐம்பதுக்கும் அதிகமாக ஆர்டர் செய்பவர்களுக்கு ஒன்று ரூ. 225/- வீதம் சலுகை விலையில் கிடைக்கும்.

உங்கள் கட்சியின் உயரிய கொள்கைகள், திட்டங்கள் ஆகியவற்றை வாக்காளர்களுக்கு 'பெல்ஹேலர்' மூலம் எடுத்துச் சொல்லுங்கள். 200 மீட்டர் தூரத்திலுள்ளவர்கள்கூட உங்கள் குரலை உரக்க, தெளிவாகக் கேட்க முடியும்.

'பெல்ஹேலர்' உபயோகித்து அதிக ஓட்டுகள் பெறுங்கள்.

## BEL பாரத் எலக்ட்ரானிக்ஸ் லிமிடெட்

பதிவு அலுவலகம்: ஜலஹள்ளி, பெங்களூர்-13.





# பேட்டியாளரோடு பேட்டி!

"ஆறுதன கீர்த்தனாரம்பத்திலே பகவானாகப்பட்டவர்....."

ஜகந்நாத பக்த சபையின் ஆதரவிலே, முத்தண்ணா என்று அழைக்கப்படும் வேங்கடாச்சாரியாரின் இல்லத்திலே பிள்ளாக் கட்டை ஒலிக்க, காயனபடு கீர்த்தனபடு ஸ்ரீமதி சரஸ்வதிபாயின் சங்கீத உபன்யாசம் நடைபெற்றுக் கொண்டிருந்தது.

அப்பொழுது உள்ளிருந்து புதிதாகப் பிறந்த குழந்தையின் 'குவா, குவா' சத்தம் வந்தது. கூடியிருந்தவர்கள் எல்லாம் மகிழ்ச்சியில் ஆழ்ந்தனர்; இவான் ரங்காச்சாரியாருக்குப் பேத்தி பிறந்திருக்கிறது; பார்த்தசாரதிக்குப் பெண் பிறந்திருக்கிறது என்று !

இது நடந்தது எந்த வருஷம் என்று கேட்கிறீர்களா? சொல்ல முடியாது; சொல்லிப் பெண்ணின் வயதைக் கணிக்கும் காரியத்தைச் செய்ய முடியாது !

அந்தப் பெண்ணின் பெயரை வேண்டுமானால் சொல்லுகிறேன். அவள்தான் ராஜலக்ஷ்மி. ராஷ்மி என்றும் ஜலக் என்றும் தமது சொந்தப் பெயரையே இரண்டாக வெட்டிப் புனைபெயர் பூண்டு ஆங்கில — தமிழ் நேயர்களை மகிழ்விப்பவர். இயல், இசை, நாடகம் மூன்றும் கலந்த ஹரிகதை நடந்து கொண்டிருந்த நேரத்தில் பிறந்ததனால்தானோ, அல்லது பெண்ணாகப் பிறந்த பெருமையினாலோ, நல்ல கலையார்வமும் ரசிக உள்ளமும் நிரம்பப் பெற்ற இவர் எழுத்துலகிலும் ஒரு சிறந்த இடத்தைப் பெற்றிருக்கிறார். இவரது கல்வி கேள்விகளெல்லாம் திருச்சி மாநகரத்திலே நடைபெற்றது. 'ஜெர்னலிசம்' என்னும் பத்திரிகைத் தொழிலை முறையே பயின்று 'டிப்ளமா' பெற்ற பெண்மணிகளிலே முதன்மையானவர் என்ற சிறப்பையும் இவர் கண்டிருக்கிறார். செய்முறைத் தேர்வுக்கு இவர் 'ஹிந்து' பத்திரிகையின் உதவி பெற்றார். அந்தத் தொடர்பு இவரை 'ஸ்போர்ட் அண்ட் பாஸ்டைம்' பத்திரிகையில் மாதர் பகுதியை எழுத வைத்தது. இங்குதான் ராஜலக்ஷ்மி 'ராஷ்மி'யானது. ஆங்கிலத்தோடு தமிழிலும் எழுதும் ஆர்வம் கொண்ட இவர் 'ஜலக்'காகிப் பல பேட்டிக் கட்டுரைகளும் எழுதியுள்ளார்.

இவரைப் 'பேட்டி' காணக் குறித்த நேரத்தில் போய்க் கதவைத் திறக்கச் செய்து வரவேற்பு அறையில் சென்று நாங்கள் உட்கார்ந்ததுதான் மிச்சம்; அவரைக் காணவில்லை. அதற்குள் அவ்வறையை ஒரு நோட்டம் விட்டால்.....

என்ன கலைத் திறன்! என்ன பொம்மைகள்! என்ன படங்கள்! சோபாக்களும் விரிப்புகளும் போட்டிருந்த முறைதான் எத்தனை அழகு!..... இப்படியெல்லாம் வர்ணித்து, 'போர்' அடிப்பேனோ என்று மலைக்காதீர்கள். வர்ணனை இதோடு சரி.

ஏனெனில், அதோ கார் ஓசை கேட்கிறது! நாங்களே அவருக்குப் பேட்டி கொடுக்கத் தயாராகி விட்டோம்!

"வரணும், வரணும்! உங்களைத்தான் எதிர்பார்த்திருக்கிறோம்!"

"என்னை எதற்கு சார், பேட்டி ? நானும் உங்களைப் போல் ஒரு....."

"..... வரை பேட்டி கண்டு வந்திருக்கிறீர்கள் போலும்! புரிகிறது. அதனால்தான் நேரமாகி விட்டது!" என்று மடக்கி அவரை அமரவும் வைத்து விட்டோம்.

எடுப்பான நாசி, துடிப்பான கண்கள், கண்ணாடிக்குள் இருந்தாலும் துருவித் தேடும் பழக்கமுள்ளவை. நெற்றியில் திலகம், அகன்ற முகத்துக்கேற்றபடி எடுப்பாக. பெயருக்குப் பொருந்துகிறாற் போன்ற லக்ஷ்மிகரம். இவர்தான் 'ராஷ்மி'.

பத்திரிகைத் தொழில் பயின்று 'மெயில்' பத்திரிகைக்கு உதவியாசிரியராகப் பணியாற்றிய காலத்திலே இவர் இல்லற வாழ்க்கையை மேற்கொண்டார்.

அந்த நாட்களில் நுங்கம்பாக்கம்தான் இவருடைய குடியிருப்பு ஸ்தலம். 1957ம் ஆண்டு இவரும், இவரது தோழியர்கள் சிலரும் சேர்ந்து தொடங்கிய மாதர் சங்கம் சமூக சேவையை மேற்கொண்டு சிறப்புப் பணியாற்றலாயிற்று.

நான்கைந்து ஆண்டுகளுக்குப் பின், மூன்று நான்கு வயது நிறைந்த ஆண் குழந்தை ஒன்றுக்குத் தாயானதும் இவர் பெரிய தன்னலக்காரராகி விட்டார்! ஆம், இவரோடு டாக்டர் லக்ஷ்மி சதுர்வேதி என்பவரும் சேர்ந்து கொண்டார். இருவருமாகக் கூடிச் சூழ்ச்சி செய்து தங்கள் நலத்தைச் சாதித்துக் கொள்ள முயன்றனர். காரணம், இவரைப் போலவே, அவருக்கும் ஒரு குழந்தை இருந்ததுதான்.

'இந்த வட்டாரத்தில் நல்ல பள்ளியே இல்லையே! நம் குழந்தைகளின் படிப்பு என்ன ஆவது?' இந்தத் தன்னல நோக்கத்தில் பிறந்தது ஒரு சிறிய பள்ளிக்கூடம்.

தன்னலம் நன்னலமாகிப் பின்னர் பொது நலமாக விரியப் பள்ளிக்கூடமும் பெரிதாக உருப்பெற்றது !

தமது மனைவியின் நினைவாக ஒரு கல்விக் கூடம் திறக்க வேண்டும் என்று எண்ணியிருந்த ஸ்ரீ ஆர். எம். சேஷாத்திரி அவர்களின் பொருளாதார ஒத்துழைப்பும் கிடைக்கவே நுங்கம்பாக்கத்தில் மூன்று அடுக்குக் கட்டடம் ஒன்றை நிறுவினார் ராஜலக்ஷ்மி. ஏராளமான குழந்தைகளுக்குக் கல்வியறிவு புகட்டும் பத்மா சேஷாத்திரி மெட்ரிகுலேஷன் பள்ளியைப் பார்க்கும்பொழுது எந்தப் பெண்மணிக்கும் பெருமைப்படத் தோன்றுமோ?

சுற்று வட்டாரத்தில் பெண் குழந்தைகளுக்கு மெட்ரிகுலேஷன் வரை கல்வி வசதி செய்யும் கான்வெண்டுகளும் பள்ளிகளும் எத்தனையோ உள்ளன. ஆனால் பாரதிய கலாசாரத்தோடு இயைந்து சிறுவர்களுக்குக் கல்வி புகட்டும் ஸ்தாபனங்கள் குறைவு. அதுவும் நுங்கம்பாக்கம் வட்டாரத்தில் என்று கண்ட இவர்கள் இப்படி ஓர் ஆண்கள் உயர்நிலைப் பள்ளிக்கு அஸ்திவாரம் இட்டது காரணமாய் ஆண்களுக்கும் பெருமிதம்தான்.

ஸ்ரீமதி ராஜலக்ஷ்மி பாரத் யுவக் சமாஜத்தின் காரியதரிசியாகப் பணியாற்றியவர். 1962ம் ஆண்டு உலக யுவர் விழாவிலே கலந்து கொள்ள ஃபின்லாந்துக்குச் சென்றவர், உலகத்தின் பல நாடுகளையும் கண்டு வந்தவர்.

இவரது கணவர் நடிப்பு ஆர்வம் மிக்கவர் என்றால், இவர் நாடக வளர்ச்சிக்குப் பாடுபடுபவர். சென்னை நாட்டிய சங்கத்தின் பொறுப்பாளராகப் பணியாற்றி வருவதோடு, நாடகக் கலை தழைக்கப் பயிற்சிப் பள்ளி நடத்துவதிலும் அக்கறை காட்டி வருபவர். வசதியுள்ள குடும்பப் பெண்களோடு பல சமூக சேவைகள் செய்து வரும் இவர் குடிசை வாழ்வோர் நல உரிமைகளிலும் அக்கறை காட்டி வருகிறார்.

இவரது பல நற்பணிகளுக்கும் ஆதார சுருதியெனத் திகழ்வது இவரது எழுத்தார்வமேயாகும். அதிலும் பல பிரமுகர்களைப் பேட்டி காணும் ஆர்வத்தை இவர் வளர்த்துக் கொண்டிருப்பதைக் குறிப்பாகக் கூற வேண்டும்.

பெண்மை என்னும் மென்மை இவரது இயல்போடு ஊறினதாகையால், இவரது பேட்டிகளில் அது செறிந்து துளிர்த்தே நிற்கிறது.

'யஹூதி மெனுஹின்' என்னும் வயலின் வாத்திய வல்லுநரைப் பேட்டி காணப் போன இவர், மெனுஹினின் மனைவியின் பெருமையை எப்படிச் சுவைபடச் சித்திரித்திருக்கிறார், பாருங்கள்!

"யஹூதி மெனுஹினைப் பார்த்தபொழுது எனக்குப் பால் வடியும் பச்சிளம் பாலகனெனத் தோன்றினார். கள்ளங்கபடமில்லாத அவருக்குத் தமது கலையைத் தவிர வேறு எதிலுமே சிந்தனை செல்லவில்லை. அவரது ஆடை — அணிகளையும், உணவு முறைகளையும் அக்கறையோடு கவனித்தவர் அவரது மனைவிதான்."

விண்வெளிப் பயணி ககாரினைச் சந்தித்த பொழுது இவர் கேட்ட கேள்வி, "முதல் பெண்மணி எப்பொழுது விண்வெளிக்குப் பயணம் போவாள்?" என்பதாகும்.

பெண்மையின் தன்மையறிந்த ககாரினின் சாதுர்யமான பதிலையும் தெரிந்து கொள்ள ஆவல் ஏற்படுகிறது அல்லவா? "அதுவா? அது இரும்புத் திரை ரகசியமாயிற்றே! உங்களைப் போன்ற பெண்மணிகளிடம் சொல்லி விட்டால், அப்புறம் அது ரகசியமாகுமா?"

" 'என்னை எதற்கு ஸார் பேட்டி?' என்றீர்களே! உங்கள் ஒருவரைப் பேட்டி கண்டதிலே பல பிரமுகர்களை ஏககாலத்தில் பேட்டி கண்டாற்போல் ஆகிவிட்டதே!" என்று கூறியவாறே எழுந்தோம்.

வாசல் வரை வழியனுப்ப வந்தவர், "நான் ஜவாஹர்லால் நேருவைப் பேட்டி கண்டதைச் சொல்லவில்லையே! எனக்கு அவர் தமது சட்டையில் செருகியிருந்த ரோஜாப் பூவையே எடுத்துக் கொடுத்து விட்டார்! நான் அதை இன்னும் பத்திரமாகப் பாதுகாத்து வருகிறேன்!" என்று பெருமை பொங்கக் கூறினார்.

"பூவின் பெருமை பூவையருக்குத்தான் தெரியும்!" என்று சொல்லாமல் சொல்லி ஒரு புன்னகை பூத்தோம்.

## ஊறுகாய் ராணி

ஆஸ்திரேலியாவில் 55 வயதான ஸ்ரீமதி தாம்ஸன் என்பவர் பழ ஜாம்கள், பழ ஜெல்லிகள் தயாரிப்பதில் அசகாய சூரர் எனப் பெயர் எடுத்திருக்கிறார். சென்ற ஆறு வருஷங்களாக நல்ல தரமானவற்றை, ருசியானவற்றைத் தயாரித்து அவர் 1253 முதல் பரிசுகளும், 347 இரண்டாவது பரிசுகளும் பல போட்டிகளில் பெற்று இத்துறையில் இணையற்றவராகத் திகழ்கிறார். சமீபத்தில் "நான் பரிசுப் போட்டியில் கலந்து கொள்ளப் போவதை இனி விட்டுவிடப் போகிறேன்!" என்று தெரிவித்து விட்டார் இந்த ஊறுகாய் ராணி. இதற்கு இவர் கூறும் காரணம் விசித்திரமானது. இத்தனை பரிசுகளைப் பெற்றுக் குவித்துக் கொண்டிருக்கும் இவர் போட்டிகளில் சந்திப்பது ரோசமும் கஷ்டமான காரியம் என்கிறார்!

இவரது கணவர் பாதைகள் செப்பனிடும் பணியில் ஈடுபட்டுள்ளார். மகன் வீடுகள் கட்டும் வேலையில் இருக்கிறார். தாம் தயாரித்த பல ஊறுகாய்கள், ஜாம்கள் போன்றவற்றை இலவசமாகவே பலருக்குத் தந்துவிடுகிறார் ஸ்ரீமதி தாம்ஸன். ஏனெனில் முதல் பரிசு பெறும் ஊறுகாய்களைத் தவிர வேறு எதையும் அக்குடும்பத்தினர் உண்பதில்லையாம்!

## சிறந்த வழி

உடல் பருக்காமல் இருக்கச் சிறந்த வழி தினந்தோறும் குறைந்தது இரண்டு மைல் தூரமாவது நடப்பதுதான். விமான உபசரணைப் பெண்மணிகள் ஒல்லியாக ஒடிந்து விழுவதுபோல் இருப்பதில் அதிசயம் ஒன்றுமில்லை. அவர்கள் நாள்தோறும் அதிகபட்சம் ஒன்பதரை மைல்கள் நடக்கிறார்கள். குறைந்தபட்சம் இரண்டு மைலாவது நடக்கிறார்கள்.

எங்கே? தெருவிலா, மைதானத்திலா? இல்லை. விமானத்துக்குள்ளேயேதான்!

விமான உபசரணைப் பெண்மணிகள் பிரயாணிகளை உபசரிக்க, அவர்களுக்குத் தேவையானவற்றைக் கவனிக்க விமானத்துக்குள்ளேயே குறுக்கும் நெடுக்குமாக இவ்வளவு தூரம் நடந்து வருகிறார்கள்! அயல் நாடுகளுக்குச் செல்லும் விமானப் பயணங்களில் அவர்களின் நடையின் அளவும் அதிகமாகிறது.

ஒடிந்து விழுவது போல் அவர்கள் அழகுற விளங்கக் கேட்பானேன்?

ஆதாரம்: மாஜிக் கார்பெட், ஏர் இந்தியா வெளியீடு

# தீ அணைத்த தீரர்கள்

**City College Students Put Out Big Blaze**

MADRAS, Dec. 17.

கல்லூரி மாணவர்கள், மாணவியருக்குச் சமூக சேவையில் ஆர்வத்தைத் தோற்றுவிக்க, ஆசிரியர் குழாம் அவர்களை அவ்வப்போது பக்கத்துக் கிராமங்களுக்கும் குப்பங்களுக்கும் அழைத்துப் போய், சுகாதார, மருத்துவ, கல்வித் துறைகளில், சேவை செய்யத் தூண்டுவது தெரிந்த விஷயம். எழுத்தறிவில்லாதவர்களுக்கு ஆரம்பக் கல்வி ஊட்டுவதோ, நோயாளிகளுக்கு மருத்துவ உதவி அளிப்பதோ, கிராமவாசிகளுக்கு ஆகார சுகாதாரத்தைப் பற்றிப் பிரசாரம் செய்வதோ, அவர்களுடைய திட்டத்தில் அடங்கும் விஷயங்களாகும்.

ஆனால் எந்தத் திட்டங்களிலும் அடங்காத ஒரு திடீர்ச் சமூக சேவையைச் செய்து சிறந்த அநுபவத்தைப் பெறும் வாய்ப்பு சமீபத்தில் சென்னை மாநிலக் கல்லூரி தாவர இயல் பிரிவைச் சேர்ந்த மாணவர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் கிடைத்தது! ஒரு குக் கிராமத்திலிருந்த பெண்கள் குழந்தைகள் தீக்கிரையாகாமல் பிழைத்து அவர்களுக்கு நன்றி செலுத்தினார்கள்! தீயை அணைத்த தீரர்கள், எதிர்பாராதவிதமாக அந்தப் பகுதிக்குத் தாவர மாதிரிகள் சேகரிக்கச் சென்றிருந்த மாநிலக் கல்லூரி மாணவர் குழாம்தான்!

அந்தக் குழுவில் பங்கு பெற்றுத் திரும்பிய தாவர இயல் ஆராய்ச்சித் துறை மாணவர் கே. வி. கிருஷ்ணமூர்த்தியைச் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்த போது இந்த அநுபவம் பற்றிப் பல விஷயங்களைத் தெரிந்து கொள்ள முடிந்தது.

திரு கிருஷ்ணமூர்த்தி எம். எஸ்ஸி (தாவர இயல்) பரீட்சையில் மாகாணத்திலேயே முதலாவதாகத் தேறித் தங்கப் பதக்கம் பெற்றவர். தம் கல்லூரியில் சிறந்த தாவர சேகரிப்பாளர் (Plant Collection) என்பதினால் முதல் பரிசும் பெற்றவர். தாவர இயலில் டாக்டர் பட்டம் பெற இப்போது மாநிலக் கல்லூரியில் ஆராய்ச்சித் துறையில் ஈடுபட்டிருக்கிறார்.

* * *

"நாங்கள் அடிக்கடி சில அபூர்வத் தாவரங்களைத் தேடிச் சேகரிக்க அவ்வப்போது வெளியூர் போய் வருவோம். சமீபத்தில் ஆந்திரப் பிரதேசத்தில் காளஹஸ்திக்கும் திருப்பதிக்கும் இடையே உள்ள குன்றுப் பிரதேசம் நோக்கிக் கிளம்பினோம். மாணவர்கள் மாணவியர்கள், ஆசிரியர்கள் எல்லோருமாக ஒரு பஸ்ஸை ஏற்பாடு செய்து கொண்டோம்.

வரதைய பாளையம் என்ற ஊருக்கு மூன்றாவது மைலில் விலகி அந்தக் குன்றுகளை நோக்கிப் போக வேண்டும். சென்ற தடவை இந்தப் பகுதிக்கு நாங்கள் வந்திருந்த போது குன்றின் அடிவாரம் வரை காரிலேயே போக முடிந்தது. ஆனால் இந்தத் தடவை சமீபத்தில் விளைந்த புயல் சேதங்களினால் பாதை சீராக இல்லை. ஆகவே, நாங்கள் இறங்கி நடக்க ஆரம்பித்தோம்.

கொஞ்ச தூரம் சென்றதும் அடர்த்தியான புகை மண்டலம் தெரிந்தது. அத்துடன் மனிதக் கூக்குரலும் கேட்டது. எங்கள் நடையின் வேகம் அதிகமாயிற்று.

குன்றின் அடிவாரத்தில் பத்துப் பதினைந்து குடிசைகள் இருந்தன. ஒரு குடிசையில் தீ படர்ந்து கொழுந்து விட்டெரிந்து கொண்டிருந்தது. காற்றும் வேகமாக அடித்துக் கொண்டிருந்தது. எரியும் குடிசையின் தீ, அந்தக் காற்றின் வேகத்தில் மற்றக் குடிசை

களுக்கும் எந்த விநாடியிலும் பரவிக் கபளீகரம் செய்யலாம் என்ற நிலை. அங்கு ஆண் வாடையே இல்லை. ஆண் பிள்ளைகள் எல்லாம் வயல்வெளிகளுக்கு வேலை செய்யப் போயிருந்தார்கள். குடிசைகளிலிருந்த பெண்களும் குழந்தைகளும் என்ன செய்வதென்று தெரியாமல் 'குய்யோ முறையோ' என்று அலறிக் கொண்டிருந்தார்கள்.

அவ்வளவுதான்; எங்களுக்கு எப்படித்தான் அத்தனை ஆவேசம் வந்ததோ தெரியாது. மடமடவென்று தீயணைக்கும் பணியில் ஈடுபட்டோம். நல்ல வேளையாக, மழை ஜலம் தேங்கியிருந்த பள்ளம் ஒன்று பக்கத்தில் உதவியாக இருந்தது.

எங்கள் குழுவிலிருந்த அலி என்ற மாணவர், ஆபத்தைக் கொஞ்சம்கூடப் பொருட்படுத்தாமல் எரிந்து கொண்டிருக்கும் குடிசைக்குள் நுழைந்து விட்டார். உள்ளிருந்த பொருள்களை முடிந்த அளவு காப்பாற்ற ஆரம்பித்தார். அவர் காட்டிய வீரம் மற்றவர்கள் ,மனத்திலும் தைரியத்தைத் தோற்றுவித்தது. மாணவியர்கள் உள்பட அத்தனை பேரும் எப்படியோ முயன்று தீயை அணைத்தோம். மற்றக் குடிசைகளும் தெய்வாதீனமாகத் தப்பின. ஒரு மாணவி மூர்ச்சையாகி விட்டாள்.

அந்த நேரத்தில் எங்கள் பாண்டு சட்டைகள் போன அலங்கோலத்தை நீங்கள் பார்த்திருக்க வேண்டும்! ஊர் திரும்பிய பிறகு என் பாண்டை, லாண்டரிக்காரர் சலவைக்கு ஏற்றுக் கொள்ள மறுத்து விட்டார் !

பயத்தினாலும் பீதியினாலும் நடுங்கிக் கொண்டிருந்த அந்தக் குடிசைவாசிகளுக்கு நாங்கள் தயாரித்துக் கொண்டு போயிருந்த உணவுப் பொட்டலங்களைக் கொடுத்து உதவி விட்டு நாங்கள் உபவாசமிருக்கத் தயாரானோம்.

ஆனால் அந்தக் குடிசைவாழ் ஆண்பிள்ளைகளின் உதவியை அன்று மாலையே நாங்கள் எதிர்பார்க்கும்படி நேர்ந்தது. நாங்கள் பிரயாணம் செய்த பஸ்ஸின் டிரைவர், பஸ்ஸை, மீண்டும் பாதையில் திருப்பி நிறுத்த முயன்ற போது பஸ்ஸின் சக்கரங்கள் களிமண் சகதியில் மாட்டிக் கொண்டு விட்டன. அத்தனை பேர் முயற்சி செய்தும் அந்தப் பஸ் பிடிவாதமாக ஓர் அங்குலம்கூட நகர மாட்டேன் என்று சத்தியாக்கிரகம் செய்து விட்டது. அப்புறம் வரதைய பாளையம் போய் வேறு ஒரு பஸ்ஸை ஏற்பாடு செய்து, முதல் நாள் இரவு எட்டு மணிக்கு ஊர் திரும்ப வேண்டியவர்கள் மறு நாள் காலை நான்கு மணிக்கு வந்து சேர்ந்தோம்.

எங்களுடைய இத்தகைய பிரயாணங்களெல்லாம் ஏதோ உல்லாசப் பிரயாணங்கள் என்று நினைத்து விடாதீர்கள். முதலாவதாக நாங்கள் டிரான்ஸிஸ்டர் செட்டுகளைக் கொண்டு போகக் கூடாது. காமிராக்கள் கொண்டு போனாலும் அவைகளைச் சிநேகித சிநேகிதைகள் பக்கம் 'ஃபோகஸ்' பண்ணக் கூடாது. செடி கொடிகளைத்தான் படம் எடுக்கலாம். கொட்டும் மழையாக இருந்தால்கூட, செடிகளைச் சேகரிக்கும் போது நாங்கள் மழைக் கோட்டுகளை அணிய மாட்டோம்.

பி. எஸ்ஸி. மாணவர்கள் சாதாரணமாகத் தங்கள் தாவர பாட சம்பந்தமாக நாகரிகம் மிகுந்த உதகமண்டலம், கொடைக்கானல் பக்கம் போய்த் திரும்புவார்கள். ஆனால் ஆராய்ச்சியில் ஈடுபட்டிருக்கும் என் போன்ற மாணவர்கள் சற்றுக் கடுமையான பிரயாணங்களையேதான் அபூர்வத் தாவரங்களைத் தேடி மேற்கொள்கிறோம்.

ஒரு சந்தர்ப்பத்தில் கொடையார் அணைப் பிராந்தியக் காடுகளில் நடந்து கொண்டிருக்கும்போது, எங்கள் குழுவிலிருந்த மாணவி ஒருத்தி ஒரு குளவிக் கூட்டைக் கவனியாமல் மிதித்து விட்டாள். அவ்வளவுதான் ! நூற்றுக்கணக்கான குளவிகள் வெளியே பறந்து விமானப் படையெடுப்பு போல் எங்களைத் தாக்கின. இரண்டு மூன்று மாணவிகளின் முகங்கள் பூரேயபடியாக வீங்கி விட்டன. மாணவர்கள் எல்லாம், கையில் அகப்பட்ட மரக் கிளை, குழைகளை வைத்து அந்தக் குளவிக் கூட்டத்தை விரட்ட ஓர் ஆப்பிரிக்க சுதேசி நடனமே ஆடிவிட்டார்கள்!

* * *

இளைஞர் கிருஷ்ணமூர்த்தி தாவர இயலில் 'டெவலப்மெண்டல் மார்பாலஜி' ( Developmental Morphology ) என்னும் பிரிவைத் தம் ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொண்டிருக்கிறார். தாவர இயல்தான் மனித வாழ்க்கைக்கே ஆதாரம் என்கிறார். விவசாயத் துறை, தாவர இயலின் ஒரு கிளைதான் என்றும், தம்முடைய ஆராய்ச்சி, உணவு உற்பத்திப் பெருக்கத்துக்கு உதவினால்தான் பெருமையடையலாம் என்றும் சொல்கிறார். ஆராய்ச்சிக் கட்டுரையை எழுதிச் சமர்ப்பித்து டாக்டர் பட்டம் வாங்கினால், தம் அநுபவம் வீண் போகாமல், மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்ளும் பேராசிரியராகவே வருவார் என்றுதான் தோன்றுகிறது.-**கோமதி ஸ்வாமிநாதன்**

## நம்பிக்கையின் ........................ உறைவிடம் !

ஜெர்மன் படைத் தலைவரான ரோம்மல் ஒரு சமயம் பாரிஸ் நகரில் இருந்தார். அப்போது அவருக்குத் திடீரெனப் பணமுடை ஏற்பட்டு நிறையப் பணம் தேவைப்பட்டது. பக்கத்திலிருந்த பாங்கு ஒன்றில் கேட்டதற்கு அவர்கள், வேண்டிய பணத்தை ரோம்மலுக்குக் கொடுத்தார்கள். 'ஜாமீன் ஒன்றுமில்லாமல் பணம் கொடுத்திருக்கிறீர்களே' என்று கேட்டார் ரோம்மல். அதற்குப் பாங்கி அதிகாரிகள், 'உங்கள் கைக்கு எது வந்தாலும் திருப்பிக் கொடுத்து விடுவீர்கள் என்ற பூரண நம்பிக்கை எங்களுக்கு இருக்கிறது; நீங்கள் வட ஆப்பிரிக்காவில் முதலில் பிடித்த இடங்களையெல்லாம் திருப்பிக் கொடுத்து விடவில்லையா?' என்று காரணத்தோடு விளக்கினார்கள்.

ஆதாரம்: 'நாடோடியின் ஒரு நாள்'

நகல்: ''என்.பி.எம்.''

# மந்திரத் துண்டு

✿ பேனாவுக்கு இங்க் போட்டு விரல் கறையாகி விட்டதா? இந்தத் துண்டை எடுத்து ஒரு முறை துடைத்தால் போதும், விரல் சுத்தமாகி விடும். அதே போல் எண்ணெய்ப் பிசுக்கும் மற்றக் கறைகளும் ஒரு தடவை துடைத்ததுமே மாயமாய் மறைந்து விடுகின்றன.

கை துடைத்துக் கொள்ள இந்த மாதிரி ஒரு துண்டைக் கண்டு பிடித்திருக்கிறார்கள் பிரிட்டனிலே! சாதாரணப் பருத்தித் துணி தான். அதனை ஒரு ரகசியமான ரசாயனக் கலவையில் தோய்த்தெடுக்கிறார்கள். அவ்வளவுதான், உடனே அது இந்த மாய சக்தியைப் பெற்று விடுகிறது!

இந்த ரசாயனக் கலவை நறுமணம் கமழுகிற மாதிரியும் கவனித்துக் கொண்டிருக்கிறார்கள். துண்டை அதற்குரிய பிளாஸ்டிக் உறையில் போட்டுப் பத்திரமாக வைத்திருந்தால் இரண்டு மாதங்கள் வரை தாராளமாகப் பயன்படுத்தலாம், திரும்பத் திரும்ப.

## பறக்கும் சினிமா

✿ பறக்கும் சினிமா பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறீர்களா? ஏர் இந்தியா விமானங்களில் நீண்ட தூரப் பிரயாணிகள் பொழுதுபோகாமல் அலுத்துச் சலித்துக் கொள்ள வேண்டியதில்லை. விமானத்திலேயே சினிமாக் காட்டுகிறார்கள்! அவரவர் தங்கள் தங்கள் ஆசனத்தில் அமர்ந்தபடியே உயரே உள்ள திரையில் ஓடும் படத்தைப் பார்க்கலாம். பார்ப்பது சரி; கேட்பது எப்படி?

டாக்டருடைய ஸ்டெதாஸ்கோப்பு போன்ற ஒரு கருவியைத் தருகிறார்கள். அதைக் காதில் பொருத்திக் கொண்டால் சினிமாவைப் பார்ப்பதுடன் அதன் இசை, வசனங்களைக் கேட்கவும் செய்யலாம். சினிமாப் பார்க்க விரும்பாதவர்கள் நிம்மதியாகத் தூங்கலாம். இந்தக் கருவியைக் காதில் பொருத்திக் கொள்ளாத வரை சினிமாச் சத்தம் அவர்களைத் துயிலெழுப்பி விடாது!

## அதிசய சாதனம்

✿ விமான நிலையங்களில், கட்டடத்திலிருந்து பிரயாணிகள் நடந்து சென்று விமானத்துக்குள் ஏறிக் கொள்வதைப் பார்க்கிறோம். சில பெரிய விமான நிலையங்களில் மழை பெய்தால் கட்டடத்தின் பின் வாயிலிருந்து விமானம் நிற்கும் இடம் வரை பஸ்ஸில் பிரயாணிகளை ஏற்றிச் செல்ல வசதி உள்ளது. இருந்தாலும் மழை பெய்கையில் சற்றேனும் நனையாமல் இருக்க முடியாது.

ஆனால் இப்போது மேற்கு ஜெர்மனியைச் சேர்ந்த ஃபிராங்பர்ட் நகர விமான நிலையத்தில் ஒரு புதிய அமைப்பு உருவாகியிருக்கிறது. பிரயாணிகள் தங்கும் அறை போல் காட்சி தரும் இது, விமானம் கிளம்பத் தயாரானதும் விமான நிலையக் கட்டடத்திலிருந்து புறப்பட்டு விமானத்தை நோக்கி நீளுகிறது. விமானத்தின் கதவுடன் ஒன்றி ஒட்டி நிற்கிறது. பிரயாணிகள் அப்படியே விமானத்தினுள் அடியெடுத்து வைத்து விடலாம்!

விமானத்தை நோக்கி நீளுவதுடன் விமானம் நிற்கும் திசைக்கு ஏற்ப இடது புறமும் வலது புறமும் நகர்ந்து இடம் மாறக் கூடிய அமைப்பாகவும் இது விளங்குகிறது.



விமானத்துக்கு இட்டுச் செல்லும் அதிசய சாதனம்

## மோட்டாருக்கு எண்ணெய் ஊற்றுதே!

✿ ஆமாம், அடிக்கடி பெட்ரோல் பங்கில் போய் நின்று காருக்கு 'ஆயில் செக்' பண்ணிக் கொண்டிருக்க வேண்டாம். அவ்வப்போது பயன்படுத்திக் கொள்ள வசதியாகக் காலையிலேயே கார்ப்பொரேஷன் குழாயடியில் கங்காளத்தை வைத்து நீர் நிரப்பிக் கொள்வதில்லையா? அது போல் காரின் இஞ்சினுக்கு அருகில் ஓர் அமைப்பில் ஒன்றே கால் காலன் எண்ணெயை ஒரே தடவையில் நிரப்பிவிடலாம். பிறகு இஞ்சினில் எண்ணெய் குறையும் போதெல்லாம் தானாகவே இந்த அமைப்பிலிருந்து தேவையான அளவுக்கு எண்ணெய் இஞ்சினுக்குச் செல்கிறது.

இஞ்சின் இயங்கிக் கொண்டிருக்கும் போது அதற்கு எண்ணெய் பாய்வதில்லை. இயக்கம் நின்று சூடு தணிந்த பிறகு தானாகவே தேவையான அளவுக்குக் கச்சிதமாகப் பாய்கிறது. பிறகு ஓர் அடைப்பான் தானாகவே மூடிக் கொண்டு எண்ணெயின் ஓட்டத்தைத் தடுத்து விடுகிறது!

இத்தகைய ஒரு நூதன அமைப்பையும் சமீபத்தில் பிரிட்டனில் கண்டு பிடித்து மோட்டாரோட்டிகளுக்கு உதவியுள்ளார்கள்.




இந்தப் பொங்கல் திருநாளன்று
ஒவ்வொருவர் மகிழ்ச்சியும் பொங்கி வழியட்டும்.
அப்பொழுது நீடித்து உழைக்கும் அழகு ஆடைகளை
எப்பொழுதும் திறமையுடன் நெய்து கொடுக்கும்
நெசவாளர்களை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்.
உங்கள் பணத்திற்கான முழு மதிப்பையும்
கோ-ஆப்டெக்ஸ் துணிகள் இப்பொழுதும்,
எப்பொழுதும் அளிக்கும்.

# கோ-ஆப்டெக்ஸ்

## கைத்தறி துணிகள்

தமிழ்நாடு கைத்தறி நெசவாளர் கூட்டுறவு சங்கம் லிட்.,
34/1-A, பாந்தியன் ரோடு, எழும்பூர், சென்னை-8.

ELEGANT



# கல்லுக்குள் ஈரம்

ர.சு.நல்லபெருமாள்



## முதல் அத்தியாயம்

## பயணம்

**கா**லையில் எட்டு மணிக்கு முக்கி முனகிக் கொண்டு ஒரு நீண்ட பெருமூச்சுடன் மதுரை ஜங்ஷனில் வந்து நின்றது, ரயில் வண்டி. சென்னையிலிருந்து இரண்டு நாட்களுக்கு முந்தியே புறப்பட்ட அந்த வண்டி, பயங்கரவாதிகளை எண்ணிப் பயந்து கொண்டே பல இடங்களில் நின்றுநின்று ஒருவாறு மதுரைக்கு வந்து சேர்ந்து விட்டது. வண்டி நின்றதும், நெல்லிக்காய் மூட்டை அவிழ்ந்தது மாதிரி பிரயாணிகள், வெளியே உதிர்ந்தனர். பாவம், இரண்டு நாட்களுக்கு முந்தியே சென்னையிலிருந்து புறப்பட்டவர்கள்; துணைக்குப் பீதியையும் கூட வைத்துக் கொண்டே வந்திருக்கிறார்கள். மதுரை வந்த பிறகுதான் எல்லோருக்குமே நிம்மதியாக மூச்சுவிட முடிந்தது.

வண்டியிலோ அளவுக்கு மீறிய கூட்டம். புளி மாதிரி மக்கள் அடைந்திருந்தனர். எந்த நேரத்தில் எந்தப் பாலத்தில் வெடி வெடிக்குமோ, ரயில் கவிழுமோ என்ற பீதியில் அனைவரும் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு இரண்டு நாட்களாகத் தூங்காமல் பயணம் செய்திருக்கிறார்கள். அத்தனை பேர் முகத்திலும் அலுப்பின் சாயல் படிந்திருந்தது. பாரத்தின் அழுத்தத்திலால் எல்லோருடைய முகங்களும் சோம்பிக் கிடந்தன. அவ்வளவு நெருக்கடியிலிருந்து விடுபட்டவுடன் ஏற்பட்ட உற்சாகத்தில் பிரயாணிகள் மதுரைப் பிளாட்பாரத்தில் அங்கும் இங்கும் திரியத் தொடங்கினார்கள்.

அவ்வளவு பரபரப்பிலும் கொஞ்சம் கூட அதிர்ச்சி யில்லாமல் சலனமற்றுக் கூட்டத்தை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான் ரங்கமணி. அவனுடைய பார்வையில் அலட்சியம் தாண்டவமாடியது. மக்கள் கூட்டம் கால்நடைக் கூட்டம் தான் என்பது அவன் எண்ணம் போலும்! யாரைப் பற்றியும் அக்கறை கொள்ளாமல் வண்டியில் அவன் உட்கார்ந்திருந்தான்.

அவனுக்கு வயது இருபத்திரண்டு அல்லது இருபத்தி மூன்று இருக்கும். நல்ல எடுப்பான முகம். யாரையும் உடனே கவர்ந்துவிடும் கம்பீரம். ஓர் அலட்சியப் பார்வை. — மொத்தத்தில் அந்த வண்டிக்குள் இருந்தவர்கள் அனைவரின் கவனத்தையும் கவர்ந்தான் அவன்.

''தம்பி, இதோ வடையும் காப்பியும் வாங்கி வந்து விட்டேன்'' என்ற குரலைக் கேட்டுத் திரும்பி

னான். ஜன்னல் வழியாக வடைப் பொட்டலத்தையும் காப்பித் தம்ளரையும் நீட்டிக் கொண்டிருந்தார், சங்கரராம தீக்ஷிதர்.

''ஏன் இவ்வளவு சங்கடம்? இந்தக் கூட்டத்தில் எப்படி நுழைந்து வாங்கினீர்கள்?'' என்று கேட்டுக் கொண்டே வடையையும் காப்பியையும் வாங்கிப் பக்கத்தில் வைத்துக் கொண்டான். தீக்ஷிதர் வண்டிக்குள் ஏறி அவன் பக்கத்தில் உட்கார்ந்தார்.

சங்கரராம தீக்ஷிதருக்கு வயது ஐம்பதுக்கு மேல் இருக்கும். தலையில் வழுக்கை விழுந்து அவர் வயதை இன்னும் அதிகமாகக் காட்டியது. வைதிகருக்குள்ள கோலம் அவரிடமில்லை. கதர் வேஷ்டியைச் சுற்றித்தான் கட்டியிருந்தாரே தவிர, பஞ்சகச்சம் வைத்துக் கட்டவில்லை. இடுப்புக்கு மேல் ஒரு பெரிய கதர்த் துண்டைச் சுற்றி மூடியிருந்தார். மார்பில் பூணூல்கூட இல்லை! வாயில் அமர்க்களமாகத் தாம்பூலம் பிரகாசித்தது.

''இரவு நல்ல தூக்கம்போல் இருக்கிறது'' என்றான் ரங்கமணி வடையைச் சாப்பிட்டுக் கொண்டே.

''ஆமாம்! பெஞ்சுக்கு அடியில் படுத்துக் கொண்டேன். நீகூட உட்கார்ந்துகொண்டே நன்றாகத் தூங்கினாயே'' என்றார் தீக்ஷிதர். பிறகு இடுப்பிலிருந்து பொடிமட்டையை எடுத்துத் தட்டிப் பிரித்து, ஒரு சிட்டிகைப் பொடியை விரல்களுக்கு இடையில் வைத்துக் கொண்டு மீண்டும் பேச்சைத் தொடங்கினார்.

''திண்டுக்கல் பக்கத்தில் வண்டி நின்றது. ஏதோ ஒரு பாலத்தைச் சோதனை செய்த பிறகு வண்டி புறப்பட்டது'' என்றார்.

இதற்குள் ஒரு சாண் வயிற்றைத் திருப்திப்படுத்துவதற்காக முண்டியடித்துக் கொண்டு கீழே இறங்கியிருந்தவர்கள் மீண்டும் வண்டிக்குள் அடையத் தொடங்கினார்கள். ரங்கமணி காப்பியைக் குடித்துவிட்டு, காண்டீன் சர்வரிடம் தம்ளரை ஒப்படைத்து விட்டு வண்டிக்குள் பார்வையைச் செலுத்தினான்.

''பாவம், இந்த ஜனங்கள் இரண்டு நாட்களாகத் தூங்கவேயில்லை'' என்றார் தீக்ஷிதர் பரிதாபத்துடன்.

''உயிர்மீது அவ்வளவு ஆசை'' என்று கூறிச் சிரித்தான் ரங்கமணி.

''யாருக்குத்தான் சார் உயிர்மீது ஆசை கிடையாது? என்னவோ சுதந்திரத்தை உடனே கையில் பிடுங்கிக் கொள்வது போலத்தான் பேசுகிறீர்கள். இப்படிப் பாலத்தையும் தண்டவாளத்தையும் பெயர்த்து விட்டால் வெள்ளைக்காரன் ஓடிவிடுவான் என்ற நினைப்பு. சுத்தப் பைத்தியங்கள்'' என்றார், பக்கத்திலிருந்த ஒரு மீசைக்காரர். ரங்கமணி அவரை உற்றுப் பார்த்தான். ஆனால் ஒன்றும் பேசவில்லை.

''ஆளப் பிறந்தவன் வெள்ளைக்காரன்தான் சார். நமக்கு என்ன சார் தெரியும்?'' என்றார் ஒரு தொந்தி ஆசாமி. நன்றாகக் கருத்த கொழுத்த மேனி. பணப் பசையுள்ள வியாபாரி என்று அவருடைய உருவமே பறைசாற்றிக் கொண்டிருந்தது. அவர் சொன்னதைக் கேட்டதும் ரங்கமணியின் கண்கள் கோபத்தால் சிவந்தன.

''உமக்குத் இனிதான் தெரியும்'' என்றான் அமைதியாக. உள்ளே கிளர்ந்த கோபத்தை வார்த்தையில் கொட்டிவிட்டான். தொந்தி ஆசாமிக்குக் கோபம் வந்துவிட்டது.

''என்ன தம்பி, வாய் நீளுகிறது?'' என்றார்.

''கை நீளவில்லையே இன்னும். அந்த மட்டுக்கும் உமக்கு யோகம்தான்'' என்றான் ரங்கமணி. தொந்திக்காரருக்கு ஆத்திரம் பொங்கியது.

''அடிப்பாயோ? எங்கே அடி பார்க்கலாம்'' என்று குதித்தார்.

''வெள்ளைக்காரன் கையில் அடிபட்டால்தான் உமக்கு இனிக்குமா?'' என்றான் ரங்கமணி. இதற்குள் தீக்ஷிதர் பொடியை உறிஞ்சிவிட்டுச் சண்டையில் குறுக்கிட்டு விலக்கினார்.

''என்ன தம்பி, சண்டையை வலுவில் இழுக்கிறாயே, சும்மா இரு'' என்றார் தீக்ஷிதர். தொந்திக்காரரோ ஆவேசத்தில் குதித்தார். ''பேச்சை நிறுத்துங்கள். வளர்த்துவானேன்?'' என்று தொந்திக்காரரைப் பார்த்துச் சொன்னார் தீக்ஷிதர்.

''பின்னே என்ன சார்? பொடிப் பயல் பேச்சைப் பாருங்களேன்'' என்று கூறிவிட்டு ரங்கமணியைப் பார்த்து, ''உன்னுடைய வாலை இங்கே ஆட்டாதே'' என்று உறுமினார். அவருடைய பருத்த உடல் கோபத்தைத் தாங்க மாட்டாமல் குலுங்கியது பார்க்க வேடிக்கையாக இருந்தது. தீக்ஷிதர் குறுக்கிட்டு அமைதியை உண்டாக்கினார்.

ரங்கமணியின் ஜாதகமே அப்படி. எதையும் ஒளிவு மறைவு இல்லாமல் பேசிவிடுவான், செய்து விடுவான். பயமே அறியாமல் வளர்ந்து விட்ட தோஷம்தான். எத்தனையோ பேருடைய கோபத்தைச் சம்பாதித்திருக்கிறான். இந்தியாவில் முக்கால்வாசிப்பேருக்கு மேல் எருமைகளாகத்தான் இருக்கிறார்கள் என்பது அவன் அபிப்பிராயம். இந்த எருமைக் கூட்டத்தை அடித்து அடித்துத்தான் ஓட்டிச் செல்ல வேண்டும் என்ற முடிவுக்கு வந்தவன். தொந்தி ஆசாமி அம்மாதிரி எருமைகளில் ஒன்று என்ற கோபத்தில்தான் சாடிவிட்டான்.

ரங்கமணி மனத்துக்குள் புழுங்கினான். ''இந்தியாவில் இப்படியும் மனிதர்கள் இருக்கிறார்களே! அட பாரத நாடே, உன் தலையெழுத்து இப்படியா இருக்க வேண்டும்?'' என்று முனகிக் கொண்டான்.

பிளாட்பாரத்தில் ஏதோ பரபரப்பு ஏற்பட்டது. வண்டிக்குள்ளிருந்து அனைவரும் ஜன்னல் வழியாகத் தலையை வெளியே நீட்டினார்கள். பிளாட்பாரத்தில் போலீஸ்காரர்களின் நடமாட்டம் அதிகமாக இருந்தது. என்ஜின் பக்கத்தில் ஏதோ குழப்பம் ஏற்பட்டது. திடீரென்று கூட்டத்தில் ''வந்தேமாதரம்'' என்ற கோஷம் கிளம்பியது. இந்த மந்திர ஒலியைக் கேட்டதும் ரங்கமணி துள்ளி எழுந்தான். பரபரப்புடன் வண்டியிலிருந்து கீழே இறங்கி நின்று கவனித்தான். தீக்ஷிதரும் வண்டியிலிருந்து இறங்கி விட்டார். என்ஜினுக்குப் பக்கத்திலிருந்த கூட்டத்தினரிடையே இரைச்சல் கிளம்பியது. இடையிடையே 'வந்தேமாதரம், மகாத்மா காந்திக்கு...ஜே' என்ற கோஷங்

களும் கிளம்பிக் கொண்டிருந்தன. என்ஜின் மீது ஏறி, அதன் முன் பக்கத்தில் ஒரு மூவர்ணக் கொடியைக் கட்டிக் கொண்டிருந்தாள் ஓர் இளம் பெண். அவளுக்கு வயது இருபதுக்குள் இருக்கும். நல்ல அழகு, கனிவான பார்வை. ஆனால் இதயம் இரும்பாலானதாயிருக்க வேண்டும். இல்லையென்றால் அவ்வளவு துணிச்சலுடன் ரயில் என்ஜினில் ஏறி மூவர்ணக் கொடியைக் கட்டுவாளா?

கொடியைக் கட்டிவிட்டு என்ஜினிலிருந்து பிளாட்பாரத்தில் குதித்தாள் அந்தப் பெண். அவளுடைய பிறை நெற்றியில் வியர்வைத் துளிகள் முத்து முத்தாக நின்றன. ஒரு பெரிய காரியத்தைச் சாதித்து விட்ட திருப்தி அவள் வதனத்தில் மலர்ந்தது. திடீரென்று ஒரு போலீஸ்காரர் அந்தக் கொடியைப் பிடுங்கி எறிவதற்காக என்ஜின் மீது ஏற முயன்றார். ஆனால் அந்தப் பெண் குறுக்கே நின்று அதைத் தடுத்தாள்.

''கொடி கட்டித்தான் வண்டி போகவேண்டும்'' என்றாள் அவள் தீர்மானமாக.

''அப்படியானால் வண்டி ஓர் அங்குலம்கூட நகராது'' என்றார் பக்கத்தில் நின்ற போலீஸ் அதிகாரி.

''அதைப் பற்றிக் கவலையில்லை. இந்த வண்டி நகர வேண்டுமானால் கொடியோடுதான் நகர வேண்டும்'' என்றாள் அவள்.

இந்தச் சமயத்தில் 'வந்தேமாதரம்' என்ற கோஷம் வானைப் பிளந்தது. போலீஸ் அதிகாரியின் கண்கள் சிவந்தன.

''கொடியைப் பிடுங்கி எறியுங்கள்'' என்று அவர் உத்தரவிட்டார். நாலைந்து போலீஸ்காரர்கள் என்ஜின் மீது ஏறிக் கொடியைப் பிடுங்கித் தூர எறிந்தார்கள். அந்தப் பெண் கீழே விழுந்த கொடியை எடுத்துக் கொண்டு என்ஜினுக்கு முன்னால் தண்டவாளத்தில் போய் உட்கார்ந்து கொண்டாள். உடனே கூட்டத்திலிருந்த வேறு சிலரும் அவளோடு தண்டவாளத்தில் போய் உட்கார்ந்து கொண்டார்கள்.

''கொடி இல்லாமல் வண்டியை ஓர் அங்குலம்கூட நகர விட மாட்டோம்'' என்றாள் அந்தப் பெண். போலீஸ் அதிகாரியின் மீசை துடித்தது.

''இந்த நாய்களை இழுத்துத் தூரத் தள்ளுங்கள்'' என்று கர்ஜித்தார். நாலைந்து போலீஸ்காரர்கள் அந்தச் சத்தியாக்கிரகிகளை நெருங்கினார்கள்.

அவ்வளவு நேரமும் மௌனமாக நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த ரங்கமணி, திடீரென்று பாய்ந்து சென்று வழி மறித்தான். ''அவர்களைத் தொடக்கூடாது'' என்று உறுமினான். மக்கள் ஆரவாரம் செய்தார்கள். போலீஸ்காரர்கள் செய்வதறியாது திகைத்தார்கள். போலீஸ் அதிகாரிக்குக் கோபம் தலைக்கு ஏறியது.

''இவனை அடித்துத் தள்ளிவிட்டு, தண்டவாளத்தில் இருப்பவர்களை இழுத்துத் தள்ளுங்கள்'' என்று கர்ஜித்தார். ''தண்டவாளத்தில் இருப்பவர்களைப் போல் சத்தியாக்கிரகம் செய்ய நான் வரவில்லை. ஆனால், அந்தத் தொண்டர்களைத் தீண்டினால் தீண்டிய கைகளை முறித்து விடுவேன்'' என்று சீறினான் ரங்கமணி. மக்களுக்கு வெறி கிளம்பிவிட்டது. ரங்கமணியை உற்சாகப் படுத்தினார்கள். 'வந்தே மாதரம்' கோஷம் தொடர்ந்து கேட்டது. போலீஸ் அதிகாரிக்கு நிலைமை விளங்கி விட்டது. ஜனக் கூட்டம் எந்தச் சமயத்திலும் போலீஸைத் தாக்கும் சூழ்நிலையை ரங்கமணி உண்டாக்கி விட்டான் என்பதை உணர்ந்து கொண்டார். மெதுவாக ரங்கமணியிடம் வந்தார். ''சார்! நீங்கள் இப்படிப் பிடிவாதம் செய்தால் வண்டி மதுரையிலேயே நின்றுவிடும். உங்களால் அத்தனை பிரயாணிகளும் சங்கடப்பட வேண்டும்'' என்றார்.

''இந்தக் கொடிக்காகக் கொஞ்சம் சங்கடப்படட்டுமே?'' என்றான் ரங்கமணி. போலீஸ் அதிகாரி செய்வதறியாமல் திகைத்தார். அந்தச் சமயத்தில் கூட்டத்தை விலக்கிக் கொண்டு ஸ்டேஷன்மாஸ்டர் வேகமாக வந்து போலீஸ் அதிகாரியின் காதில் ஏதோ சொன்னார். உடனே போலீஸ் அதிகாரியின் முகத்தில் ஏமாற்றத்தின் சாயல் படிந்தது. பிறகு அவரும் ஸ்டேஷன் மாஸ்டரும் அங்கிருந்து விலகிச் சென்றார்கள்.

இதைக் கண்டதும் தண்டவாளத்தில் உட்கார்ந்திருந்த அந்தப் பெண், மீண்டும் கொடியைக் கட்ட என்ஜின் மீது ஏறினாள். அதே சமயம் ரங்கமணியும் என்ஜின் மீது ஏறினான். இருவருமாகச் சேர்ந்து கொடியைக் கட்டினார்கள். கட்டி முடித்து விட்டுத் தலை நிமிர்ந்தபோது இருவரின் கண்களும் சந்தித்தன.

''ரொம்ப நன்றி'' என்றாள் அந்தப் பெண்.

''நன்றி தெரிவிப்பதற்கு என்ன இருக்கிறது? விடுதலைக்கு உழைப்பதென்றால் இந்த உருப்படாத வேலையைவிட வேறு எவ்வளவோ நல்ல வேலைகள் இருக்கின்றன'' என்று மெதுவாக அவள் காதில் விழுமாறு கூறினான் ரங்கமணி. அவள் பிரமித்துப் போய் அவ

---

**சலுகையா...?**



வாஷிங்டனில் உள்ள செனட் சபை அங்கத்தினர் ஒருவர், சபை துணைத் தலைவரிடம் மற்ற உறுப்பினர்களை விட ராபர்ட் கென்னடிக்கு அதிக சலுகை காட்டப்படுவதாகப் புகார் செய்தார்.

அதற்கு துணைத் தலைவர் கூறியது: ''அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. அமெரிக்காவின் வருங்கால ஜனாதிபதியிடம் நான் எப்படி நடந்து கொள்வேனோ அதைப் போலவேதான் நான் அவரிடம் நடந்துகொள்கிறேன்.''

ஆதாரம்: நியூயார்க் டைம்ஸ் — தகவல்: வி. ந. ஸ்ரீதரன்

லேயே கண் கொட்டாமல் பார்த்தாள். அவன் மீண்டும் ஒன்றும் பேசாமல் எஞ்ஜினிலிருந்து கீழே குதித்து தீக்ஷிதர் பக்கத்தில் வந்து நின்றான். தீக்ஷிதரைக் கண்ட அந்தப் பெண், இரு கைகளையும் கூப்பி வணங்கினாள். தீக்ஷிதரும் பதிலுக்கு வணங்கினார். திடீரென வண்டி புறப்படுவதற்கான மணி ஒலிக்கவே, கூட்டம் முழுதும் முண்டி அடித்துக் கொண்டு வண்டிக்குள் புகுந்தது. தீக்ஷிதரும் ரங்கமணியும் வண்டியில் ஏறிக் கொண்டார்கள். அந்தப் பெண் பிளாட்பாரத்திலேயே நின்ற வண்ணம் ரங்கமணியை வியப்புடன் பார்த்துக் கொண்டிருந்தாள்.

சிறிது நேரத்தில் வண்டி புறப்பட்டது. 'வந்தே மாதரம்', மகாத்மா காந்திக்கு ஜே!' என்ற கோஷங்களால் ரயில் நிலையமே அதிர்ந்தது. தீக்ஷிதரையும் ரங்கமணியையும் பார்த்து அந்தப் பெண் கையை ஆட்டி விடை கொடுத்தாள். தீக்ஷிதர் மட்டும் பதிலுக்குக் கையை ஆட்டினார். ஆனால், ரங்கமணி இதையெல்லாம் சட்டை செய்யாமல் வண்டிக்குள் இருந்தான். அவனும் பதிலுக்குக் கையை அசைக்கவில்லையே என்ற ஏமாற்றம் அவள் முகத்தில் பிரதிபலித்தது.

கொடியைத் தாங்கிக் கொண்டு ரயில் வேகமாக ஓடியது. அப்போது அந்த வண்டியின் வாசலில் கையில் பெட்டி படுக்கையுடன் நின்று கொண்டிருந்த ஓர் ஒல்லியான உருவம் கூட்டத்தை பிடித்துத் தள்ளிக் கொண்டு ரங்கமணியின் பக்கத்தில் வந்தது. அந்த உருவத்தை திரும்பிப் பார்த்தான் ரங்கமணி. அது ஓர் எலும்புக் கூடு. சதை, அந்தக் கூட்டில் ஒட்டப் பிடிவாதமாக மறுத்திருக்க வேண்டும். முகத்தில் அசடு வழிந்தது. குழி விழுந்த கண்களின் பார்வையே பரிதாபமாக இருந்தது. கூட்டத்திலிருந்த சிலர் முணுமுணுத்தார்கள்.

"என்னய்யா, இங்கேயோ புளி மாதிரி அடைந்திருக்கிறோம்; நீ வேறு நுழைந்ததுமல்லாமல், பிடித்துத் தள்ளிக் கொண்டு போகிறாயே" என்று உறுமினார் தொந்தி ஆசாமி. அந்த ஒல்லி ஆசாமியோ தன் பெட்டியைச் சுமந்து கொண்டு பரிதாபமாக நின்று கொண்டிருந்தான். அவனைப் பார்க்க ஒருபுறம் வேடிக்கையாகவுமிருந்தது. மற்றொருபுறம் இரக்கமாகவும் இருந்தது.

"இந்தாப்பா இப்படி உட்கார்" என்று கூறித் தன் இடத்தைக் காட்டி எழுந்தான் ரங்கமணி.

"வேண்டாம் சார்! இப்படிக் கீழேயே உட்கார்ந்து கொள்கிறேன்" என்று கூறி விட்டுப் பெட்டியைக் கீழே போட்டு ஏறி உட்கார்ந்து கொண்டான். வண்டியில் அந்தப் பெண், கொடி கட்டிய சம்பவத்தைப் பற்றித் தர்க்கம் நடந்தது. தொந்தி ஆசாமி ரங்கமணியை வெறுப்போடு பார்த்துக் கொண்டிருந்தார். ரங்கமணி எதிலுமே அக்கறை காட்டாமல் மௌனமாக இருந்தான்.

"சார்! நீங்கள் நல்ல காரியம் பண்ணினீர்கள்!" என்றான் ஒல்லி ஆசாமி, ரங்கமணியைப் பார்த்து. பிறகு சுற்றி இருந்தவர்களைப் பார்த்துவிட்டு, "அந்தக் கூட்டத்தில் எவனாவது துணிந்து போனானா?- போலீஸ்காரர்கள் கையையே முறித்து விடுவதாகக் கூறினார்களே!" என்று கூறி வியப்புடன் கண்களை உருட்டி ரங்கமணியைப் பார்த்தான்.

"உன் பெயர் என்ன?" என்று ரங்கமணி கேட்டான்.

"ஹி...ஹி... என் முழுப் பெயர் வெங்கடகிருஷ்ணன். வெங்கிட்டு என்று கூப்பிடுவார்கள். வெங்கு என்றால்தான் ஊரில் தெரியும்" என்றான், அந்த எலும்புக்கூட்டு மனிதன். ரங்கமணியைப் பார்த்து அவன் சொன்னான்: "நல்ல வேளை சார், ரிசர்வ் போலீஸ் வரவில்லை. ஸ்டேஷன் மாஸ்டர் பலே ஆளு. சூப்பிரண்டெண்டுக்குப் போன் செய்தான். ஆனால் என்ன நடந்தது தெரியுமோ? சூப்பிரண்டெண்ட் போலீஸை அனுப்ப மறுத்து விட்டாராம். மதுரையிலே ஏதோ மகாநாடாம். காங்கிரஸ் தொண்



டர்கள் நிறையப் பேர் வந்திருக்கிறார்களாம். இப்போது போலீஸை ஏவினால் பெரும் கலகம் வந்துவிடும் என்று பயந்து கொடி கட்டியே ரயில் போகட்டும் என்று சூப்பிரண்டெண்ட் கூறி விட்டாராம். பாவம், அதனால்தான் ஒன்றும் செய்ய முடியாமல் அவர்கள் போய்விட்டார்கள்.''

இதைக் கேட்ட தொந்தி ஆசாமி, ''போலீஸ் வராமல் போய்விட்டது. வந்தால் அல்லவா தெரியும், கதர்ச் சட்டைக்காரனின் வாய் வீச்செல்லாம்'' என்று குறுக்கிட்டுப் பேசினார். ரங்கமணி ஏதோ பதில் சொல்லத் திரும்பினான். ஆனால் தீக்ஷிதர் அவனைத் தடுத்து விட்டார்.

''அந்தப் பெண் பெரிய தைரியசாலி தான். எவ்வளவு துணிவோடு கொடியைக் கட்டினாள்!'' என்று வியந்தார் ஒரு கிழவர்.

''இது என்ன சார் பிரமாதம்? அந்தக் காலத்தில் இது மாதிரி எத்தனையோ நடந்திருக்கிறது. ஐந்து வயதுப் பையன் கொடி கட்டியிருக்கிறான் சார்!'' என்றான் வெங்கு, உற்சாகத்துடன்.

''துணி காயப்போடக் கட்டியிருப்பான்!'' என்றார் தொந்தி ஆசாமி.

''வெள்ளைக்காரன் காரையே மறித்துக் கொடி கட்டினான் சார், தெரியுமா?'' என்று சவால் விடுவது போல் பேசினான் வெங்கு. அவன் பேசுவதே வேடிக்கையாக இருந்தது.

''அவ்வளவு தைரியமாகக் கொடி கட்டிய குழந்தை யார்?'' என்று கேட்டார் ஒரு கிழவர்.

''சுப்பிரமணிய சிவா தெரியுமா? அவருடைய பையன்தான்'' என்றான் வெங்கு கம்பீரமாக. தொந்தி ஆசாமி விழுந்து விழுந்து சிரித்தார்.

''சுப்பிரமணிய சிவா கல்யாணமே செய்து கொள்ளவில்லை'' என்று கூறிவிட்டு மீண்டும் சிரித்தார்.

''சுப்பிரமண்ய பாரதியாரின் பையனாக இருக்கும்'' என்றான் வெங்கு, விட்டுக் கொடுக்காமல். தொந்தி ஆசாமிக்குச் சிரிப்பு அள்ளிக் கொண்டு வந்தது.

''பாரதியாருக்கு ஆண் வாரிசே கிடையாது'' என்றார்.

''யாருடைய பையனாக இருந்தால் உங்களுக்கு என்ன சார்? ஒரு பையன் தைரியமாகக் கொடி கட்டினான். அவ்வளவுதான்'' என்றான் வெங்கு, எரிச்சலுடன். பாவம், அவனைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது. ஏதோ தெரிந்த மாதிரி பேச வேண்டும் என்ற ஆசையில் எதையோ கூறிவைத்தான். அதற்காக அவனை இப்படியா புரட்டி எடுப்பது? அவன் முகத்தில் அசடு வழிந்தது. அவன் மீது ரங்கமணிக்கு இரக்கம் தோன்றியது.

''வெங்கட கிருஷ்ணா! யாரோ ஒரு சிறு பையன் துணிந்து கொடியைக் கட்டிவிட்டான். அந்தச் சிறு குழந்தைக்கு இருந்த தைரியம் கூட, மலை மாதிரிப் பருத்துவிட்ட சதைப் பிண்டங்களுக்கு இல்லை என்று தானே சொல்ல வந்தாய்?'' என்றான் ரங்கமணி.

''ஹி...ஹி... ஆமாம் சார். அப்படியேதான் சார்'' என்றான் வெங்கு. நல்ல சமயத்தில் இக்கட்டான நிலையில் இருந்து, அதுவும் அந்த முரட்டுத் தொந்தி ஆசாமியிடமிருந்து தன்னை ரங்கமணி காப்பாற்றினானே என்ற நன்றி உணர்ச்சியுடன் ரங்கமணியைப் பார்த்தான்.



''நீ இங்கு வருவதற்கு முன் நாடு ரொம்பச் செழித்து விட்டதோ என்று சந்தேகப்பட்டுக் கொண்டிருந்தேன். உன்னைப் பார்த்த பிறகுதான் வெள்ளைக்காரன் ஆட்சியில் இந்தியா வறுமையைத்தான் அனுபவிக்கிறது என்பது ஊர்ஜிதமாயிற்று'' என்று கூறி, தொந்தி ஆசாமியைக் கடைக்கண்ணால் பார்த்தான் ரங்கமணி. அவனுடைய பேச்சு தொந்தி ஆசாமியின் கோபத்தைக் கிளறியது. என்ன செய்வது? கோபத்தை அடக்கிக் கொண்டு, ஜன்னல் வழியாக வெளியே பார்க்கத் தொடங்கினார்.

''அந்தப் பெண்ணை உங்களுக்கு முன்பே தெரியுமா?''

## எரிச்சலா?
## அஜீர்ணமாக இருக்கலாம்

ஜீரணம் பாதிக்கப்பட்டால் நிதானம் கெடுகிறது. வேலையில் ஜாக்கிரதையும், ஈடுபாடும் குன்றுகிறது. தொழில் நிர்வாகியான தங்களுக்கு இப்படி நேர்வது நல்லதல்ல. ஹ்யூலெட்ஸ் மிக்சர் அருந்துங்கள். அது ஜீரண சக்தியை ஒழுங்கு படுத்துகிறது; விரைவில் நிவாரணம் அளிக்கிறது. வலியுண்டாக்கும் அமிலங்களை அகற்றி ஜீரணகோசத்திற்கு அதன் வேலையை சரிவர செய்வதற்கேற்ப பாதுகாப்பு அளிக்கிறது.

ஹ்யூலெட்ஸ் மிக்சர் குழந்தைகளின் வயிற்று உபாதைகளுக்கும் நல்லது. வயிற்றுப் போக்கு இருந்தால் அபினி சேர்ந்த ஹ்யூலெட்ஸ் மிக்சர் குணமளிக்கும்.






**ஹ்யூலெட்ஸ் மிக்சர் ஜீரணத்திற்குச் சிறந்தது**

C. J. ஹ்யூலெட் & ஸன் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்
86A நைனியப்ப நாயக்கன் தெரு, மதராஸ்-3

CJH-3306A

என்று தீக்ஷிதரிடம் மிருந்த ஆவலுடன் கேட்டான் ரங்கமணி.

''அவள் குழந்தையாக இருக்கும்போதே தெரியும். அளவுக்கு மீறிய துணிச்சல். அழகாகப் பேசுவாள். புத்திசாலிப் பெண். மகாத்மா காந்தி மீது அவளுக்கு உயிர்'' என்றார் தீக்ஷிதர்.

''இவ்வளவு திறமை உள்ளவள், காந்தி பக்தையாகவும் இருந்திருக்க வேண்டாம்; அவள் திறமையும் இப்படி வீணாகவேண்டாம்'' என்றான் ரங்கமணி.

''உனக்கு காந்தி என்றாலே கசப்பு. உன்னைவிடத் தீவிர பயங்கரவாதிகள் எல்லாம் அந்தக் காலத்தில் இருந்திருக்கிறார்கள். எல்லாரும் மகாத்மாவின் அஹிம்சைக் கொள்கையின் முன் தோற்றுத்தான் போனார்கள்.''

''இருக்கலாம்; அதற்காக நானும் தோற்க வேண்டும் என்ற நியதியா?''

''உம்... இளம் ரத்தம் துடிக்கிறது. வார்தாவரை சென்று சேவாகிராமத்தில் தங்கிவிட்டு, மகாத்மாவைப் பார்க்க மறுத்துத் திரும்பியவனல்லவா நீ! காலம்தான் உன் பிடிவாதத்தைத் தளர்த்த வேண்டும்'' என்று கூறி இலேசாகச் சிரித்தார் தீக்ஷிதர்.

''என் கொள்கை ஒரு நாளும் மாறாது.''

''ஒரு முறை மகாத்மாவைச் சந்தித்து விட்டால் போதும். உன் தீவிரமெல்லாம் தணிந்து விடும்.''

''இந்த ஜன்மத்தில் அவரை நான் சந்திக்கப் போவதில்லை'' என்றான் ரங்கமணி.

''அப்படிச் சொல்லாதே, தம்பி! அந்த மகானின் தரிசனமே மனத்துக்குச் சாந்தி அளிக்கும்.''

''எனக்கு அந்தச் சாந்தியும் வேண்டாம்; அவருடைய பேடித்தனமான அஹிம்சைக்கு நான் ஆளாகவும் வேண்டாம். ஏற்கனவே அந்தப் பெண்ணைப் போல் பலர் அவருடைய கொள்கையால் தங்கள் சக்தியை வீணாக்குவது போதும்'' என்றான் எரிச்சலுடன்.

''காந்தியின் சத்தியாக்கிரக வழியே தனி மதிப்புடையது. அதற்குச் சக்தி அதிகம் உண்டு.''

''என்ன சக்தி? இப்படி வண்டியின் கொடியைக் கட்டுவதும், தண்டவாளத்தில் படுப்பதுவும்தான் வேலையா? இதனால் எதைச் சாதித்துவிட முடியும்? வண்டியில் கொடி கட்ட அவ்வளவு தீரத்தைக் காட்டினாளே, என்ன பயனைக் கண்டாள்? அடுத்த ஸ்டேஷனில் அதைப் பிடுங்கி எறிந்து விடுவார்கள். மதுரையிலிருந்து பசுமலைவரை கொடி கட்டி வண்டி ஓடி விட்டதால், வெள்ளைக்காரன் பயந்துவிடுவானா? நல்ல சத்தியாக்கிரகம்!'' என்று கேலியாகச் சிரித்தான் ரங்கமணி.

பசுமலையில் வண்டி நின்றது. ரங்கமணியின் பக்கத்திலிருந்த வெங்கு, ஜன்னல் வழியாகத் தலையை நீட்டி என்ஜின் பக்கம் பார்த்தான்.

''சார், சார்! வண்டியிலிருந்து கொடியை எடுத்து விட்டார்கள்'' என்று கத்தினான். எல்லாரும் ஜன்னல் வழியாகத் தலையை நுழைத்து வெளியே பார்த்தார்கள். பிளாட்பாரத்தில் நின்று கொண்டிருந்த ஸ்டேஷன் மாஸ்டரின் கையில் மூவர்ணக் கொடி இருந்தது. உடனே ரயிலும் புறப்பட்டது.

''ஒரு நொடியில் கொடியைக் கழற்றி எறிந்து விட்டார்களே. இந்தக் கதர்ச் சட்டைகளுக்கா வெள்ளைக்காரன் பயந்து ஓடிவிடப் போகிறான்?'' என்று இரைந்து பேசினார், தொந்தி ஆசாமி. வண்டிக்குள் அவரவர்களுக்குத் தோன்றியதை விமரிசனம் செய்து தீர்த்தார்கள். தீக்ஷிதர் கீதையைப் படிப்பதில் ஆழ்ந்து விட்டார். ரங்கமணியின் மனத்தில் பல நினைவுகள் பின்னவிட்டன.

மதுரையில் கண்ட பெண்ணின் உருவம் அடிக்கடி நினைவில் தோன்றிக் கொண்டிருந்தது. அவளுடைய அழகும், மிடுக்கான பேச்சும், துணிவான செயலும் அவன் நினைவில் நிரம்பி விட்டன.

இவனுக்கும், ராணிக்கும் எவ்வளவு வித்தியாசம்! இருவரும் இரண்டு துருவங்கள்!

## தூங்காதே....!

குயீன்ஸ்லாந்திலுள்ள ரயில் இஞ்சின் டிரைவர்கள் இனிமேல் எங்கே தப்பித் தவறித் தூங்கி விடப் போகிறோமோ என்று பயப்படத் தேவையில்லை.

டிரைவர் 90 வினாடிகளுக்கு ஒரு முறை ஒரு கவிட்சை அழுத்த வேண்டும். அப்படி அழுத்தத் தவறித் தூங்கிவிட்டால் அவரை எழுப்ப ஒரு சத்தம் கிளம்புவதோடு எச்சரிக்கும் முகமாக ஒரு விளக்கும் எரியும்.

இதையும் மீறி அவர் அயர்ந்து தூங்கி விட்டாலோ அடுத்த மூன்று வினாடிகளில் ரயில் தானாகவே நின்றுவிடும்!

தகவல்: வி. ந. ஸ்ரீதரன்
ஆதாரம்: ஆஸ்திரேலியன் போஸ்ட்

★ ★ ★



★ ★ ★

## தூங்கினால் தண்டனை!

ஆம்! இங்கிலாந்தில் நார்விச் என்கிற இடத்தில் இருக்கும் நூலகங்களில் வந்து வாசிப்போர் எண்ணிக்கையைவிட சுகமாகத் தூங்குவோர் எண்ணிக்கை அதிகரிக்க ஆரம்பித்தது. அதைக் கவனித்தார்கள் அதிகாரிகள். நூலகங்களில் தூங்குவது சட்டரீதியாகக் குற்றம் என்றாக்கி விட்டார்கள். இக் குற்றத்துக்குப் பதினைந்து பவுண்டு வரை அபராதம் விதிக்கலாம்!

தகவல்: ஏ. கே. கந்தசாமி

இவளைப் போலவே என் ராணியும் இருந்திருந்தால்....?

சென்னையில் சட்டக் கல்லூரியில் படித்த போது அவனுடைய இதயத்தை ஆட்கொண்டு அவனுடைய இதய ராணியாகி விட்டவளை எண்ணி ஏங்கினான். தன்னுடைய இதய சாம்ராஜ்யத்தில் அவளை ராணியாகவே மகுடம் சூட்டி விட்டான். அவளை ராணி என்று அழைப்பதில்தான் அவனுக்கு எவ்வளவு உற்சாகம்! ராணியின் நினைவு ரங்கமணியின் கண்களைக் கலங்க வைத்தது.

எவ்வளவு அன்புடன் பழகினாள் பாவம்! எதை எதையெல்லாமோ எண்ணி என்னிடம் நெருங்கி நெஞ்சையும் பணயம் வைத்து விட்டாள். எவ்வளவு சுயநலம். தன் ஆசைப் படியெல்லாம் ஆட்டி வைக்க என்னை ஒரு பொம்மையாக அல்லவா இருக்கும்படி பேராசை கொண்டாள். அன்புக்கு அடை படுபவனை ஆணைக்குள் அடக்கி விட முடியாது என்பதை உணர மறுத்து விட்டாளே! என்னை நீ புரிந்து கொள்ள வில்லையே ராணி..!

ரங்கமணி கடந்த கால நினைவில் மூழ்கித் திணறிக் கொண்டிருந்தான்.

வண்டி விருதுநகரில் நின்றது. தொந்தி ஆசாமி, பெட்டி படுக்கைகளோடு கீழே இறங்கினார். இறங்கும்போது ரங்கமணியை முறைத்துப் பார்த்தார். ரங்கமணி சிரித்துக் கொண்டே அவரையும், வெங்குவையும் மாறி மாறிப் பார்த்தான். வெங்குவின் எலும்பும் தோலுமான காற்றுப் புகாத துருத்தியைப் போன்ற சுருங்கிய உடலுக்கும் தொந்தி ஆசாமியின் யானை உடம்புக்கும் எவ்வளவு வித்தியாசம் என்று ரங்கமணி அளக்கிறான் என்பதைப் புரிந்து கொண்ட தொந்தி ஆசாமி, கூட்டத்துக்குள் புகுந்து தம்மை மறைத்துக் கொண்டார். பிளாட்பாரத்தை விட்டு அவர் வெளியே சென்று மறையும்வரை அவரையே பார்த்துக்கொண்டிருந்தான் ரங்கமணி.

தீக்ஷிதர் கீதையைப் படிப்பதை நிறுத்தி விட்டுப் பொடி மட்டையை எடுத்துத் தம் இரண்டு விரல்களிலும் பொடியை அள்ளிக் கொண்டார்.

''கொஞ்சம் பொடி கொடுங்களேன்'' என்று கேட்டுக் கையை நீட்டினான் வெங்கு.

''ஐயோ பொடியா? பொடி போட்டுத் தும்மல் போடக்கூட உன் உடம்பில் சக்தி யில்லையே'' என்று கூறிச்சிரித்தான் ரங்கமணி.

''இது வைரம் பாய்ந்த உடம்பு சார். பார்க்கத்தான் எலும்பு. ஆனால் அத்தனையும் உருக்கு சார், உருக்கு'' என்று பெருமையாகக் கூறிக் கொண்டு தன் உடலை மேலும் கீழும் பார்த்துக் கொண்டான், வெங்கு. அவனைப் பார்க்கவே ரங்கமணிக்குச் சிரிப்பு வந்தது.

''பொடி போட்டு ரொம்ப நேரமாச்சு. மதுரையில் போட்டது. இது இல்லாமல் திண்டாடிப் போனேன். சாப்பாடு கூட வேண்டாம் சார். இது ஒரு சிட்டிகை யிருந்தால் போதும்'' என்று முனகிக் கொண்டே தீக்ஷிதர் நீட்டிய மட்டையி லிருந்து பொடியை எடுத்து லாகவமாக உறிஞ்சிவிட்டு, மட்டையை தீக்ஷிதரிடம் நீட்டினான். பொடியின் காட்டத்தினால் வெங்குவின் கண்கள் கலங்கித் துடித்துக் கொண்டிருந்தன. திடீரென்று சுறுசுறுப்பு வந்தவனைப் போல் நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டான்.

''உன்னுடைய பெயர் என்னவென்று சொன்னாய்?'' — ரங்கமணி கேட்டான்.

''வெங்கடகிருஷ்ணன். வெங்கு என்றால் எல்லாருக்கும் தெரியும். வீட்டில் பித்துக்குளி என்றும் கூப்பிடுவார்கள்....ஹி...ஹி...'' என்றான் வெங்கு ஓர் அசட்டுச் சிரிப்புடன்.

''நான் எப்படிக் கூப்பிடுவது?''

''வெங்கு என்று கூப்பிடுங்களேன். எனக்கு அதுதான் பிடிக்கும்.''

''வெள்ளைக்காரன் எதைக் கண்டு நம் நாட்டை விட்டு ஓடினாலும் ஓடாவிட்டாலும் நீ பொடி போடுவதை ஒரு முறை பார்த்து விட்டால் திரும்பிப் பாராமலே ஓடிவிடுவான்'' என்றான் ரங்கமணி. வெங்கு ஓர் அசட்டுச் சிரிப்பை உதிர்த்துக் கொண்டான்.

வண்டி விருதுநகரை விட்டு நகர்ந்தது. வண்டியிலிருந்த கூட்டம் இரண்டு நாட்கள் அலுப்பினால் தூங்கி வழிந்து கொண்டிருந்தது. கோவில்பட்டி வந்ததும் தீக்ஷிதர் இறங்கி விட்டார்.

''தம்பி, சந்தர்ப்பம் கிடைத்தால் பிறகு சந்திப்போம். நான் சொன்னதை மட்டும் மறந்து விடாதே. ஒரு தடவையாவது வார்தாவுக்குப் போய்விட்டு வா. நானும் மகாதேவ தேசாய்க்கு எழுதுகிறேன்'' என்றார் தீக்ஷிதர்.

''உங்களுக்கு ஏன் இந்தச் சிரமம்? என் வழியில் நான் போய்க் கொள்கிறேன். வார்தாவின் திசை வேறு; எனக்கு அதில் நம்பிக்கையும் கிடையாது'' என்று நிர்க்கமாகப் பதில் கூறினான் ரங்கமணி. தீக்ஷிதர் சிரித்துக் கொண்டார்.

''உம்...பார்ப்போம். கடவுள் உன்னையும் மகாத்மாவையும் என்றாவது ஒரு நாள் சந்திக்க வைக்காமலா போய் விடுவார்'' என்று கூறிவிட்டு விடைபெற்றுச் சென்று விட்டார்.

மாலை மூன்று மணிக்கு வண்டி திருநெல்வேலி வந்து சேர்ந்தது. வெங்கு பெட்டி படுக்கையைத் தூக்கிக் கொண்டு கீழே இறங்கி ரங்கமணி இருந்த ஜன்னல் பக்கம் வந்தான்.

''சார்! நான் போய் வருகிறேன். திருநெல்வேலிக்கு வந்தால் என்னைப் பாருங்கள், சார். வெங்கு என்று கேட்டால் யார் வேண்டுமானாலும் வழி காட்டி விடுவார்கள். நான் வரட்டுமா சார்?'' என்று கூறி ஓர் அசட்டுச் சிரிப்பையும் உதிர்த்துவிட்டுச் சென்றான். அவனுடைய வெகுளித்தனத்தை நினைத்து ரசித்துக் கொண்டே வண்டிக்குள் சாய்ந்து உட்கார்ந்தான், ரங்கமணி.

மாலை ஆறு மணிக்கு அம்பாசமுத்திரம் ரயில் நிலையத்தில் வண்டி வந்து நின்றது.

(தொடரும்)



# ஜிம்மி

வால்ட் டிஸ்னி


அட, என்ன ஜோரா பனி பெய்யுது.


வெளியே போய் விளையாட ஆசையா ஜிம்மி?


இதைப் போட்டுக் கோ.










ஜோர்...ஜோர்


ஆஹா, இந்த ஸ்வெட்டர் எத்தனை கதகதப்பா இருக்கு?
3-7




அட, நீ கூட ஒரு ஸ்வெட்டர் போட்டிருக்கியா?


உடம்பின் எல்லாப் பாகமும் கதகதப்பா இருக்க வேணுமே!





▲ இங்கிலாந்தில் மேற்கிந்திய கிரிக்கெட் ஆட்டக்காரர்கள்

1. காப்டன் சாபர்ஸ். 2. காப்டன் பட்டோடி ➤

# இனிக்கும் கிரிக்கெட்

**ஹா**ல் பந்து வீசுகிறார் என்றால் ஆட்டக்காரர்களுக்குக் கதிகலக்கம். அவரது பந்து வீச்சில் ஆங்கிலக் கிரிக்கெட் ஆட்டக்காரர் பாரிங்டன்கூட 'உண்டை' வாங்கித் திணறியுள்ளார். ''ஹால் பந்து வீசுகிறார் என்றால் இரும்புக் கவசமும், தொப்பியும் அணிந்து ஆட வரவேண்டியதுதான்'' என்ற 'புகழை'ப் பெற்றவர் ஹால்.

முதன் முதலாக ஹால் டெஸ்டுக்கு வருவதற்கு முன் கோணல் மாணலாக ஓடி வந்து பந்தை எறிவார். ஆனால் அவரது பந்து வீச்சில் வேகமிராது. மேற்கிந்திய கிரிக்கெட் ஆட்டக்காரர்களைத் தேர்ந்தெடுப்பவர்களில் ஒருவரான பெர்க்லி காஸ்கின் இந்தக் குறையை ஹாலிடம் கண்டார். ''டெஸ்ட் ஆட்டத்துக்கு உன்னைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்றால் நேராக ஓடி வந்து பந்து வீச வேண்டும். அந்தப் பயிற்சி பெற்றால்தான் உனக்கு 'சான்ஸ்' கிடைக்கும்'' என்று கூறிவிட்டார். ஆகவே ஹால் பார்படாஸில் கோடை முழுதும் பல மணி நேரம் உடலை வருத்திப் பயின்று நேராக ஓடி வந்து பந்து வீசும் பழக்கத்தைக் கைக்கொண்டார்.

ஒரு சாதாரண கிரிக்கெட் ஆட்டம் நடந்து கொண்டிருந்தது. ஹால் பந்து வீசிக்கொண்டிருந்தார். இந்தச் சமயத்தில் காப்டன் அட்கின்ஸன் ஹாலிடம் வந்து, ''உன் பந்து வீச்சை 'செலக்டர்'கள் பார்வையிடுகிறார்கள். உன் திறமையைக் காட்ட வேண்டும்'' என்று தெரிவித்துவிட்டுப் போனார். அடுத்த கணம் ஹால் வீசிய அகரப் பந்தில் சார்லியின் விக்கெட் எகிறிப் பறந்தது. ஹால் வீசிய பந்தை என்ன செய்வதென்று தெரியாமல் விட்டுவிட்டு விக்கெட்டை இழந்து வந்தார் சார்லி. அவரிடம் ஹால், ''நான் எப்படி? நான் இனிப்பாயிருக்கேனா?'' (you think I am Sweet?) என்று கேட்டார்.

ஜமைக்காவில் உள்ள சர்க்கரை ஆலையொன்றில் ஹால் பணியாற்றுபவராயிற்றே! அவரது இனிமை நிரம்பிய கசப்பான

இரட்டையர்களான சந்திரசேகரும்-வெங்கடராகவனும் மைசூர் மகாராஜாவுடன்





கிப்ஸ்

வார்த்தைகளுக்குக் கேட்கவா வேண்டும்? அதுமுதல் அவர் ஒவ்வொரு தடவை பந்து வீசி விக்கெட்டை வீழ்த்தும்போதும் ''எதிராளிக்கு நீ என்றுமே இனிப்பான வர்தான்!'' என்று ரஸிகர்கள் வாழ்த்துவது வழக்கமாகி விட்டது.

அட்லாண்டிக் மகா சமுத்திரத்துக்கும் காரீபியன் கடலுக்கும் நடுவில் மேற்கிந்தியத் தீவுகள் ஒரு சங்கிலித் தொடர்போல் அமைந்துள்ளன. பிளாரிடா முனையிலிருந்து வெனிஸுலா கடற்கரை வரையில் இந்தத் தீவுகள் இரண்டாயிரம் மைல்கள் வளைந்துள்ளன. 91,923 சதுரமைல்கள் பரப்புள்ள இத்தீவுகளின் ஜனத்தொகை சுமார் ஒன்றேகால் கோடிக்கு மேலிருக்கும். கிறிஸ்தோபர் கொலம்பஸே இந்தத் தீவுகளுக்கு மேற்கிந்தியத் தீவுகள் என்ற நாமகரணத்தைச் சூட்டினார். 1492ம் ஆண்டில் முதன் முதலில் அவர் பயணம் மேற்கொண்டதில் அவர் கண்ணுக்குத் தெரிந்த இந்தத் தீவுகள் இந்தியாவைச் சேர்ந்தவை என்று அவர் கருதினாராம். இத்தீவினர் ஆப்பிரிக்க நீக்ரோக்களின் சந்ததியென்றும், அவர்கள் நீக்ரோ—வெள்ளைக் கலப்பினால் விளைந்தவர்கள் என்றும் கூறுகிறார்கள். அவர்களுக்கு விவசாயம், பழங்களைப் பயிரிடுதல் இவையே தொழிலாகும். சர்க்கரை, புகையிலை, காப்பி, பழங்கள் மேற்கிந்தியத் தீவுகளின் செல்வங்கள். அவர்கள் வாழ்க்கையில் மூன்று முக்கிய விஷயங்கள் அங்கம் வகிக்கின்றன — கிரிக்கெட், கார்னிவால், சங்கீதம்.

1959 — 60ம் வருஷத்தில் இங்கிலாந்துக்கும் மேற்கிந்தியக் கிரிக்கெட் கோஷ்டிக்கும் மேற்கிந்தியத் தீவில் நடந்த இரண்டாவது டெஸ்ட் மூன்றும் நாள் பாதியிலேயே நின்று விட்டது. குப்பிகளும், இதர அஸ்திரப் பிரயோகங்களும் மைதானத்தை நோக்கிப் பறந்தன. காரணம் அம்பயர் மேற்கு இந்தியத் தீவுக் கோஷ்டிக்கு எதிராக ஒருவரை 'ரன் அவுட்' கொடுத்து விட்டதுதான்! மைதானத்தில் பாட்டில்கள் பறந்ததோடு ரஸிகர்கள் மைதானத்தை மொய்த்துவிட்டார்கள். ஆட்டக்காரர்கள் போலீஸ்காரர்கள் புடைசூழ வர, அம்பயர்கள் பலத்த போலீஸ் பாதுகாப்புடன் வெளியேற்றப்பட்டனர். மேற்கிந்தியத் தீவு கிரிக்கெட் ரஸிகர்களின் வெறிக்கு இதை விடச் சான்று தேவையில்லை.

1960—61ம் ஆண்டில் ஆஸ்திரேலியாவுக்கும் மேற்கிந்திய குழுவுக்கும் பிரிஸ்பேனில் நடந்த முதல் டெஸ்ட் சரித்திரப் பிரசித்தி பெற்றது. ஆஸ்திரேலியக் கோஷ்டிக்கு இன்னும் மூன்று ரன்களே வெற்றி பெறத் தேவையாயிருந்தது. பந்து வீச்சு நிபுணர் ஹாலே நம்பிக்கை இழந்து ஏதோ ஆவேசத்தில் பந்தை வீசிக் கொண்டிருந்தார். மைதானத்துக்கு அருகில் உள்ள மாதா கோயிலில் மாலை நேரப் பிரார்த்தனை மணி ஒலித்தது. அந்த ஒலி ஓர் அதிசயம் நிகழப் போகிற







தென்று தெரிவிப்பது போலிருந்தது. ஆஸ்திரேலிய ஆட்டக்காரர் மெக்கிப் அடித்த பவுண்டரி வெற்றிப் பவுண்டரிதான் என்று கருதி விட்டனர் ரசிகர்கள். ரேடியோ அறிவிப்பாளர்கூட ஆஸ்திரேலிய வெற்றியைப் பற்றிப் பிரமாதமாக வருணித்துக் கொண்டிருந்தார். மைதானத்தின் விளிம்புகளில் புல் வெட்டப்படாததால் பந்தின் வேகம்குறைந்து போக அது பவுண்டரி எல்லையை அடையவில்லை. அதற்குள் அசுர வேகத்தில் ஓடிய ஹண்ட் பந்தை எறிய, ஒரு 'வெற்றி ரன்' எடுப்பதற்குள் விக்கெட் கீப்பர் ஸ்டம்புக்குச்சிகளைத் தாக்கி விட்டார். பிறகு சடசடவென்று விக்கெட்டுகள் சரிய மேற்கிந்திய கிரிக்கெட் கோஷ்டிக்கும் ஆஸ்திரேலிய கிரிக்கெட் கோஷ்டிக்கும் 737 ரன்கள் சரிசமமாகக் கிடைத்தன. இப்படி இரு கோஷ்டிகள் 737 ரன்கள் சரிசமமாக எடுத்தது சரித்திரம் கண்டிராத அதிசயம்.

பிரிட்டிஷ் கயானாவில் கரும்பு பயிரிடும் இடமான மௌரெட்டின் குறுகிய தெருக்களிலும் குப்பையும் கூளமும் நிரம்பிய வெட்டவெளியிலும்தான் உலகப் புகழ் பெற்ற கன்ஹாய் முதன் முதலில் கிரிக்கெட் ஆடக் கற்றுக் கொண்டார். அவருக்குத் தென்னை மட்டைதான் கிரிக்கெட் மட்டை. நூலால் சுற்றப்பட்ட கார்க்தான் பந்து; ஒடிக்கப்பட்ட குச்சிகள்தான் ஸ்டம்புகள். அவருக்கு இளம் வயதில் ஆடிய இந்த ஆட்டம் என்றுமே மனத்தில் பசுமையாக இருக்கிறதாம். சிறுவன் கன்ஹாய்க்குக் காலில் 'பேடு' கட்டிக் கொண்டோ, கைகளில் உறை அணிந்தோ கிரிக்கெட் ஆடும் பழக்கம் கிடையாது. உடல் முழுவதும் பந்து பட்டுக் காய்த்துப் போன அடையாளங்களை இன்றும் காணலாம். கன்ஹாயின் தந்தைக்கு அவன் ஐம்பது ரன்களுடன் வெகு சீக்கிரம் அவுட்டாகி வந்து விடுவதில் வருத்தம். "நீ பந்தை அடிப்பதில் அதிக அக்கறை செலுத்த வேண்டும். பத்தே நிமிஷங்களில் 40 எண்ணிக்கை எடுத்து அவுட்டாகி விடுகிறாய். இது நல்லதல்ல. நின்று நிலைத்து ஆடும் திறமை வரவேண்டும், குழந்தாய்!" என்று உபதேசம் செய்வாராம்.

இந்தியப் பந்துவீச்சு நிபுணர்களில் குப்தே மேற்கிந்தியக் கிரிக்கெட் ஆட்டக்காரர்களை ஒரு கலக்குக்

முன் பக்கத்தில்: 1. கன்ஹாய். 2. நர்ஸ். 3. ஹால்.

இந்தப் பக்கத்தில்: 1. முர்ரே. 2. ஹண்ட் 3. லாயிட்.







கலக்கியிருக்கிறார் என்றால் ஆச்சரியமாயிருக்கும். இந்தியாவில் நடந்த முதல் டெஸ்டில் கன்ஹாயின் விக்கெட்டை வீழ்த்தியபோது குப்தேக்கு அது நூறாவது டெஸ்ட் விக்கெட். கான்பூரிலும் கான்ஹாயை 'அவுட்' ஆக்கியவர் குப்தேதான். பிறகு டீ வேளைக்கு ஸ்டேடியத்தில் கூடியபோது இந்தியப் பந்து வீச்சு நிபுணர் குப்தே நகைப்புக் குரலிலே, ''ஹலோ, முயல்!'' (Hallo Rabbit) என்று தாம் பலி வாங்கியவரை எகத்தாளமாகக் குறிப்பிட்டார். பயந்த சுபாவமுள்ளவர்களை அப்படிக் கிண்டல் செய்வது வழக்கம். அப்பொழுது அங்கு கூடியிருந்த மற்ற கிரிக்கெட் ஆட்டக்காரர்கள் அனைவரும் நகைத்தார்கள். கன்ஹாய்க்கு இரத்தம் கொதித்தது. 'இதற்கு அடுத்த டெஸ்டில் சரியான பாடம் கற்பிக்கிறேன்!' என்று முணுமுணுத்தார் கன்ஹாய். 'யார்க்கர்', 'லெக் பிரேக்' பந்து வீச்சைவிட ஆட்டக்காரர்களின் மனத்தைத் தாக்கும் இளக்காரச் சொல் வேகமானது அல்லவா?

கல்கத்தா டெஸ்டில் கன்ஹாய் 256 ரன்கள் எடுத்து-வொரலின் 237 ரன்களைவிட அதிகம் — ஒரு புதிய சரித்திரத்தை உண்டு பண்ணினார். இவரது திறமையைப் பாராட்டி ஜனாதிபதி ராஜேந்திரப் பிரசாத் அவர்கள் 'புலித் தலை' ஒன்றைப் பரிசாக அளித்தார். ஆனால் குப்தேயின் பந்து வீச்சை அநாயாசமாகத் தாக்கி வெற்றி கொண்டதையே பெரும் பரிசாகக் கருதினார் கன்ஹாய்.

மேற்கிந்தியத் தீவு இளைஞர்களுக்கு உள்ளூற என்ன ஆசைக் கனவு தெரியுமா? தாங்களும் ஸாபர்ஸைப் போல் கிரிக்கெட் உலகில் பெரும் புகழ் பெற வேண்டும் என்பது தான். பதினேழு வயதில் சாபர்ஸ் சாதாரண லெக் ஸ்பின்னர்தான். பிறகு நாளாக ஆக ஆல்ரௌண்டர் ஆனார். மேற்கிந்தியத் தீவுகளில் சர்க்கார் சமூக அபிவிருத்தி இலாகா (Community Development) வில் பணியாற்றி வருகிறார். வொரலும், கன்ஹாயும் அதே இலாகாவில்தான் பணியாற்றுகிறார்கள். சமூக சேவை என்பது அவர்கள் அகராதியில் தீவுகளிலுள்ள பல பள்ளிகளுக்கும் சென்று இளவட்டங்களுக்குக் கிரிக்கெட் ஆட்டத்தில் பயிற்சியைப் பெருக்குவதுதான். கிரிப்பித்தும் செய்மோர் நர்ஸும் பார்படாஸ் சர்க்காரில் கிரிக்கெட் பயிற்சியாளராகச் சேவை செய்கிறார்கள். புச்சர், பிரிட்டிஷ் கயானாவில் சுரங்கத் தொழில் கம்பெனி ஒன்றில் வேலையில் இருக்கிறார். கிப்ஸும் சர்க்கார் உத்தியோகஸ்தர்தான்!

கிங்ஸ்டனில் உள்ள சபீனா பார்க்கில் பாகிஸ்தானுக்கு எதிராக நடந்த மூன்றாவது கிரிக்கெட் டெஸ்ட் சரித்திரப் புகழ் பெற்றது. பாஸல் முகம்மது வீசிய பந்தை அடித்துவிட்டு சாபர்ஸ் ஒத்தை ரன் ஓடியபோது— ஆங்கிலக் கிரிக்கெட் மன்னர் ஹட்டனின் இருபது வருஷ ரிக்கார்டைத் தகர்த்தெறிந்து புது ரிக்கார்டை உண்டாக்கினார். கதாநாயகனுக்குரிய வரவேற்பும், பாராட்டும் சாபர்ஸுக்கு அன்று கிடைத்தன. மைதானத்தை நோக்கி அத்தனை ரசிகர்களும் கைகளை நீட்டியபடியே வந்து அவரைப் பலவந்தமாகத் தோளுக்கு மேல் தூக்கிக் கொண்டு வெற்றி ஊர்வலமாக ஸ்டேடியத்துக்குள் நுழைந்து தான் அவரை விட்டார்கள். அவுட்டாகாமல் 365 ரன்கள் எடுத்த சாபர்ஸ்,— அதற்கு ஹட்டன் எடுத்துக் கொண்ட நேரத்தைவிட மூன்று மணி நேரம் குறைவாக எடுத்துக் கொண்டு-உலகப் புகழ் பெற்றார்.

மேற்கிந்தியக் கிரிக்கெட் ஆட்டக்காரர் ஹண்ட் எம். ஆர். ஏ. குழுவைச் சேர்ந்தவர் என்பது உலகப் பிரசித்தம். அவர் ஆஸ்திரேலிய டெஸ்ட் பிரயாணத்தின்போது இந்த இயக்கத்தில் ஈடுபாடு கொண்டார். கிரிக்கெட்டும், எம். ஆர். ஏ. இயக்கமும் அவருக்கு இரு கண்களைப் போன்றவை. அந்த இயக்கத்துக்காகப் பெரும் பொருள் செலவிட்டு வருகிறார் ஹண்ட். மற்ற கிரிக்கெட் ஆட்டக்காரர்களும் ''நாங்களும் எம். ஆர். ஏ. தான். எங்களிடம் மிகுந்த ரன்கள் கிடைக்குமே?'' (More Runs Available) என்று சொல்லிக் கொள்வார்களாம்.

இந்தியக் காப்டனாக வருபவர்களுக்கே சாபக்கேடு போலும்! கண்ட்ராக்டருக்கு மேற்கத்தியத் தீவு டெஸ்டில் அடிபட்டு, ஆடமுடியாமல் போயிற்று. நவாப் பட்டோடிக்கும் நான்கு வருஷங்களுக்கு முன்பு கார் விபத்தில் கண்ணில் அடிபட்டு ஆபரேஷன் நிகழ்ந்தது. ஆபரேஷன் வெற்றிகரமாக நிகழ்ந்து ஆட்டத்தை அவர் விட்டுப் போகாமல் இன்று 'ஒற்றைக் கண்ணில்' இந்தியக் காப்டனாக நின்று இந்தியாவுக்குப் பெருமை தேடி வருகிறார்.

கிரிக்கெட் வானில் ஒரு புதிய நட்சத்திரம் உதயமாவதற்கு ஒருவர் பலமாக அடிபட்டுக் கொண்டதே காரணம் என்றால் உங்களுக்கு ஆச்சரியமாக இருக்கும். 'மோர்க் குழம்பு வைட்டமின்' வேங்கடராகவனுக்கு 'டெஸ்ட் சான்ஸ்' கிடைத்ததே பந்து வீச்சு நிபுணர் சந்திரசேகர் ஒரு சமயம் கையில் அடிபட்டுக் கொண்டு ஆட முடியாமல் இருந்ததால்தான்! அன்று சந்திரசேகர் நல்லபடியாக இருந்திருந்தால் டெஸ்ட் அனுபவம் வேங்கடராகவனுக்குக் கிட்டியிருக்குமா என்பதே சந்தேகம்! பந்து வீச்சில் இரட்டையர்களான சந்திரசேகரும் வேங்கடராகவனும் பம்பாய் டெஸ்டில் மேற்கிந்திய கிரிக்கெட் கோஷ்டியை ஒரு கலக்குக் கலக்கியிருக்கிறார்கள். இரட்டையரின் சிறப்பு சென்னையிலும் தொடரட்டும். 'டிரா' மாட்சு, ஆட்டம் போர் என்பதெல்லாம் மேற்கிந்திய கிரிக்கெட் கோஷ்டியிடம் அவ்வளவாக இல்லாதவை. ஆட்டத்தை ஒரு முடிவுக்குக் கொண்டு வருவதில் அவர்களுக்கு ஆசை அதிகம். 'உலகக் கிரிக்கெட்' மன்னர்களாயிற்றே! கிரிக்கெட் ரசிகர்களுக்கு நல்ல ஆட்டத்தைக் காணும் வாய்ப்பு ஏற்படும்! வழக்கம் போல் 'பால் பொங்கிற்றா?' என்ற கேள்வியைக் கிரிக்கெட் மைதானத்தில் வைத்துக் கொள்ளும் கிரிக்கெட் ரசிகர்களுக்கு நல்லதோர் ஆட்டம் சர்க்கரைப் பொங்கல் போல் இனிக்கட்டும்.

—குண்டுமணி

மழை இடைவிடாமல் ஒரே கதியில் தூறிக் கொண்டிருக்கிறது: நினைவுகளாகத் தங்கிவிட்ட இறந்த காலத்தை உரக்க எண்ணும் கிழவர்களின் முணுமுணுப்பைப் போல.

எத்தனை நேரம்தான் இந்தக் கடை வாசலில் நிற்பது. மழை நின்ற பிறகு போகலாமென்றால்? செறிந்த மீசையையும், நிறைந்த தாடியையும் தாண்டிய புன்னகை காதுவரை நீள, அந்தக் கடைக்கார சர்தார்ஜி துணிதான் வாங்க



சிறப்புச் சிறுகதை

# நான் கண்டேனா?

இந்திரா பார்த்தசாரதி

வந்திருக்கிறேன் என்று நினைத்து என்னை வரவேற்றபோது என் மனச்சாட்சி உறுத்தியது. 'பாரிஷ்' என்று அசட்டுச் சிரிப்புடன் சொற்களை உதிர்த்தேன். அவன் என்னைப் பரிதாபமாகப் பார்த்துக் கொண்டே 'மக் ஹை...மக் ஹை' என்று சொல்லிவிட்டு உள்ளே போய்விட்டான். அடைக்கலம் தந்த பெருமிதம் அவன் பாவனையில் தென்பட்டது. குளிரில் நடுங்கிய மயிலுக்குப் போர்வை ஈந்த பேகனோ?...

குழந்தைகளுக்கென்று விதம் விதமான உடைகள் எத்தனை தொங்குகின்றன? குருவி, முயல், வாத்து, மான், நாய் ஆகிய உருவங்கள் நூல்களில் இழைந்து, வண்ணம் வண்ணமாகக் கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்தளிக்கும் சட்டைகள் !

அதோ அந்தச் சட்டை எவ்வளவு நன்றாக இருக்கிறது? திரைப்படங்களில் கனவுக் காட்சிகளில் சூழும் புகையைப் போன்ற மென் பஞ்சாலியன்ற நீலவண்ணப் பட்டுத் துணி. விலை எவ்வளவு இருக்கும்? எண்பது ரூபாய்! விலையைக் கண்ட அதிர்ச்சியில் கடைக்காரன் பக்கம் திரும்பினேன். அவன் சாவதானமாக, 'டீ'யைக் குடித்துக்கொண்டு உருதுப் பத்திரிகையொன்றைப் புரட்டிக் கொண்டிருக்கிறான். அவனிடம் எனக்குப் பயபக்தி ஏற்படுகிறது. இவ்வளவு விலை உயர்ந்த துணிகளை விற்கும் அவன் முன்பு, அவற்றில் ஒன்றைக்கூட வாங்கச் சக்தியில்லாமல் இருக்கும் நான் எம்மாத்திரம்?

இந்தக் காலத்துக் குழந்தைகள் அதிர்ஷ்டசாலிகள்! நாம் குழந்தைகளாக இருந்தபோது, இப்படி வண்ணம் வண்ணமாகச் சட்டைகள்தாம் உண்டா, அல்லது இருந்திருந்தாலும், நம் பெற்றோர்கள் வாங்கித் தந்திருப்பார்களா ? எது முக்கியம் என்பது காலத்துக்குக் காலம் வேறுபடுகின்றது......

''பாய் சாஹேப், அபி பாரிஷ் நை...'' சர்தார்ஜி மழை நின்று விட்டதைச் சுட்டிக்

காட்டுகிறான். துணியும் வாங்காமல் வெறும் ஆளாய் விலையை மட்டும் பார்த்துக்கொண்டிருந்தது அவனுக்குப் பிடிக்கவில்லை போலும்! மழை நின்றதும் மனப் பலகையை இறக்கி விட்டான்!

எங்கே போய் பஸ் ஏறுவது? மதராஸ் ஹோட்டல் ஸ்டாப்புக்குச் செல்லலாமா? பின்னோக்கிச் செல்வதைக் காட்டிலும் முன்னோக்கிச் செல்வதுதான் நல்லது. 'ரீகலை' நோக்கி நடந்தேன்.

அங்கு ஒரு பெரிய கூட்டம் காத்திருக்கிறது. கூட்டத்தினின்றும் தள்ளி நின்றேன். ஒதுங்கி நின்று கூட்டத்தை வேடிக்கை பார்ப்பதுதான் எனக்குப் பிடித்தமான பொழுதுபோக்கு.

'கொடுக்கின்ற தெய்வம் கூரையைப் பொத்துக் கொண்டு கொடுக்கும்' என்பார்கள். அது போலத்தான் டில்லி பஸ்களின் வருகையும். வந்தால் ஐந்தாறு பஸ்கள் சேர்ந்தாற்போல வரும். இல்லாவிடில், இரண்டு மணி நேரத்துக்கு ஒன்றும் வராது. அப்படி ஐந்தாறு பஸ்கள் வரும்போதுதான் ஒவ்வொரு மனிதனுடைய குண இயல்பும் நிர்ணயமாகிறது என்பது என் அபிப்பிராயம். வாழ்க்கையில் வெற்றியடைய விரும்பும் மனிதன் எந்த பஸ்ஸில் ஏறுவதென்று உடனுக்குடன் முடிவு செய்து ஏறி விடுவான். வாழ்க்கையில் ஒதுங்கி நின்றே காலத்தைக் கழிப்பவர்கள் எந்தப் பஸ்ஸில் போவதென்ற 'ஹாம்லெட்'டிய மனப் போராட்டத்தில் ஈடுபட்டு, ஒன்றிலும் ஏறாமல், மேலும் இரண்டு மணி நேரம் மற்றொரு பஸ்ஸின் வருகைக்காகக் காத்திருப்பார்கள். டில்லி பஸ், காலம் இரண்டும் எந்த மனிதனுக்காகவும் காத்திருப்பதில்லை.

'ஈவினிங் நியூஸ்....' ஒன்பது வயதுச் சிறுவன் செய்தித் தாளை நீட்டுகிறான். உலகத்து விவகாரங்களையும் நாட்டுச் செய்திகளையும் ஐந்து காசுக்கு மலிவுப்படுத்தும் மாலைப் பதிப்பு.....

''கரோல்பாக்கில் இரட்டைக் கொலை.''

''அமிர்தசரஸில் தங்கம்கடத்தப்பட்டது.''

''சட்டசபையில் கத்திக்குத்து.....''

''ஒழுக்கத்தின் வழி வந்தது பாரதநாடு—மந்திரியின் பாராட்டுரை.''

ஒரே பக்கத்தில் நான்கு செய்திகளையும் பிரசுரித்திருக்கும் ஆசிரியருக்கு நகைச்சுவை உண்டு போலும்!

விண்ணோக்கி எழுந்த ஆதிசேஷக் கொண்டைகளுடன் இரண்டு பெண்கள் வருகின்றனர். பவுடர், லிப்ஸ்டிக், ரோஜ் ஆகிய சாதனங்களுடன் வயதின் மீது போர் தொடுக்கும் மார்க்கண்டேயப் பெண்மணிகள்! மழையினால் அவர்கள் வேஷம் கொஞ்சம் கலைந்திருந்தது. கந்தர்வப் பெண்களெனப் பாவித்துக் கொண்டு அலங்காரம் செய்து கொள்ளும் நங்கையர்கள், பாதமும் பூமியில் படக்கூடாதென்பதற்காகத்தான் முன் செருப்புக்கள் அணிகிறார்களா? ஆனால் மழைக் காலத்தில் அது ஒரு பரிதாபக் காட்சி!

''எத்தனை நேரமாகக் காத்திருக்கிறீர்கள்?'' நடுத்தர வயதுள்ள ஒரு பஞ்சாபி கேட்கிறார்.

''அரை மணி நேரம் இருக்கும்.''

''மை காட்.... அரை மணி நேரமாகவா?''

அவர் சிறிது நேரம் ஒன்றும் பேசவில்லை. ஒரு சிகரெட்டை எடுத்துப் பற்ற வைக்கிறார். கூட்டத்தை ஆராய்கின்றார். முகத்தில் ஓர் ஏளன இளநகை.

''கூட்டத்தைப் பார்த்தீர்களா? எவ்வளவு 'மேன் ஹவர்ஸ்' வீணாகின்றன! திட்டம் போட்டால் என்ன, போடா விட்டால் என்ன?''

அவர் கூற்று என்னைச் சிந்திக்கச் செய்தது. நான் அரைமணியாக இங்கு காத்திருக்காவிட்டால், திட்டங்கள் வெற்றி பெறுவதற்கு எந்த விதத்தில் உதவியிருப்பேன்? எனக்கு ஒன்றும் தோன்றவில்லை. ஐயோ, கடவுளே! வாழ்க்கையை வீணடித்து விட்டேனே!

''பாருங்கள் கூட்டத்தை....! ஏதாவது கட்டுப்பாடு உண்டா, ஒழுங்கு உண்டா? 'கியூ'வில் நிற்க வேண்டும் என்ற உணர்ச்சி நம் நாட்டு மக்களுக்கு இல்லவே இல்லையே! நாடு முழுவதும் இப்படி ஒழுங்கற்ற முறையில் இருந்தால் என்னாவது? எந்த நாளில் தான் நாம் முன்னேறப் போகிறோம்?''

நாற்பத்தாறு கோடி மக்களும் கட்டுப்பாடற்று அலங்கோலமாக அங்குமிங்கும் திரிகின்ற பயங்கரக் காட்சி! ஆனால்...! ஆனால்...! பார்க்கப் போனால், திரைப்படத்துக்கும், சர்க்கரைக்கும், அரிசிக்கும், நாடு முழுவதிலும் ஒரு நாளைக்கு முப்பது கோடி மக்களாவது 'க்யூ'வில் நிற்க மாட்டார்களா?

''ஜப்பானைப் பாருங்கள்! இரண்டாவது உலக மகாயுத்தத்தினால் பொருளாதாரம் அடியோடு சீர்குலைந்த நாடு! இப்பொழுது எப்படித் தலைதூக்கி விட்டது! ஜப்பான் முன்னேறுவதற்குக் காரணம் ஜப்பானியர்கள்! இந்தியா முன்னேறாமல் இருப்பதற்குக் காரணம் இந்தியர்கள்!''

ஏதோ முத்தாய்ப்பு வைத்தாற் போல் சொல்லிவிட்ட திருப்தியுடன் என்னைப் பார்த்துப் புன்னகை புரிகிறார். நான் ஏதாவது கூற வேண்டும் என்று எதிர்பார்க்கிறார் போல் இருக்கிறது.

''ஆமாம்.... பஸ் வருகிறது.....''

''என்ன சொல்கிறீர்கள்?'' அவர் குரலில் எரிச்சல் தொனித்தது. நான் சம்பந்தமில்லாமல் பேசியது அவருக்கு ஆத்திரமூட்டியிருக்க வேண்டும்.

''மணி ஏழரை....!'' அவர் என்னை உற்றுப் பார்த்துவிட்டு அகலுகிறார். பொன்மொழிகளை வீணடித்து விட்டோமே என்ற ஏமாற்றம் அவர் முகத்தில் தெரிந்தது. 'செவிட்டுப் பயல்' என்று அவர் முணுமுணுப்பது என் காதுகளில் விழுகின்றது.

கூட்டத்தில் சலசலப்பு. பஸ் வந்து விட்டது.

பஸ் ஏறுவதுதான் வாழ்க்கையின் குறிக்கோளென, விலங்குணர்வு வேகத்தையும் சக்தியையும் தர, முண்டி அடித்துக்கொண்டு அனைவரும் போராடுகின்றனர்.

உலகத்தைப் படைத்து விட்டு, மக்கள் ஒருவரையொருவர் அடித்துக் கொண்டு சாவதை ஒதுங்கி நின்று வேடிக்கை பார்க்




ரும் தெய்வத்தைப் போல், விரல் நகத்தைச் சுவைத்தவாறு 'ஸ்டியரிங்'கில் சாய்ந்து கொண்டு மக்கள் மோதும் காட்சியைக்கண்டு ரஸிக்கிறான்!

பஸ் புறப்படுகின்றது. அதோ... நாட்டு மக்களின் கட்டுப்பாடற்ற அவல நிலையைக் கண்டிருகிய அன்பர், அனைவரையும் தாண்டி முதலில் ஏறி விட்டார்.

ஜப்பான் முன்னேறியிருப்பதன் காரணம் இப்பொழுது விளங்குகின்றது !

பஸ் புறப்பட்டவுடன் ஒதுங்கி நின்று கொண்டிருந்த இரு இளைஞர்கள், 'ஓடிப்போய்த் தொற்றிக் கொள்கிறார்கள்! வாழ்க்கையில் பின்புறமாகச் சென்று முன்னேறக் கற்றுக் கொண்டவர்கள் !....

"அடே..... லலிதாவா? ஆபிஸிலேருந்து வரயா? இத்தனை நேரமாகிறது?"

திரும்பிப் பார்த்தேன். ஒளி வீசும் வைரத்தோடணிந்த தமிழ் நாட்டுப் பெண்மணி மற்றொரு பெண்ணை வரவேற்கிறாள்.

"ஓ! பானுவா? தூரத்திலிருந்து பார்க்கிறபோது உன்மாதிரி இருக்கேன்னு நினைச்சேன். ஆமாம், அந்தப் பஸ்ஸிலே போகலியா?"

"அந்தப் பஸ்ஸிலியா? சேச்சே! பொம்மனாட்டி நிற்கிறான்னுகூடப் பார்க்காமே இடிச்சண்டு போறானே, இவான்

ளாம் மனுஷாளா, மிருகங்களான்னு தெரியலே? இந்தக் கூட்டத்திலே யார் போவா? கார் சர்விசுக்குப் போனாலும் போச்சு, இந்த எழவுக் கூட்டத்திலே வந்து அவஸ்தைப்பட வேண்டியிருக்கு. ஆமாம், தினம் நீ எப்படி பஸ்ஸிலே போயிண்டிருக்கே?''

லலிதா பதில் கூறவில்லை. தன் அந்தஸ்தைச் சுட்டிக்காட்டும் கேள்விக்குப் பதில் கூற வேண்டியது அவசியம்தானா என்று அவள் நினைத்திருக்கலாம்.

பானு மேலும் தொடர்ந்து பேசினாள்: ''ஆயிரம் தடவை அவர்கிட்டே சொல்லி விட்டேன். இதை வித்துத் தொலைச்சு, புதுசு வாங்குங்கோன்னு. அவர் மாட்டேங்கிறார். ஆவெந்த காராம். என்ன செய்யறது? கடன் வாங்கியும் பட்டினியா யிருக்கு கதை....!''

இருவருக்கும் சம வயதிருக்கலாம். ஆனால் இருவரும் சமூக ஏணியில் வெவ்வேறு படியிலிருக்கின்றனர். பானுவின் 'காஞ்சீபுரமும்', லலிதாவின் நூல் புடவையும் அதைச் சுட்டிக் காட்டின. வசதிக் குறைவை நாகரிகத் தோற்றத்தால் மறைக்க முயன்றிருக்கிறாள் லலிதா. நிறைந்த வாழ்வினால் ஏற்பட்ட திருப்தி பானுவின் முகத்தில் ஓர் அலட்சிய பாவத்தைக் குடியேற்றியிருக்கிறது. உலகம் தனக்கும் தன் குடும்பத்துக்காகவும்தான் இயங்குகிறது என்ற நினைவு......

''அம்மா, தர்மம் செய், தாயே!''— தமிழ் நாட்டுப் பிச்சைக்காரன்! பாரதியாரின் வாக்கு நிறைவேறி விட்டது. தலைநகரில் தெருவெல்லாம் தமிழ் முழக்கம்!

''பஸ் ஸ்டாப்பிலே வந்து நின்னுப் போதும்.....இந்தப் பிச்சைக்காரா தொல்லே. கார் இல்லாமே இருக்கிறது எவ்வளவு கஷ்டமா இருக்கு தெரியுமா? இந்தாப்பா!''

லலிதாவின் கண்களில் ஓர் இனம் தெரியாத ஏக்கம். அவள் நெஞ்சின் அடித்தளத்தில் நிறைவேறா ஆசைகள் ஏராளமாக உள்ளனவோ? ஒரு வேளை, ஞாயிற்றுக் கிழமைகளில்கூட அவள் கணவர் அலுவலகத்துக்குச் செல்கிறாரோ?

அவள் பேச்சின் திசையை மாற்ற விரும்பினாள் போலும்! என்னைச் சுட்டிக்காட்டிக் கூறினாள். ''அவரைப் பாரு. நம்ம கனகத்து ஆத்துக்காரர் மாதிரியில்லே?''

''சீச்சீ! உனக்குக் கண் குருடா? கனகத்து ஆத்துக்காரர் இன்னும் எவ்வளவு உயரம், சிவப்பு!''

அவர்கள் மெதுவாகத்தான் பேசினார்கள்; ஒரு வேளை எனக்குத் தமிழ் தெரியாதென்ற நம்பிக்கையும் உடனிருந்திருக்க வேண்டும். ஆனால்... ஆனால்.... கனகத்து அகத்துக்காரரோடு ஒப்பிடப்பட்டபோது லலிதாவின் கண் குருடாவென்று கேட்கக் கூடிய அளவுக்கா என் உருவம் இருக்கிறது? என் மனைவியிடம் இதைச் சொல்ல வேண்டும்!

கனகத்து அகத்துக்காரர் மீது எனக்குப் பொறாமையில்லே; என் மீதுதான் எனக்கு இரக்கம்!

''ஆமாம்! கனகம் இப்போ எங்கே இருக்கா? பார்த்து ஒரு வருஷமாச்சு!''— பானுவின் குரலில் அக்கறை தொனித்தது.

''சாணக்கியபுரியிலே இருக்காளாம்!''

''சாணக்கியபுரியிலா? அதெப்படி இருக்க முடியும்? அவள் அகத்துக்காரர் செக்ஷன் ஆபீசர்தானே?''

''செக்ஷன் ஆபீஸராயிருந்தா சாணக்கிய புரியிலே இருக்கக் கூடாதோ?'' லலிதாவின் குரலில் வெறுப்பு வெளிப்படையாகத் தெரிகின்றது.

''அதெப்படி? கவர்ன்மெண்ட் ரூல்படி செக்ஷன் ஆபீசருக்கெல்லாம் சாணக்கிய புரியிலே 'அல்லாட்மெண்ட்' கிடையாது. அதுக்காகத்தான் சொன்னேன்.''

பானுவின் வீட்டுக்காரர் அரசாங்க விதிகளையெல்லாம் அவளுக்குத் தினம் படித்துக் காட்டுவார் போலிருக்கிறது.

''ஒருவர் ஒரு சமயத்திலே செக்ஷன் ஆபீஸராயிருந்தார்னு, ஆயுசு பூரா செக்ஷன் ஆபீஸராகவே இருக்கணுமா?''—லலிதாவின் குரலில் சினம் தெரிந்தது.

''அப்படியில்லே போன வருஷம் செக்ஷன் ஆபீசராயிருந்தார்னு நிச்சயமா எனக்குத் தெரியும். அப்படிப் பிரமோஷன் கிடைச்சிருந்தா என் ஆத்துக்காரர் என் கிட்டே சொல்லியிருப்பார். பிரமோஷன் கிடைக்க வேண்டாம்னு யார் சொன்னா? கெட்டிக்காரத்தனம் இருந்தா எல்லாம் தன்னாலே வரது!''

''கெட்டிக்காரத்தனம் எதுக்கு? அதிர்ஷ்டமும், பொர்கம் இருந்தா இந்தக் காலத்திலே போறும்.''

பானுவின் கணவருக்கு அதிர்ஷ்டத்தினாலும், பொரிசினாலும்தான் உயர்வு கிடைத்தது என்ற மறைமுகத் தாக்குதலோ?

பானு இதைப் புரிந்து கொண்டிருக்க வேண்டும். அவள் உடனே கேட்டாள்: ''உங்காத்துக்காரர் 'ஸ்கூட்டர்' வாங்கப் போறார்னு சொன்னியே, வாங்கியாச்சா? இல்லாட்டா இன்னும் சைக்கிளில்தான் ஆபீஸ் போறாரா?''

''அதோ பஸ் வரது. நம்ப பஸ்ஸா?'' 'ஸ்கூட்டர்' வாங்கவில்லே போலிருக்கிறது.

''என்னடி நிக்காம போறது?''

''நீ நிக்கறதைப் பார்த்தும், நிக்காமே போறதே. எவ்வளவு கர்வம் அதுக்கு?'' இதைச் சொல்லிவிட்டு லலிதா புன்னகை செய்தாள்.

''ஆமாம், லலிதா! உன்னே ஒண்ணு கேட்கிறேன், சொல்லேன். எனக்கு ஒரு நாளைக்கே பஸ் வரதைப் பார்த்திண்டு நிக்க இவ்வளவு அலுப்பா இருக்கே, நீ எப்படித் தினம் பஸ்லே ஆபீஸ் போய் வந்திண்டிருக்கே? நீ நல்ல பொறுமைசாலியடி!''

''அப்போ உன் கார் சர்விசுக்குப் போற போதெல்லாம் நீ வெளியிலே போறதில்லேயோ? அதுதான் அடிக்கடி 'ஒர்க்ஷாப்'புக்குப் போறது போலிருக்கே!''

பானுவுக்கு எந்தவிதத்திலும் லலிதா சளைத்தவளல்லள்.

அப்பொழுது நான்கு பஸ்கள் சேர்ந்தாற் போல் வருகின்றன. எந்தப் பஸ்ஸில் போவது?

திடீரென்று கூட்டம் என் மீது மோதி, வந்த முதல் பஸ்ஸின் உள்ளே என்னைத் தள்ளி விடுகிறது. நான் செய்ய வேண்டிய முடிவைக் கூட்டம் செய்கின்றது.

லலிதாவும், பானுவும் ஏற்கனவே பஸ்ஸில் ஏறியிருக்கிறார்கள். அவர்கள் எப்படி ஏறினார்கள்? கூட்டம் அவர்களையும் தள்ளியிருக்குமோ?

உள்ளே ஒரு சிறுவன் பலூன் ஊதிக் கொண்டிருக்கிறான். பலூன் ஊதுவதைக் காணும் போது என் இருதயம் வேகமாக அடித்துக் கொள்ளும். அது எந்த நிமிஷத்திலும் வெடிக்கலாம். உலகத்தில் நானறிந்த 'சஸ்பென்ஸ்'களில் இதுவுமொன்று.

பக்கத்தில் நின்ற பானுவுக்கு மூச்சு வாங்குகிறது. இப்படிக் கூட்டத்தில் ஏறிப் பழக்கமில்லை போலும்! அப்பொழுதுதான் அவள் கவனிக்கிறாள்; 'பெண்களுக்கு மட்டும்' என்றிருக்கும் ஆசனத்தில் ஓர் ஆடவன் உட்கார்ந்திருக்கிறான். அவன் பக்கத்தில் சில பெண்கள் நிற்கிறார்கள்.

பானுவுக்குச் சர்க்கார் விதிகள் மட்டுமல்ல, பெண்கள் உரிமைகளைப் பற்றிய உறுதியான அபிப்பிராயங்கள் உண்டு போலும்; குறிப்பாகத் தன் உரிமைகளைப் பற்றிய பிரக்ஞை நிச்சயமாக இருந்திருக்க வேண்டும்.

''அதோ பாரு, ஒரு தடியன், 'லேடீஸ்' ஸீட்டிலே உட்கார்ந்திருக்கான். அசடுகள் மாதிரி இரண்டு மூணு பெண்கள் பக்கத்திலே நின்னுண்டிருக்கு.'' பானு கோபத்திலே பொழிகின்றாள்.

''நீ போய் அவனை எழுந்திருக்கச் சொல்லேன்'' என்று லலிதா அவளுக்கு உற்சாகமூட்டுகிறாள்.

பானுவின் முகத்தில் கண்ணகியின் ஆவேசம் எழுந்தது. 'கண்டக்டரிடம் கூறுவோமா' என்று லலிதாவைக் கேட்கிறாள். சர்க்கார் அதிகாரி மனைவியல்லவா? விதிகள் தெரிந்தவள்!

''அவன்கிட்டே எதுக்குச் சொல்லணும்? நீயே போய்ச் சொல்லு. கண்டக்டரைப் பார். அவன் இதைப் பார்க்காதது போல் தள்ளி நிற்கிறான்!''

''நாகரிகமற்ற மடையன்.'' — இவ்வாறு சொல்லிக் கொண்டே பானு முன்னேறுகிறாள். அவள் அந்த ஆடவன் பக்கத்தில் போய் நிற்கிறாள். ஒரு விநாடித் தயக்கம். எப்படிச் சொல்வது என்ற ஒத்திகையோ?

''மிஸ்டர்.....!'' குரலில் ஒரு கடுமை.

அந்த ஆடவன் திரும்பிப் பார்த்தான்.

''லேடீஸ் ஸீட், ப்ளீஸ்!'' பானு வெற்றியுடன் லலிதாவைத் திரும்பிப் பார்க்கிறாள்.

அவள் கூறியது அவன் காதுகளில் விழவில்லையோ? அவன் தலையை உயர்த்தி அவளை நோக்குகிறான். ''எஸ்?''

''ஐ ஸே.... திஸ் ஈஸ் லேடீஸ் ஸீட்.''

''ஓ!.... ஐம் ஆம் ஸாரி!'' அவன் கீழே குனிகிறான்.

''பட்...'' சப்தம் கேட்டுத் திரும்பினேன். சிறுவனின் பலூன் வெடித்து விட்டது.

''டக்... டக்.... டக்....'' கீழே குனிந்து, கட்டையை எடுத்துக் கொண்டு அந்த ஆடவன் எழுந்து விட்டான். அவன் கால்கள் ஊனம்!

அவன் பக்கத்தில் நின்று கொண்டிருந்த பெண்களில் ஒருத்தி கோபத்துடன் கூறுகின்றாள்: ''பாவம்... என்ன இது?''

பானுவின் முகம் வெளிறிக் கிடக்கிறது. இந்த நிலைமையை எப்படிச் சமாளிப்பது?

---

**எஜமானன்:** முனியா! அம்மா கோவிச்சுக்கிட்டாங்களேன்னு வருத்தப்படாதே. இந்த வீட்டிலே நீயும் ஒண்ணுதான் நானும் ஒண்ணுதான்!



**வேலைக்காரன்:** அதுதான் இல்லே சாமி... நான் நினைத்தா இந்த நிமிஷமே வேலையை விட்டு நின்னுக்கிடுவேன்! - ஆர். சரளா

---

''ஐ ஆம் ஸாரி...நீங்கள் உட்காருங்கள்.'' அந்த ஆடவனைப் பார்த்துக் கூறுகிறாள்.

ஊனமுள்ளவர்கள் இரக்கத்தின் காரணமாகத் தரப்படும் சலுகைகளை ஏற்பதில்லை.

'பெண்களுக்குரிய ஆசனத்தில் நான் உட்கார்ந்தது தவறுதான். மன்னிக்கவும்''— ஆங்கிலத்தில் இதைக் கூறிவிட்டு அவன் முன்னேறுகிறான். அங்கு ஒருவர் அவனுக்கு இடமளிக்க முன்வருகின்றார்.

''பரவாயில்லை. நான் நிற்கிறேன்!'' அவன் முகத்தில் புன்னகை.

அவன் காலி செய்த இடத்தில் ஒருவரும் உட்காரவில்லை.

ஒரு வயோதிக சௌந்திரி தள்ளாடிக் கொண்டே வருகிறார். 'லேடீஸ் ஸீட்' என்று சொல்லிவிட்டுப் பானுவைப் பார்க்கிறார்.

''ஆப் பைடியே....!'' அவர் அவளை உபசரிக்கின்றார்.

லலிதாவின் முகத்தில் ஒரு குறுநகை நிழலிடுகின்றது.

பானுவின் சிவந்த முகம் இன்னும் சிவக்கின்றது. எல்லாரும் தன்னையே பார்ப்பது போல் ஒரு பிரமை.

''நை.... ஆப் பைடியே....'' அவள் குரல் பலஹீனமாக ஒலிக்கிறது.

''அவன் காலை நான் பார்த்தேனா? பார்த்திருந்தா எழுந்திருக்கச் சொல்வேனா? அதுக்குள்ளே இப்படிக் கோவிச்சுண்டு போறானே!'' அவள் லலிதாவைப் பார்த்துக் கூறுகிறாள்.

''அவன் கோவிச்சுண்டு போனா நீ என்ன செய்ய முடியும்? கார் இல்லாமெ இருக்கிறது எவ்வளவு கஷ்டம் பாரு....!''

தன் கணவர் ஸ்கூட்டர் வாங்கிவிட்டாரா அல்லது சைக்கிளில்தான் போகிறாரா என்று பானு கேட்ட கேள்விக்கு இதுதான் பதில் போலிருக்கிறது.

சிறுவன் ஊதி வெடித்த பலூன் கீழே அனாதையாய்க் கிடந்தது.

பானுவிடம் எனக்கு அநுதாபம் உண்டாகிறது. அவள் வைரத் தோட்டில் இப்பொழுது அவ்வளவு ஒளி இல்லையோ?



# வெண்ணிலவுப் பெண்ணரசி

## சோமு

### முன் கதைச் சுருக்கம்

சேரலாதன் என்னும் சேர மன்னன் தன்னுடைய தானைத் தலைவனான வேலவன்கோதையைத் தனியாக அழைத்து, வெள்ளைத் தீவிலுள்ள கடம்பர்கள் என்ற கொள்ளைக்காரர்கள், துளுநாட்டு மன்னர்களாகிய நன்னர்களின் உதவியோடு யவன மரக்கலங்களில் கடல் மீது சென்று கொள்ளையடிக்கிறார்கள் என்றும், இவர்களை ஒழித்தால் அல்லாமல் யவனர்கள் சேர நாட்டோடு செய்து வரும் வாணிபம் வளராது என்றும் சொல்லி, இதற்காக வெள்ளைத் தீவுக்குப் போய் உளவு கண்டு வரும்படி வேலவனை அனுப்புகிறான்.

கடலில் ஒரு மிதவையிலே இரகசியமாகச் செல்லும் வேலவன் புயலுக்கு உள்ளாகி, மிதவையை இழந்து, நீந்திக் கரையேறும்போது வெள்ளைத் தீவு மணலிலே மயக்கம் உற்று விழுகிறான். இதை நிலா முற்றத்திலிருந்து பார்த்த இளவரசி நீலவல்லி, கரைக்கு வந்த வேலவனை மயக்கம் தெளிவிக்கிறாள். அப்போது கடல் மீது சென்றிருந்த கொள்ளைக் கூட்டத் தலைவனான கடம்ப வேந்தன் தீவுக்குத் திரும்புகிற எக்காள ஒலி கேட்டு, வேலவன் கோதையை ஒரு சமணக் குகையிலே மறைந்து கொள்ளும்படி சொல்லி விட்டு, அவள் அரண்மனைக்குள்ளே ஓடி விடுகிறாள்.

சமணக்குகையில் மறைந்திருந்த வேலவன் அந்தக் குகைக்குப் பின்னால் இருந்த பௌத்தப் பள்ளியில் சில சோதிட ஏடுகளைக் கண்டு அவற்றை ஆராய்கிறான். கடற்கொள்ளைக்காரர்களுக்கு உடந்தையாக இருக்கும் துளுநாட்டு நன்னன் ஒரு பெண் கொலை புரிந்திருப்பதாகவும் அதனால் பெண் பாவம் அந்தக் குலத்தைப் பிடித்திருப்பதாகவும், அதன் காரணமாக ஒரு பெண்ணின் மூலமே நன்னர் குலம் அழியப் போகிறது என்றும் கூறிச் சோதிட ஏடுகள் கொலை நிகழ்ச்சியை எடுத்துச் சொல்கின்றன.

வில் வீரர்களான கோசர்கள் தலைவனின் மகள் நேரிழை, ஓடையிலே குளித்துக் கொண்டிருந்தபோது ஒரு மாம்பழம் தண்ணீரில் மிதந்து வரவே, அதை எடுத்துச் சாப்பிட்டு விடுகிறாள். அந்தப் பழம் நன்னனுடைய காவல் மரத்தின் பழம்! அதாவது யாருமே அதைத் தொடக்கூடாது! இதை அறிந்து மன்னன் வெறிச் சீற்றம் கொண்டு நேரிழைக்கு மரண தண்டனை விதிக்கிறான்!

இந்த வரலாற்றைப் படித்ததும், நன்னர் குலத்தின் அழிவுக்குக் காரணமாக அமையப் போகிற பெண், ஒருவேளை நீலவல்லியாகவே இருக்கலாமோ என்று எண்ணுகிறான் வேலவன்கோதை!

அந்த முழுநிலா இரவில் வெள்ளைத் தீவுக் கொள்ளை மன்னன் கடல்மீது கொள்ளைக்காகச் சென்றதும், நீலவல்லி வேலவன்கோதையைப் பார்க்கச் சமணக் குகைக்கு வருகிறாள்.

நீலவல்லி தான் வெள்ளைத் தீவு மன்னனாகிய கடம்பனின் வளர்ப்பு மகளே என்றும், அவனுடைய பெற்ற மகள் இல்லை என்றும் சொல்லிக் கடம்பனின் கதையைக் கூறுகிறாள்.

வெள்ளைத் தீவு ஒரு காலத்தில் பௌத்தத் துறவிகள் வாழ்ந்த புண்ணிய நிலமாக இருந்தது. ஒரு நாள் மீகாமன் என்ற மரக்கலத் தலைவனின் யோசனைப்படி அவனுடைய கப்பலிலேயே துறவிகள்

அனைவரையும் வெள்ளைத் தீவிலிருந்து வெளியேற்றி விடுகிறான், வானமண்டலக் கடம்பன் என்ற அந்த மன்னன்! இந்த நிகழ்ச்சி நீலவல்லியை வேதனைப் படுத்தியது. கடம்ப வேந்தன் செய்துள்ள பழி பாவங்களைத் தான் வெறுப்பதாகவும் இந்தச் சூழ்நிலையிலிருந்து தனக்கு விடிவுகாலம் எப்போது வரும் என்று ஏங்குவதாகவும் சொல்லி, நீலவல்லி தான் பிறந்த வரலாற்றை வேலவன்கோதைக்குக் கூறுகிறாள்:

எகிப்துக்கும் தமிழ் நாட்டுக்கும் நெருங்கிய வாணிபம் நடந்து வந்த காலம் அது. சேர நாட்டுக்கு வடகிழக்கில் இருந்த புன்னாட்டு நீலக்கல் சுரங்கத்திலிருந்து அரிய பல நீல வைரக் கற்கள் அலெக்சாந்திரியா என்ற எகிப்து நாட்டுத் துறைமுகப் பட்டினத்துக்குச் சென்று ஏராளமாக விற்பனையாகி வந்தன. இந்த விற்பனையில் முக்கியமாக ஈடுபட்டவன் க்ளாடியஸ் என்ற யவன வியாபாரி. ஒரு முறை க்ளாடியஸ் அலெக்சாந்திரியாவிலிருந்து தமிழகத்துக்கு வரும்போது தன் மகள் டயாறுவை அழைத்து வந்தான்! அந்த யவன அழகியும் புன்னாட்டு இளவரசன் புனல்வேலியனும் நெருங்கிப் பழகத் தொடங்கி அவர்களுக்குள் காதல் உண்டாகிறது. புன்னாட்டு அரசனும், க்ளாடியஸ்-ம் எவ்வளவோ தடுத்தும் காதல் மேலும் மேலும் வளர்ந்து முற்றுகிறது. மனம் ஒடிந்த க்ளாடியஸ் ஒரே வெறுப்போடு யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் அலெக்சாந்திரியாவுக்குப் போய்விடுகிறான், மகளை இளவரசனிடம் விட்டுவிட்டு.

டயாறுவுக்கு ஒரு பெண் குழந்தை பிறக்கிறது. புனல்வேலியன் தந்தையின் மறைவுக்குப் பிறகு புன்னாட்டின் அரசனாகப் பட்டம் சூடும்போது தமிழகத்து இளவரசி ஒருத்தியை மணந்து கொண்டு பட்டத்துக்கு உரிய முறையில் தந்தையின் விருப்பத்தைப் பூர்த்தி செய்கிறான். என்றாலும் டயாறுவுக்கு ஓர் அரசியின் நிலையும் செல்வாக்கும் தந்து அன்போடு நடத்துகிறான். இப்படியிருக்கும்போது டயாறு தன் தந்தையின் மரணச் செய்தியை யவன வணிகர்கள் மூலம் கேள்விப்பட்டு வருந்துகிறாள். அலெக்சாந்திரியாவில் நடக்கும் நிலவு அம்மன் திருவிழாவுக்குச் சென்று தனது பெண் குழந்தைக்கு முடி இறக்கி வருவதோடு தந்தையின் கல்லறையையும் கண்டு வரவேண்டும் என்று ஆசைப்படுகிறாள் டயாறு.

அலெக்சாந்திரியா போன இடத்தில் தந்தையின் கல்லறையில் மயக்கம் போட்டு விழுகிறாள் டயாறு. உடம்பு பலவீனம் அடைகிறது. சில நாட்களில் குழந்தையை விட்டு விட்டு மடிகிறாள் டயாறு. மடிவதற்கு முன் தன் சகோதரனிடம் தன் குழந்தையைத் தமிழ் நாட்டுக்கு அவள் தந்தையிடம் அனுப்பிவிட வேண்டும் என்று வாக்குறுதி வாங்கிக் கொள்கிறாள்.

அலெக்சாந்திரியாவிலிருந்து திரும்புகிற வழியில் மரக்கலத்திலே கடம்பனுடைய தாக்குதலுக்கு உள்ளாகி வெள்ளைத் தீவுக்குக் கொண்டு வரப்படுகிறாள் நீலவல்லி.

''இதுதான் நான் வளர்ந்த கதை'' என்று சொல்லித் தான் புன்னாட்டு அரச மகள் என்பதற்கு அறிகுறியாகத் தன் நெற்றியில் பச்சை குத்தப்பட்டுள்ள நீலத் திலகத்தை வேலவன்கோதையிடம் காட்டுகிறாள் நீலவல்லி.

இருவரும் தீவிலிருந்து தப்பி ஓடத் தீர்மானித்து, வேலவன் புன்னாடு சென்று மரக்கலம் கொண்டுவரப் புறப்படுகிறான். பெருந்துருத்தி என்ற பவளத் தீவு வரை கடலில் நீந்தியே சென்று, அங்கிருந்த செவ்வந்தி அடிகளின் வாழ்த்தோடு ஒரு படகில் புன்னாடு சென்று, ஓர் இரகசிய வாணிப மரக்கலத்தை வாங்கிக் கொண்டு வெள்ளைத் தீவுக்குத் திரும்புகிறான் வேலவன்கோதை! நீலவல்லியும் வேறு சிலரும் மிகவும் இரகசியமாக வெள்ளைத் தீவிலிருந்து தப்பிச் செல்கிறார்கள் அந்த மரக்கலத்தில்! ஆனால் நடுக் கடலில் கடம்பன் வந்து பிடித்துக் கொள்கிறான்! நீலவல்லி மீண்டும் வெள்ளைத் தீவுக்கு வந்து கன்னிமாடத்திலே வாழ்கிறாள். வேலவன்கோதை நடுக்கடலில் நீலவல்லியின் வற்புறுத்தல் காரணமாகக் குதித்து நீந்திப் பெருந்துருத்திக்குச் சென்று செவ்வந்தி அடிகளைச் சேர்கிறான். நீலவல்லியை ஏதோ காரணத்தால் எவ்விதக் கோபமும் இல்லாமல் வழக்கம்போல் அன்பாக நடத்துகிறான் கடம்பன்! வேலவன்கோதையைக் கடம்பனுடைய சீற்றத்திலிருந்து மறைவாகச் சில நாட்கள் பெருந்துருத்தியில் இருக்க வேண்டும் என்று பாதுகாப்புச் செய்கிறார் செவ்வந்தி அடிகள்.

சேர நாட்டிலோ ஒவ்வொரு நாளும் வேலவன் கோதையின் வரவுக்காக ஆவலோடு காத்திருக்கிறான் சேரலாத மன்னன்!

# இரண்டாம்

## பாகம்

## அத்தியாயம் 1

# வீர விளையாட்டு

முல்லை மூதூர் என்ற வளமான ஊரிலே அந்த வீர விளையாட்டு நடந்து கொண்டிருந்தது. ''ஏறுகோள்'' என்னும் அவ்வீர விளையாட்டிலே ஆயர் குலத்து இளைஞர்கள் எல்லோரும் ஆண்மையோடு கலந்து கொண்டார்கள்.

வீர விளையாட்டு நடந்து கொண்டிருந்த களத்தைச் சுற்றி ஆடவரும் இளம் பெண்டிருமாக மக்கள் கூட்டம் புல் தரையெல்லாம் மொய்த்து நின்றது. ஊர்ப் பெருமக்களும், செல்வந்தர்களும், சிறுவர் சிறுமியர்களும் உயரம் உயரமான பரண்களிலே அமர்ந்திருந்தார்கள். இவர்கள் இருந்த பரண்களுக்குச் சற்றுத் தொலைவிலே, களத்தின் விளிம்பை யொட்டி, அழகிய வேலைப்பாடுகளோடு கூடிய சிறப்பான இருக்கைகளும் சில பரண்களிலே ஒய்யாரமாகக் காட்சி தந்தன! அந்த ஒய்யாரமான இருக்கைகளிலே அரச நம்பிக்கைக்குரிய சில முதன்மையான மன்றத்தார்களும் மூதூர் ஆயத் தலைவர்களும், முதுமையான பெருங்குடி வணிகர்களும் அமர்ந்திருந்தார்கள். அவர்களுக்கு நடுவிலே பெருமிதம் மிகுந்த முகத்தோடு, ஆனால் அதில் ஏதோ ஆவலும் கவலையும் அவ்வப்போது மின்னல் போன்று துவள்கிற நிலையிலே முல்லை மூதூர்த் தலைவன் வீற்றிருந்தான். சூலபாணி என்ற அந்தத் தலைவன் முல்லை மூதூரின் தலைவன் என்பதோடு உண்மைக்கும் வீரத்துக்கும் பேராற்றலுக்கும் புகழ்பெற்ற 'கோசர்' என்ற குலத்திலே தோன்றிய பழம் பெரும் மரபாளன்.

''தன்னுடைய பெரிய காளை, இந்த வீர விளையாட்டிலே கலந்து கொள்ளப் போவதால் பெருமிதமும் கவலையும் அவன் முகத்தில் மாறி மாறிப் பளிச்சிடு

இன்றன!'' என்று பரணிலே இருந்தவர்கள் பேசிக் கொண்டார்கள்.

''ஆமாம். இந்த மூதூரிலேயே வீரமும் ஆண்மையும் நிரம்பிய காளை மாடு அல்லவா சூலபாணியின் கொல்லேறு! அதனால் பெருமிதம் இருப்பது இயல்பு தானே! ஆனால் இந்தக் காளையின் கொட்டத்தை அடக்குவதற்காக எந்த வீர இளைஞன் களத்திலே குதித்து வெற்றி பெற்று அந்த வெற்றிக்குப் பரிசாகத் தன் மகளின் கைப்பிடிக்கப் போகிறானோ என்று கவலைப்படுகிறான். அந்தக் கவலையும் ஒரு தந்தைக்கு இயல்பாக இருக்கக் கூடிய கவலைதானே?''

இப்படிச் சொன்னார் பரணிலே இருந்த ஒரு முதிய கிழவர். எல்லாரும் விளையாட்டு ஆரம்பமாவதை மிகுந்த ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

கடும் புலிகளையும் எதிர்த்துத் தாக்கிப் போரிடக் கூடிய வலிமை வாய்ந்த நூற்றுக் கணக்கான காளை மாடுகள் முல்லை மூதூரிலே புகழ் கொண்டு திரிந்தன. வளமான பசும்புல் வெளிகளிலே மேய்ந்து மேனியையும் கொம்புகளையும் மேலும் மேலும் திமிரோடு வளர்த்துக் கொண்டு திரிந்தன அந்தக் காளைகள். 'ஏறு' என்ற சொல்லிலே ஒலிக்கும் வீரம் போதாது என்று இந்த வலிமை மிகுந்த காளை மாடுகளை அந்த மூதூர் மக்கள் 'கொல்லேறு' என்றும், 'மாக்காளை' என்றும் பெயரிட்டுச் செருக்கோடு பேணி வந்தார்கள். வானத்திலே மழைக் காலத்தில் எழுந்து திரண்டு ஆரவாரம் செய்கிற பெரிய பெரிய மேகங்களைப் போல் மேனி வண்ணமும் முறுக்கும் கொண்டு திமிர்ந்து நின்ற இந்தக் காளைகளை ஒவ்வொன்றாகத் தொழுவத்திலிருந்து களத்தை நோக்கி ஓட்டிவிடலானார்கள் முல்லை மூதூர் ஆயர்குல மக்கள்.

செருக்கும், தருக்கும் மேனி வண்ணமும், ஈட்டி போன்ற கூரிய கொம்புகளும், அச்சம் தரும் திமில்களும், உருட்டி விழிக்கும் வலிய கண்களும், அடங்காத பாய்ச்சலும் கொண்டு சாடுகிற இந்த மாக்காளைகளைக் கண்டு அஞ்சாமல் நின்று அடக்குவதற்காக முல்லை மூதூர் வீர இளைஞர்கள் ஆடையை இறுக்கிக் கட்டிக் கொண்டு மிடுக்கோடு மார்தட்டி நின்றார்கள், களத்தின் முகப்பிலே! கோசர் குலத்திலே உதித்த தலைவனின் மகளுடைய அழகும், இளமைப் பொலிவும் ஊரெல்லாம், நாடெல்லாம் அறியும். எனவே அந்தப் பொலிவையும் அழகையும் இரண்டு கண்களிலும் ஏற்றிக் கொண்டு காளைகளின் கொம்புக் கூர்மையிலேயே பார்வையைச் செலுத்தாமல் நின்ற இளைஞர்கள் பலர்.

முரசு அதிர்ந்தது. பம்பை முழங்கியது. தடித்துக் கொழுத்துப் பருத்துத் திமிர்ந்த கொழு காளைகள் ஒவ்வொன்றாகத் தொழுவிலிருந்து களத்துக்குள்ளே பாய்ந்து முரசும் பம்பையும் எழுப்பிய பேரோசையிலே கலந்து துள்ளிக் குதித்துச் சாடின!

படபட, தடதட, மடமட என்று முரசும் பம்பையும் அதிர்ந்து முழங்கின. காளைகள் கலந்தன. மக்கள் கூட்டத்தைக் கண்டு திமிறின சில! கூடியிருந்த இளைஞர்களும், சிறுவர் சிறுமியர்களும் எழுப்பிய நாவோசையிலே மருண்டு போய் மேனி சிலிர்த்தன சில. தலையை வளைத்துக் கொண்டு, கொம்புகளைக் கொண்டு குறி பார்த்தவாறு, திமிலிலே சீற்றத்தைப் படரவிட்டு, அங்கும் இங்கும் பாய்ந்தன சில.

இளைஞர்கள் களத்திலே பாய்கிறார்கள்! காளைகளும் காளைகளும் எதிர் எதிராகச் சாடுவது போல் ஏறுகளை நோக்கிப் பாய்கிறார்கள் வீர இளைஞர்கள்.

இதோ சூலபாணி என்ற கோசவீரனுடைய பரணிலே அவனுக்கு அருகிலே வந்து நின்றுகொள்கிறாள் கோசர் குலத்து மாசில் அழகி பொன்மணி! அவளுடைய பொன் வண்ணத் திருமேனியிலே ஒரு சிலிர்ப்பு. வனப்பு மிதக்கும் சுந்தர விழிகளிலே ஒரு தாபம்! நிலவு தவழும் அந்த எழில் முகத்திலே மேகக் கீற்றுப் படர்வது போல ஒரு துணுக்கம்! காளையைப் பிடித்துத் தன் கையைப் பிடிக்க வருகிறவன் யாரோ என்ற ஓர் ஏக்கம்! ஒரு கவலை!

முரசு அதிர்கிறது. பம்பை முழங்குகிறது. காளை மாடுகளும், காளை வீரர்களும் வீரச் சீற்றத்தோடு பொருது சாடுகிற அந்தக் காட்சியிலே ஆயிரம் ஆயிரம் விழிகள் கூடி நிற்கின்றன!

காளை மாடுகளின் கூரிய கொம்புகளைக் குறி பார்த்துப் பம்முகிறார்கள் வீர இளைஞர்கள். கொல்லேறு என்னும் அந்தக் ''கொல்லும் மாக்காளைகள்'' பார்ப்பவரின் இதயத்திலே வாளைச் செருகுவது போல அனல் மூச்சுச் சீறிக் கொண்டே வேகமாக அடர்கின்றன.

வாலைப் பிடித்தவர் சிலர்! அவர்கள் மாட்டின் காலிலே சிக்குண்டு மண்ணிலே புரளுகிறார்கள். கூரிய கொம்பைப் பார்த்துச் சாடி அந்தக் கொம்புகளிலே குத்துண்டு சரிகிறார்கள் சிலர். சுற்றி நின்று ஆர்வத்தோடு பார்த்தவாறு வீரக் காளைகளைப் பிடித்து வசமாக்கும் வீரக் காளையரை மாலையிட

லாம் என்று காத்து நிற்கும் கன்னிப் பெண்களோ இதயம் கலங்குகிறார்கள்.

இதோ! யாரும் எதிர்பாராதவாறு களத்திலே பாய்கிறான் அழலாடி என்ற வீரன்! அவன் அந்த முல்லை மூதூர் உடற் பயிற்சிக் கூடத்திலே யாவரும் அஞ்சக் கூடிய ஒப்பற்ற சூரன். வழி வழியாகப் போர் வீரர்களைத் தமிழ்ப் படைகளுக்கு வழங்கிய ஒரு வீர மரபிலே தோன்றிய மருதூர் என்ற ஊரைச் சேர்ந்த இளைஞன்.

''யார்! அழலாடியா?'' என்று தம்மையும் மறந்து வியப்பிலும் உவகையிலும் திகைப்பை வெளியிட்டார் சூலபாணி. தன் மகளின் அழகு அவனையும் மயக்கியிருக்கிறது என்பதில் அவருக்கு ஒரு உவப்பு!

''ஆம். அழலாடிதான்! ஆயர் மக்களுடைய இந்த விளையாட்டிலே ஒரு போர் வீரன் புகுவது எந்த வகையில் முறையாகும்?'' என்று அதற்குள்ளேயே முணு முணுக்கத் தொடங்குகிறார்கள் சில இளைஞர்களின் தந்தைமார்கள்.

''முறைமை என்றெல்லாம் பேசாதீர்கள். யாராக இருந்தால் என்ன? வீரம் வீரம்தானே? அதை மதித்துப் பெண்ணைக் கொடுப்பதுதான் தமிழ்க் குலத்தின் பண்பாடு!'' என்று பேச்சை முடித்தார் ஒரு முதியவர்.

அழலாடி களத்துக்குள்ளே பாய்ந்தான். காளை மாடுகளில் எல்லாம் வலியதான, திமிர் கொண்டதான, மாபெரும் மாக்காளையான கோசர்களின் கொல்லேறு களத்தின் நடுவிலே ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து சீறிக் கொண்டிருந்தது.

அழலாடி பாய்ந்தான், அழற் பாய்ச்சலாக! ஒரே பாய்ச்சல்! ஒரே பிடி! அரக்கப் பிடி அது! இரண்டு கொம்புகளையும் வேதாளம் பாய்ந்து பிடித்து மடக்குவது போல ஒரே மடக்கு! வசமான பிடி; வலிமையான மடக்கு! வீறு அடங்கி, வலிமை ஒடுங்கி, விசையிழந்து உமிழ் நீரும், வாய் நுரையும் சிந்தி மடங்கியது அந்த ஏறு. ஆனாலும் கொல்லேறு அல்லவா? மிதிலைச் சிலிர்த்துத் திமிற முனைந்தது. அதனுடைய வன்மை அடங்கும்படி மேனியைத் தழுவி வருடி அதன் மேலே தோன்றி நின்றான் அழலாடி என்ற அந்த அடல் ஏறு!

ஃ ஃ ஃ



முதியவர்களுக்கும், அறவோர்களுக்கும் நெய் கலந்த சோறு தமிழ் நாட்டுத் தொன்மை மரபுப்படி வழங்கப்பட்டது. பறவைகள் நல்ல குறிகள் காட்டின. வானம் களங்கமின்றி இருந்தது. மாசற்ற நிலவு உரோகிணியுடன் பொருந்தியிருந்தது. வரிசை வரிசையாகக் கால்கள் நாட்டி அவற்றின் மீது கட்டப்பட்ட பந்தலின் கீழே வெண் மணலைப் பரப்பினார்கள். விளக்குகள் ஏற்றப்பட்டன. பூவாலும், தழைகளாலும் மணப் பந்தலை நலம் செய்தார்கள்! பெரிய முழவும் பல்லியங்களும் ஒலித்தன. சங்கங்கள் மங்கள முழக்கம் செய்தன! கழுவி எடுத்த மலர் இதழ்களால் செய்த தெய்வ வடிவம், வாகைப் பூவின் மேலும் அறுகம் புல்லின் மேலும் வைக்கப்பட்டது. தமிழர்களுடைய தொன்மையான திருமண முறைப்படி அந்தத் தெய்வ வடிவத்துக்குப் பூ மொட்டுக்களாலும் வெண்ணூலாலும் எழில் செய்து புனித உடை தரித்தார்கள்.

நீராட்டி அழகுக் கோலம் புனைந்து மணமகளையும் மணமகனையும் அழைத்து வந்தார்கள். மழைத் துளிகள் சிதறியது போல் காட்சி தந்து விளக்கொளியிலே மினுங்கிய புதிய வெண் மணல் பரப்பிய மண மன்றத்தில், அழலாடியும், பொன்மணியும் பூவினால் நலம் செய்யப்பட்ட எழிற் கோலத்தில் வீற்றிருந்தார்கள்! நூறு நூறு விளக்குகள் நூறு நூறு சந்திரர்களாக ஒளிபரப்பின!



★

★

நண்பன்: என்ன கத்திரித்துக் கொண்டிருக்கிறாய்?

அவன்: மனைவி தன் ஜேபியை எப்பொழுதும் தடவிக் கொண்டிருந்ததால் விவாகரத்து செய்துவிட்டானாம் ஒரு கணவன். அந்தச் செய்தியைக் கத்திரித்துக் கொள்கிறேன்.

நண்பன்: கத்திரித்து?....

அவன்: என் ஜேபியில் அதை வைத்திருக்கப் போகிறேன்!

ஆதாரம்: 'மிரர்'

அனுப்பியவர்: ஏ.கே. கந்தசாமி

நட்சத்திரங்கள் இயபலனைத் தராத நல்ல வளர்பிறை நாளின் விடியற் காலையிலே சில பெண்கள் குடங்களைத் தாங்கவும், சிலர் அகன்ற குடங்களை ஒவ்வொருவராக அஞ்சலிக்கவும், வயது முதிர்ந்த பெண்கள் குரவையிட்டார்கள்! புதல்வர்களைப் பெற்ற தாய்மார்கள் பூ இதழும் நெல்லும் இடப்பட்ட புனிதத் தண்ணீரை மணப்பெண்ணின் கருங்கூந்தலிலே பெய்து, ''கற்பு நெறியில் நின்று, கணவனுக்குத் துணையாக நிலையாய் வாழ்வாயாக!'' என்று வாழ்த்துக் கூறினார்கள்!

பண்டைத் தமிழ் நூல்களிலே விரிவாகச் சொல்லப்பட்டிருக்கிற இத்தகைய திருமணச் சடங்குகள் வழுவின்றி, எவ்வித மாற்றமும் இல்லாமல், சூலபாணியின் ஆர்வத்திலும் கண்காணிப்பிலும் இனிதே நடந்தேறின.

அன்றிரவு பெண்கள் எல்லாரும் ஒன்று கூடி மணமகள் பொன்மணியைப் பொன் மணிகளாலும் நவரத்தினக் கற்களாலும் அலங்காரம்செய்து நிலா மண்டபத்துக்கு அனுப்பினார்கள்!

இதுவரை வீர விளையாட்டுக்களிலும், இளமையின் போர்ச் செயல்களிலும் வாகை முழக்கங்களிலும் தன் வாலிப நாட்களைக் கழித்துவந்தவன் அழலாடி. அடக்குவது என்பதே தெரியும். அடங்குவது என்பதை அறியாத காளை அவன்! அப்படிப்பட்ட வீரன் அடங்கி ஒடுங்கி நின்றான் நிலா முற்றத்திலே, பொன்மணியின் வரவை நோக்கி !

ஆம்; அன்னமும் மயிலும் என்றெல்லாம் புலவர்கள் பாடுவார்கள் ! அந்தப் பாடல்களை எல்லாம் எப்போதோ வழி தப்பிக் கவியரங்குகளிலே புகும்படி நேரிட்டால் கேட்டிருக்கிறான் அழலாடி! இப்போது அந்தப் பாடல்கள் எல்லாம் வடிவம் தாங்கி நிலா முற்றத்துக்கு வந்து அவன் முன்னே நின்றன !

காளைகளோடு போரிட்டிருக்கிறான். காட்டுப் புலிகளை எதிர்த்திருக்கிறான் இது வரை! ஆனால் மான்களையும், மயில்களையும் எதிர் எதிராகச் சந்தித்ததில்லை அவன்! கிளிப் பிள்ளைகளோடு இதுவரை பேசி அறியான் அவன்! அத்தி மரங்களில் இருந்த பறவைகளை விரட்டியிருக்கிறான் அவன்! ஆனால் இப்போதோ ?

நிலவு — ஆம். நிலவு பொழியும் இரவுகளிலே பயிற்சிக் களத்தில் இறங்கிப் பல மல்லர்களோடு உடற்போர் செய்தவன் அழலாடி! இப்போது நிலா முற்றத்திலே அத்தகைய போர் எதுவும் இல்லைதான். ஆனாலும் நெஞ்சு ஏனோ படபடத்தது. புலியையும், யானைக் கூட்டங்களையும், கொல்லேறுகளையும் எதிர்த்த போது அவன் உள்ளத்தில் அச்சம் என்பதே இருந்ததில்லை. ஆனால் இப்போது ஒரு சொல்ல முடியாத அச்சம்! அச்சமா அது? அழலாடிக்கே புரியவில்லை, அந்த உணர்ச்சி என்ன என்று!

முதல் இரவு அது! உள்ளத்தில் ஒரு புதுமை! நெஞ்சத்தில் ஒரு படபடப்பு ! உடம்பு முழுவதும் ஏதோ ஓர் இனந் தெரியாத கலக்கம் !

''பெண்ணே!'' என்றான். அவள் சிரித்தாள். அவனும் சிரித்தான். நிலவு வானிலே நின்று சிரித்தவாறு மிதந்து சென்றது.

''பொன் மணி'' என்றான். அவள் புன்முறுவல் செய்தாள். எங்கோ ஒரு மரக்கிளையில் இசைப் பறவை ஒன்று கிளுகிளுத்தது !

''நான் உன்னை இதற்கு முன்பு பல முறை பார்த்திருக்கிறேன்'' என்றான் அழலாடி. இமைகளை நன்றாக அகலத் திறந்து நிலவின் ஒளியில் அந்த வீர மகனுடைய வீரக் கண்களைப் பார்த்தாள் பொன்மணி.

''நான் உன்னைப் பார்த்திருக்கிறேன். ஆனால் நீ என்னைப் பார்த்திருக்கிறாயா?'' என்று கேட்டான் அழலாடி. அவனுக்கே அந்தப் பொருளற்ற கேள்வியிலே சிரிப்பு வந்தது! பொன்மணியும் சிரித்தாள். குலுங்கச் சிரித்தாள். மேனி குலுங்கச் சிரித்தாள். நிலவு அந்தப் பொன் மேனியிலே தன் பொற்கோடுகளைப் புள்ளி வைத்துக் கோலமிட்டது!

''பொன்மணி! என்னோடு பேசுவதற்கு உனக்கு அச்சமாக இருக்கிறதா? வெறும் முரடன் என்று நினைக்கிறாயா?''

இவ்வாறு கேட்டான் அழலாடி. பொன்மணி அழலாடியை ஏறிட்டுப் பார்த்தாள்.

''அச்சமா? அல்லது வெட்கமா ? நாணமா ?''

பொன்மணி நிலா மாடத்தின் உள் அறைக்குச் சென்று வெள்ளிப் பூங்குவளையிலே பழப்பானகம் எடுத்து வந்தாள்.

அந்தப் பூங்குவளையை அழலாடியிடம் நீட்டும் போது, அவன் அந்தக் குவளையோடு சேர்த்து, அதைத் தாங்கி நின்ற பொற்கரத்தையும் பற்றினான்.

''இல்லை! இல்லை! கையை விடுங்கள்!'' என்றாள் பொன்மணி, ஏதோ அச்சமும் துணுக்கமும் துயரமும் திகைப்பும் ஒருங்கே அடைந்தவளாக !

அழலாடி வியப்படைந்தான். இயல்பான பெண்மையின் நாணமா அது? முகத்தில் ஏன் ஒரு கடுகடுப்புத் தோன்ற வேண்டும்? பொதுவாக எல்லாப் பெண்களும் இப்படித்தான்

★பலஹீனமானவர்கள் எப்பொழுதும் மன்னிப்பது கிடையாது. மன்னிப்பது என்பது பலசாலிகளுடைய இயல்பாகும். மன்னிக்கும் காரியம் தான் போர்வீரனுடைய ஆபரணமாகும்.

★தன்னுடைய சம்மதம் இல்லாமல் எந்த மனிதனும் கௌரவத்தையும், சுயமரியாதையையும் இழப்பது கிடையாது. நம்முடைய கௌரவத்தையும் சுயமரியாதையையும் (நம்மைத்தவிர) மற்றவர்களால் காப்பாற்ற முடியாது. -- மகாத்மா காந்தி

தொகுப்பு: பொன்சின்னன்.

நடந்து கொள்வார்களோ? மாலையிட்ட கணவனிடமா?

''பொன்மணி! ஏன் இப்படி அதிர்ச்சி அடைகிறாய்?'' என்று திகைப்போடு தன் மணமகளை, தனது தலைவியை, தன் வாழ்வுத் துணைவியைக் கேட்டான் அழலாடி !

''ஒன்றுமில்லை ! என் முகத்தைப் பார்த்தால் அதில் அச்சம் தெரிகிறதோ ?'' என்று கவலையோடு கேட்டாள் பொன்மணி.

''பொன் மணி, எனக்கு அதெல்லாம் தெரியாது. இது வரை போர்க் கூடத்திலே மல்லாடியவன் நான் ! மென்மையும், மெதுமையும் எனக்குத் தெரியாது. ஒரு வேளை அதனால்தான் நீ என்னைக் கண்டு அஞ்சுகிறாயோ?''

இப்படித் தன் கணவன் கேட்டதும் பொன்மணி விழிப்படைந்தாள். முதல் இரவின் முதலாவது சந்திப்பிலேயே ஒரு தப்பெண்ணம் உருவாகிவிடக் கூடாது என்று மெய்யாகவே மனம் கலங்கினாள் அவள்!

''அன்பரே, நீங்கள் வீரம் நிரம்பியவராகவும், உடல் ஆற்றல் உள்ளவராகவும் இருப்பது குறித்து அஞ்சவில்லை. அளவுகடந்த களிப்பு அடைகிறேன்—''

''களிப்பா! களிப்படைவதாலா உன் முகத்தில் இப்படி ஒரு கலக்கமும் ஒரு திகைப்பும் ஏற்பட வேண்டும்?'' என்று கேட்டான் அழலாடி.

பொன்மணி ஒரு விநாடி இமைகளைத் துடைத்துக் கொண்டாள். பிறகு சொன்னாள் : ''களிப்பு உங்களுடைய ஆண்மையை உங்களுடைய ஆற்றலை, உங்கள் வீரத்தை எண்ணி! ஆம், இத்தனையும் ஒருங்கே நிரம்பிய ஒரு வீரரின் கையைப் பிடிக்கும் பேறு எனக்குக் கிடைத்ததே என்று மெய்யாகவே நான் பெருமை அடைகிறேன். இதில் இம்மியும் புகழ்ச்சியில்லை.''

பளீர் என்று அந்த வீரன் மறுமொழி சொன்னான்:

''என் கையைப் பிடிப்பதில் மகிழ்ச்சி என்றால், நான் உன் கையைப் பற்றியதில் உனக்கு ஏன் இத்தனை அச்சம்? இத்தனை திகைப்பு?''

தமிழ்க் குலத்துக் கற்பரசிகளுக்குரிய பணிவும் ஆர்வமும் பொங்கிய உள்ளத்தோடு தலை குனிந்து, உடல் வளைத்து, அழலாடியின் திருவடிகளைத் தொட்டுக் கண்ணிலே ஒற்றிக் கொண்டாள் பொன்மணி. மறு விநாடி 'பொல பொல' என்று கண்ணீர்த் துளிகள் ஆறாகக் கொட்டின அந்த அழகிய அகன்ற விழிகளிலே! நிலவின் ஒளியில் ஒவ்வொரு துளிக் கண்ணீரும் ஒவ்வொரு முத்தாக மின்னி நிலாமுற்றத்திலே சிதறி மினுங்கியது!

''கண்ணே, பொன்மணி, என்ன இது?'' என்று பதறிக் கொண்டே அவள் அருகிலே சென்று அந்தப் பூங்கரங்களை மறுபடியும் பற்றினான், இல்லை, பற்ற முயன்றான் அழலாடி!

'சரேல்' என்று ஒதுங்கி நின்று கொண்டாள் பொன்மணி. மீண்டும் அவளுடைய விழிப் பொய்கையிலே துயரக் கண்ணீர் பெருக்கெடுத்தது!

''அன்பரே, என்னை மன்னிக்க வேண்டும். இந்த இரண்டு கைகளும் தங்களுக்கு உரியவை. இந்த உடம்பு, இந்த உள்ளம், இந்த உயிர் அனைத்தும் உங்களுடையவை! அதில் அந்த ஒன்றிய உரிமையில் ஏதும் மாற்றமில்லை. ஆனால் உங்கள் உடைமைகளையெல்லாம் நீங்கள் உங்கள் உரிமைகளாக ஆக்கிக் கொள்வதற்கு முன்பு செய்ய வேண்டிய, செய்து முடிக்க வேண்டிய ஒரு கடமை உங்களுக்காகக் காத்திருக்கிறது. அதைச் செய்து முடித்த பிறகு இந்தக் கைகளோடு உங்களுடைய இந்த உரிமைகளோடு நீங்கள் உறவாடலாம்! அது வரை, அது வரை, ஊருக்கும் உலகுக்கும் நான் உங்களுடைய உடைமை. ஆனால் நம் இருவருக்குள்ளுமோ என்றால்—''

திகைப்பு உடம்பு முழுவதையும் அதிர்ச்சியுறச் செய்த நிலையிலே அழலாடி அப்படியே இதழ் எல்லாம் வறண்டு போய் நின்றான். அவனுக்கு ஒன்றும் புரியவில்லை !

''அன்பே. இந்தப் பழப் பானகத்தை அருந்துங்கள் முதலில்! உலகத்தின் கண் முன் ஒரு பெரிய சாதனையைச் செய்து முடித்து விட்டீர்கள் வீர விளையாட்டுக் களத்திலே. உலகம் என்னை உங்களிடம் வழங்கி விட்டது. ஆனால் நான் என்னை உங்களுக்கு வழங்கும் முன்பு நீங்கள் செய்து முடிக்க வேண்டிய வீர விளையாட்டு இன்னொன்று இருக்கிறது'' என்று சொல்லிப் பூங்குவளையை அழலாடியின் கையிலே கொடுத்தாள் பொன்மணி!

(தொடரும்)

## முன்கதைச் சுருக்கம்

கூன்னிமலைப் பகுதியில் நீர்மின் நிலையம் அமைக்கும் வேலை துரிதமாக நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. மலைச் சரிவில் பவர் ஹவுஸுக்குச் செல்லும் டிராலியை இயக்கும் வேலை காளியண்ணனுடையது. காளியண்ணனின் தங்கை வள்ளி, கபடமற்ற இனிய சுபாவம் கொண்டவள். அவள் அழகும் அடக்கமும் உளர் அதிகாரி குமரனை கவர்கின்றன.

ஒருமுறை பொறுப்பில்லாமல் நடந்து கொண்ட காளியண்ணனைக் குமரன் கண்டிக்க நேர்கிறது. இதனால் குமரன்மீது காளியண்ணன் வெறுப்புக் கொள்கிறான். கோபம் பொங்கும் மனநிலையுடன் அவன் முள்ளி மலைக்குச் செல்கிறான். அங்கு எதிர்பாராத விதமாகப் புலியினால் தாக்கப்பட்டுப் பலத்த காயமடைகிறான். அதிகாரி குமரன் காளியண்ணன் சிகிச்சை பெற ஏற்பாடு செய்கிறான். டாக்டர், காளியண்ணனின் ஒரு கரத்தைப் புரையோடிப் போனதால் வேறு வழியின்றி வெட்டி எடுத்துவிடுகிறார். தான் கரம் இழந்ததற்குக் குமரன்தான் காரணம் என்று காளியண்ணன் தவறான முடிவுக்கு வருகிறான். அவனுக்குக் குமரன்மீது வெறுப்பும் வன்மமும் வளர்கின்றன.

சுருளியாற்றில் பெருவெள்ளம் வந்தபோது ஒரு சமயம் கூர்க்கா போலனின் உதவியுடன் குமரனின் உயிரைக் காப்பாற்றுகிறாள் வள்ளி. தன் உயிரைக் காத்துக் கொடுத்த வள்ளியிடம் தன் உள்ளத்தைக் கொடுக்கிறான் குமரன். வள்ளியோ தன் அண்ணனின் கோபத்தை எண்ணி அஞ்சி நடுங்குகிறாள்.

கூலி வேலை செய்து பிழைத்த வெள்ளாத்தாளின் மகள் மங்கா துடுக்குப் பெண். பெரிய வாயாடி. காளியண்ணனுக்கும் அவளுக்கும் இடையில் சதா ஏதேனும் தர்க்கம் நடந்துகொண்டே இருக்கும். நாளாவட்டத்தில் காளியண்ணன் மங்காவின் முரட்டு சுபாவமும் அவளது துடுக்கான பேச்சும் மதர்ப்பான மேனியுமே தன்னை ஆட்கொண்டு விட்டதை உணருகிறான். தாய் வெள்ளாத்தாள் நோய்ப் படுக்கையில் வீழ்ந்தபோது, மகள் மங்கா வேலைக்குப் போகிறாள். காளியண்ணன் அவளைக் கூலி வேலை செய்யப் போக வேண்டாமென்றும் தன் வீட்டுக்கே தாயுடன் வந்து தங்கி இருக்குமாறும் கேட்டுக் கொள்கிறான். இதற்கு ஒப்புதல் தராவிட்டாலும் மங்காவும் அவனை விரும்புகிறாள் என்பது தெளிவாகிறது.

# முள்ளும் மலரும்

## உமாசந்திரன்

### முதல் பரிசு நாவல்





குமரனின் நண்பன் வீரமணி தன் தங்கை கனகாவுடன் மலைப் பகுதிக்கு விடுமுறையில் வருகிறான். வீரமணிக்குக் கனகாவைக் குமரனுக்கே மணமுடித்து வைக்க வேண்டும் என்ற ஆவல். ஆனால் குமரன் தான் கனகாவைத் தன் தங்கையாகப் பாவித்துப் பழகி விட்டதாகக் கூறி மறுத்து விடுகிறான்.

கனகாவுக்கு வேறு ஒரு நல்ல இடத்தில் திருமணமாகிறது. பட்டண நாகரிகத்தில் மூழ்கியிருந்த கனகாவுக்கு மலைப் பிரதேசமும் அதன் மக்களும் பிடிக்கவில்லை. எனினும் அவள் கணவனுக்கும் கள்ளிமலைப் பகுதியிலேயே உத்தியோகம் மாற்றலானதால் அவர்கள் குமரனோடேயே வந்து தங்கியிருக்க நேரிடுகிறது. குமரனுக்கு வள்ளியிடம் ஏற்பட்டுள்ள காதலை அறிந்தபோது அருவருப்படைகிறாள் கனகா.

மாயாண்டிக்குத் தன் தோழன் காளியண்ணனிடம் பெரு மதிப்பு உண்டு. மாயாண்டியின் பெண்சாதி அங்காயி கணவனைப் படாதபாடு படுத்தி வைக்கிறாள். உலையைப் பொங்கவிட அவளுக்கு விருப்பமில்லையானாலும் ஊர்வம்பு பேச என்றும் தயார்தான். பட்டணத்தில் பிறந்தவள், நாலு வரி எழுத்துக் கூட்டிப் படிக்கத் தெரிந்தவள் என்ற பெருமையுடன் அவள் சதா டீக்கடையில் உட்கார்ந்து வம்பு பேசுவாள். ஒருநாள் அங்கு அண்ணனைத் தேடிக் கொண்டு வள்ளி வந்தபோது, 'குமரனை மயக்கிய கள்ளி' என்று அங்காயி அவளைக் குறித்து வம்பு வளர்க்கிறாள்.

அந்தஸ்து வேற்றுமைக்கும், அண்ணனின் கோபத்துக்கும் அஞ்சிய வள்ளி வீடு திரும்பிக் குமுறி அழுகிறாள். அஞ்சலை அத்தையிடம் தன் மனத்தில் இதுகாறும் பொத்தி வைத்திருந்தவற்றை உடைத்துச் சொல்ல முற்படுகிறாள்.

இனி மேலே கதையைத் தொடரலாம்:

## அத்தியாயம் 24

வள்ளி படும் வேதனையைக் கண்டு அஞ்சலையத்தை தவித்துப் போய் விட்டாள். அவளைக் கட்டியணைத்துக் கொண்டு கண்ணீரைத் துடைத்தாள். அத்தையின் அரவணைப்பு வள்ளிக்கு இதமாயிருந்தது. அவள், எப்படியோ தன்னைச் சமாளித்துக் கொண்டு கூற ஆரம்பித்தாள். அவள் கூறக்கூற அஞ்சலை அத்தையின் கண்கள் ஆச்சரியத்தால் அகன்றன. நம்பிக்கையை மீறிய அதிசய உணர்ச்சி அவளைப் பேச்சிழக்கச் செய்து விட்டது. திறந்த வாய் மூடாமல் அசைவற்று உட்கார்ந்து கேட்டுக் கொண்டிருந்தாள்.

ஒன்று விடாமல் ஆதியோடந்தமாகக் கூறி முடித்த வள்ளி, ''அத்தை! நீயே சொல்லு, இப்படியெல்லாம் நடந்திடுச்சே இது சரிதானா....? அந்த ஐயா மேலே அப்பழுக்குச் சொல்ல முடியாது. நான்தான் தப்பா நடந்துக்கிட்டேனா? என் மனசே என்னைக் குத்தம் சாட்டிக்கிட்டிருக்கு, அத்தை. சரியோ தப்போ எதுவானாலும் உன் வாயிலேயிருந்து கேட்டாத்தான் என் மனசு நிம்மதிப்படும். சொல்லி ஆறத் தாயாருக்குச் சமமா நீதானே எனக்கு இருக்கே!'' என்று கூறியவாறு அத்தையின் கழுத்தைக் கட்டிக் கொண்டு விம்ம ஆரம்பித்த போதுதான் அவளுக்குத் தன் உணர்வு ஏற்பட்டது.

வள்ளியை அன்புடன் அணைத்துக் கொண்டாள். ''வள்ளிக் கண்ணு, ஏம்மா அதைரியப்படறே? நீ சின்னப்பெண்ணா இருக்கச்சே புடிச்சு உன்னைப்பத்திக் காளித் தம்பிக்குப் பெருமை புடிபடாது. சீமான் வீட்டிலே பொறக்க வேண்டிய பொண்ணு நம்ம வீட்டிலே பொறந்திருக்குன்னு சொல்லிச் சொல்லி உன்னைத் தலையிலே தூக்கி வைச்சுக்கிட்டுக் குறுக்கும் நெடுக்கும் ஓடிக்கிட்டிருக்கும். நீ சீமான் வீட்டிலே பொறக்காட்டாலும் சீமான் வீட்டிலே வாழ்க்கைப்படற அதிர்ஷ்டம் உனக்குக் கட்டாயம் உண்டுன்னு அந்தப் புலியூர் ஜோசியர் அடிக்கடி சொல்லுவாரு. அதும்படியேதான் எல்லாம் நடந்திருக்கு. குறையும் நல்லபடியா நடந்து உன்னோட மனசு போல உனக்கு மாங்கலியம் கிடைக்கணும்.'' — கனிவு நிறைந்த குரலில் அஞ்சலையத்தை இவ்வாறு கூறிக் கொண்டிருக்கும் போதே வெளியிலிருந்து காளியண்ணனின் குதூகலமான குரல் கேட்டது.

''வள்ளி..... வள்ளி.....!''

''அண்ணன் வந்திடுச்சு!'' என்று பரபரப்புடன் எழுந்த வள்ளி வாயிலுக்கு ஓடினாள்.

ஒற்றைக் கையில் ஏந்திய நாலைந்து பொட்டலங்களுடன் வேலிக்கு வெளியே நின்று கொண்டிருந்த காளியண்ணன் வள்ளியைப் பார்த்ததும், ''வள்ளிக் குட்டி, இப்படி வா. வேலிக் கதவைத் திறந்து விட்டுடு, கண்ணு!'' என்று அன்பு பொங்கக் கூறினான்.

தழுதழுக்கும் நெஞ்சுடன் ஓடிச் சென்று வேலிக் கதவைத் திறந்து விட்ட வள்ளி, அவன் கையிலிருந்த பொட்டலங்களை வாங்கிக் கொள்ளக் கையை நீட்டினாள்.

காளியண்ணன் ஒரே உற்சாகமாயிருந்தான். ''இப்பவே குடுத்திடு வேன்னு நெனைச்சயா வள்ளிக்குட்டி? அதெல்லாம் முடியாது. உள்ளே வா, அப்புறம் பேசிக்கிடலாம்'' என்று கூறிக் கொண்டே கேசச் சுருள்களைச் சிலுப்பியவாறு உள்ளே பாய்ந்து சென்றான்.

''வா தம்பி!'' என்று வரவேற்ற அஞ்சலையத்தை, ''உனக்காக எவ்வளவு நேரமாக் காத்திருக்கோம், தெரியுமா? எங்கே முள்ளிமலைக்கே போயிட்டேயோன்னுகூட நான் சொல்லிக்கிட்டிருந்தேன்'' என்றாள்.

காளியண்ணன் சிரித்தான். ''காலையிலே இருந்த ஆத்திரத்துக்கு முள்ளிமலைக்கே போயிடலாமான்னுதான் நெனைச்சேன். புறப்படக்கூடப் புறப்பட்டேன். அப்பத்தான் முனியாண்டியண்ணன் லாரியிலே உக்காந்து டீக்கடைப் பக்கமா வந்திச்சு. கீழூருக்குப் போயிட்டு உடனே திரும்பிடப் போறேன், நீயும் வான்னு கேட்டுச்சு. சரின்னு லாரியிலே ஏறி உக்காந்திட்டேன்'' என்றான்.

''இத்தனை நேரமும் கீழூருக்கா போயிருந்தே அண்ணே?''

''பின்னே, முள்ளிமலையிலிருந்து இந்தச் சாமானெல்லாம் வாங்கி வர முடியுமா? இப்ப வாங்கிக்க வள்ளிக்குட்டி, உனக்காகத்தான் இதெல்லாம்.''

''எனக்காகவா? என்ன பொட்டலங்கள் இதெல்லாம்?''

''பிரிச்சுப் பார்த்தாத்தானே தெரியும்?'' என்று சிரித்தான் காளியண்ணன்.

வள்ளி பிரித்துப் பார்த்தாள். சிறிய பொட்டலங்களில் ஒன்றில் கண்ணாடி வளையல்கள். இன்னொன்றில் கழுத்துச் செயினும், காதணியும். கில்ட் நகைகள்தான் என்றாலும் பளிச்சென்று கண்ணைப் பறிக்கிற மாதிரி இருந்தன. பெரிய பொட்டலங்கள் இரண்டில் ஒன்றைப் பிரித்த போது வள்ளியின் வியப்புக்கும் மகிழ்ச்சிக்கும் அளவேயில்லை.

அவள் வெகு நாட்களாக விரும்பிய மயில் வண்ணப் புடவை. அந்த மாதிரிப் புடவை வேண்டும் என்று மூன்று நான்கு மாதங்களுக்கு முன்பு எப்போதோ காளியண்ணனிடம் சொல்லியிருந்தாள் அவள். இப்போது அதை ஞாபகம் வைத்துக் கொண்டு வாங்கி வந்திருக்கிறாயே, இந்த அண்ணனின் அன்புக்கு இணையேது?

''இது இந்த மங்காக் குரங்குக்கு....'' என்று கூறிக் கொண்டே இன்னொரு பொட்டலத்தை வள்ளியிடம் கொடுத்தான் காளியண்ணன்.

''தம்பி! தேவலையே, மங்காவை மறக்காமே அதுக்கும் வாங்கி வந்திருக்கியா ?'' என்று கேட்ட அஞ்சலையத்தை தொடர்ந்து கூறினாள்: ''இருந்து சாப்பிட்டுட்டுப் போகச் சொன்னேனே அதை. என்னமோ பாவம், ஆத்தாவை நினைச்சுக்கிட்டு வீட்டுக்குப் போயிடுச்சு. இருந்திருந்தால் ரொம்ப சந்தோஷப்பட்டிருக்கும்.''

''அதுவும் உங்களைத் தொரத்திக்கிட்டுச் சம்பாதேவிக் கோயிலுக்கு வந்திருச்சில்லே? தெரியும் எனக்கு!'' என்றான் காளியண்ணன் சிரித்துக் கொண்டு.

'' அண்ணே! எல்லாம் சேர்த்து ரொம்பப் பணம் பிடிச்சிருக்குமே !'' என்றாள் வள்ளி.

''ஆமாம் தம்பி, ஏது இவ்வளவு பணம்?'' என்று கேட்டாள் அத்தை.

''பணத்துக்கென்ன பிரமாதம். கைக் கடியாரத்தை வித்திட்டேன்'' என்றான் காளியண்ணன் அலட்சியமாக.

''கடியாரத்தை வித்திட்டயா? என்ன தம்பி சொல்றே? அந்தக் கடியாரத்தை ரொம்ப ஆசையா வச்சுக்கிட்டிருந்தியே, ஏன் வித்தே?''

''கடியாரத்தைக் கட்ட வேண்டிய கைதான் போயிடுச்சே. இனிமே அந்தக் கடியாரம் இருந்தா என்ன, இல்லாட்டா என்ன?'' என்றான் காளி.

''போ அண்ணே! நீ இப்படியெல்லாம் பேசினால் எனக்கு எவ்வளவு கஷ்டமாயிருக்குத் தெரியுமா ? எனக்கு இதெல்லாம் வாங்கணும்னு அவசியமா இப்போ? இதுக்காகவா கடியாரத்தை விப்பாங்க?'' என்றாள் வள்ளி.

''ஏ வள்ளிக்குட்டி, உன்னைவிடவா எனக்கு அந்தக் கடியாரம் பெரிசு? நீ உன் வாயைத் திறந்து ஒண்ணும் கேக்கமாட்டே. அதுக்காக நான் சும்மா இருந்திடறதா? இதெல்லாம் வேணும்னு உனக்கு ஆசை இல்லையா ? நீயே சொல்லு. உன் மனசைப் புரிஞ்சுக்கிட்டு நானே செய்யணுமா, வேண்டாமா?'' என்று கேட்டான்.

''செய்ய வேண்டாம்னு நான் சொல்லலே அண்ணே. இப்ப என்ன அவசரம்னுதான் கேக்கறேன்.''

## எதிர்வீட்டு ஜன்னல்!



அனுப்பியவர் வி. ஸ்ரீதரன்.

ஆதாரம்: 'டிட் பிட்ஸ்'

இத்தாலியில் மிலான் நகரத்தைச் சேர்ந்த கொராடினு என்ற பெண் முக்கால்வாசி நேரத்தை வீட்டு ஜன்னலில் நின்று கொண்டு வேடிக்கை பார்ப்பதிலேயே கழித்தாள். எதிர் வீட்டிலிருந்த கணவனும் மனைவியும் எப்பொழுது பார்த்தாலும் சண்டை போட்டுக் கொண்டிருப்பார்களாம். கணவன், மனைவியை அடிக்கக் கையை ஓங்கிக் கொண்டு வருவானும். இதுதான் கொராடினு தினமும் பார்க்கும் காட்சி. ஒரு நாள் கொராடினு இனியும் அதைச் சகிக்க முடியாது என்று கருதித் திருமணப் பதிவு அதிகாரியிடம் எதிர் வீட்டுத் தம்பதிகளைப் பிரித்து அப் பெண்ணுக்கு விடுதலை வாங்கித் தரச் சென்றாள். சென்றால், அங்கே அதிகாரியாக இருந்தது எதிர் வீட்டுக் கணவனே! அத்தம்பதிகளைப் பிரிக்க முடியாது என்று புரிந்து கொண்ட கொராடினு தன் வீட்டைக் காலி செய்துவிட்டு வேறு இடத்துக்குப் போய் விட்டாள்!

''என்னமோ திடீர்னு தோணிச்சு, வள்ளி. கீழூர்க் கடை வீதியிலே நின்னுக்கிட்டிருந்த போது மேளதாளத்தோட பொண்ணும் மாப்பிள்ளையும் கார்லே உக்காந்து ஊர்கோலமா வந்துக்கிட்டிருந்தாங்க. அந்தப் பொண்ணைப் பார்த்ததும் நான் அப்படியே திகைச்சுப் போயிட்டேன். அசப்பிலே உன் மாதிரியே இருந்திச்சு அந்தப்பொண்ணு. உன்னையும் அந்த மாதிரி ஒருத்தன் கையிலே ஒப்படைச்சு ஊர்கோலம் நடத்திப் பாக்க வேண்டிய அண்ணன் இல்லையா நான்! அதைப் பத்தி இது வரைக்கும் கொஞ்சமாவது நெனைச்சுப் பார்த்திருப்பேனா? ஒண்ணுமில்லாவிட்டாலும் உனக்குப் புடிச்ச துணிமணியாவது என் கையாலே வாங்கிக் குடுத்திருப்பேனா? அந்தக் கல்யாணக் கோலத்தைப் பார்த்த போது இந்த எண்ணமெல்லாம் என் நெஞ்சிலே பொங்கி வரவும் எனக்கு மூச்சே அடைக்கிற மாதிரி ஆயிடுச்சு, வள்ளி.''

அந்த முரட்டு அண்ணனின் மென்மை உணர்ச்சிகள் சாதாரண நேரமாயிருந்தால் வள்ளியைத் தழுதழுக்கச் செய்திருக்கும். ஆனால் இப்போது அவை அவள் மனத்தில் பீதியைக் கிளப்பி விட்டன.

அவள் முகத் தோற்றத்தைக் கவனித்த காளி சட்டென்று கேட்டான். ''ஏ, வள்ளிக்குட்டி! ஏன் சுயாடலே உன் முகத்திலே? எதை நினைச்சுக் கவலைப்பட்டுக்கிட்டிருக்கே?''

''ஒண்ணுமில்லே அண்ணே....''— என்றாள் வள்ளி, சிரிப்பை முகத்தில் வலிய வரவழைத்துக் கொண்டு.

''ஆ....இப்பத்தான் நல்லாயிருக்கு. உன் முகத்திலே இந்தச் சிரிப்பைத்தான் எப்போதும் பார்க்கணும்னு நான் ஆசைப்படறேன் வள்ளி. கோடி குடுத்தாலும் இதுக்கு ஈடாகுமா? என்ன அத்தை அப்படிப் பார்க்கிறே?''

''உனக்குத்தான் உன் தங்கச்சியைப் பத்தி என்ன பெருமை!'' என்று சிரித்தாள் அஞ்சலையத்தை.

''சந்தேகமென்ன? பெருமைப்பட வேண்டிய தங்கச்சி அல்லவா இது? இந்த மாதிரி தங்கச்சி என்னைத் தவிர வேறு யாருக்குக் கிடைக்க முடியும்? ஆனா நான் தான் இதுக்குக் கொஞ்சமும் தகுதியில்லாத அண்ணனாப் போயிட்டேன்.''

''ஏனண்ணே, இப்படியெல்லாம் சொல்றே?''

''என் மனசு என்னை எப்படிக் குத்தம் சாத்திக்கிட்டிருக்கு, தெரியுமா வள்ளி? 'ஏண்டா பாவிப் பயலே, கிடைக்கக் கூடாத ரத்தினம் உனக்குத் தங்கச்சியாகக் கிடைச்சும் அதோட அருமை தெரியாம சுத்திக்கிட்டிருக்கியே. காலா காலத்திலே அதுக்குச் செய்ய வேண்டிய ஒண்ணையும் செய்யாமே அண்ணன்னு நீ ஒருத்தன் இருந்து என்ன பிரயோசனம்?' அப்படின்னு என்னை இடிச்சுக் காட்டிக்கிட்டு இருக்கு. ஆனா இனிமே அப்படி இருக்க மாட்டேன், வள்ளி. இந்த ஒத்தக்கை அண்ணன் கூடிய சீக்கிரம் உனக்கு என்னென்னெல்லாம் செய்யப் போகுதுன்னு நீயே பார்க்கப் போறே?'' என்று கூறிய காளியண்ணன் முகம் கழுவி வரத் தோட்டத்தில் இறங்கி வாய்க்காலை நோக்கிச் சென்றான்.

கண்ணைத் துடைத்து விட்டுக் கொண்ட வள்ளி சாப்பாட்டுக்கான ஆயத்தங்களைச் செய்வதில் முனைந்தாள்.

சாப்பிட்டு எழுந்து கைகழுவிய சுருக்கோடு காளியண்ணன் கேட்டான். ''வள்ளிக் குட்டி, அந்த மங்காக் குரங்குக்கு வாங்கி வந்த புடவை எப்படி?''

''நல்லா இருக்கு அண்ணே. ஆனா மங்காவை நீ ஏன் குரங்கு குரங்குன்னு கரிச்சுக் கொட்டறே?'' என்றாள் வள்ளி.

''அது குரங்கில்லாமல் வேறே என்னவாம்?''

அத்தை சிரித்தாள். ''ஏன் தம்பி, அது கொரங்குன்னா அதைப் பத்தி உனக்கு என்ன இவ்வளவு கரிசனம்? அதை மறக்காமலே ஒண்ணொண்ணும் வாங்கி வந்ததிலே கொறைச்சல் இல்லே!'' என்றாள்.

''வள்ளி! அந்தப் பொட்டலத்தைக் கொண்டா. நானே அதும் மூஞ்சிலே எறிஞ்சிட்டு வந்திடறேன்'' என்றான் காளியண்ணன்.

''கேட்டேல்லே வள்ளி, மூஞ்சிலே எறியப் போகுதாம்?'' என்று மறுபடியும் சிரித்தாள் அத்தை.

**பு**டவைப் பொட்டலத்துடன் காளியண்ணன் உள்ளே வந்த போது வெள்ளாத்தாளால் தன் கண்களையே நம்ப முடியவில்லை.

''வா, தம்பி! இன்னிக்குத்தான் முதல் தடவையா நீ இந்த வீட்டுக்குள்ளே அடி எடுத்து வைச்சிருக்கே. உக்காரு, தம்பி!'' என்று ஒரு கோரைத் தடுக்கை எடுத்துப் போட்டாள்.

சுற்றுமுற்றும் பார்த்த காளியண்ணன் ''எங்கே அது? காடுவா செடியாச் சுத்தப் போயிடுச்சா?'' என்று வெள்ளாத்தாளிடம் கேட்டான்.

REPORT ON

# Ambassador

*Mark II*





பிறந்த தேதி : அக்டோபர் 1963

தோற்றம் : ஆரோக்கியமுடன் கறு கறுப்பானது.

அமைப்பு : உறுதியும் சரியான அமைப்புடன் சக்தியும் பொருந்தியது. ஆறு பேர்களை ஏற்றிச் செல்லக் கூடியது.

பூட் சைஸ் : மிகப் பெரியது.

ரத்த அழுத்தம் : அதிக வேகமாய்ச் செல்கையிலும் எப்பொழுதும் சாதாரண நிலைதான்

பாரம்பரியம் : உயர்வம்ச முன்னோரான மாரிஸ்ஸில் நேர்வழி வழி வந்த ஹிந்துஸ்தான் 10, ஹிந்துஸ்தான் 14, லாண்டு மாஸ்டர் தந்தை அம்பாஸடர் - எல்லாம் இன்றும் வலுவடைந்தவாறிருக்கின்றன.

பொதுவான நிலை : சக்தி நிரப்பப் பெற்றது. எல்லா நிலைகளிலும் தொடர்ந்து பிரயாணம் செய்வதில் திறமை மிக்கது. சக்தி உற்பத்தி வகையிலே புஷ்டி அளிக்கும் உணவு தேவையில்லை.

நோய் நிர்ணயம் : N. A. D. பல்பரீட்சைகளில் ஏற்படும் தொந்தரவுகளை வெகுகாலம் முன்பே கடந்தாகி விட்டது. இப்போது முழுப்பருவம்.

நோக்கம் : எதிர்காலத்தில் நம்பிக்கை. குடும்பக் கட்டுப்பாடு திட்டத்தில் நம்பிக்கையில்லை. இன்று நாட்டிலெங்கும் ஓடுகின்ற லட்சத்திற்கு மேலான HM குடும்பத்துச் சிறந்த கார்களுடன் இன்றும் 25,000 கார்களைச் சேர்க்க வேண்டுமென்று கருதுகிறது.

முன் அறிவிப்பு : ஆகிறுதியில் வளர்ச்சி நிச்சயம். மக்களால் இன்றும் அதிகமாக விரும்பப்படும் நீடித்திருப்பதற்கும் உத்தரவாதம்.




ஹிந்துஸ்தான் மோட்டார்ஸ் லிட்., கல்கத்தா-1




# கிளிக் III




## 12 படங்கள் எடுக்கும் சிக்கனத்திற்கு அகிலஉலகப் பிரசித்திபெற்ற காமிரா

பழங்காலக் காமிராக்களின் சகாப்தம் முடிந்து விட்டது. நவீன ஆக்பா கிளிக் III ஐ நாடு வோரின் தொகை பெருகி வருகிறது. '120' சைஸ்சுருள் பிலிமிலே அது பெரிய (6 x 6 செ. மீ) படங்களை எடுக்கிறது. வாங்கிய நாள் முதலே அது உங்களுக்கு வெற்றியைத் தேடித் தருகிறது. கணக்கிடும் தொல்லையோ, குழப்பமோ இல்லை. நீடித்த மனத் திருப்தியை அளிக்கிறது.

ரூ. 46-50 க்கு அது உங்களுடையதாகிறது. (உள்ளூர் வரிகள் தனி) உங்கள் ஆக்பா வியாபாரியிடம் வாங்குங்கள்.

சிறப்பு அம்சங்கள்:

மெனிஸ்கஸ் லென்ஸ் • ஆட்டோமேட் ஷட்டர்- உடனடியாகப் படமெடுக்க • மேகங்களைப் பின்புறமாகக்காட்ட உள்ளிணைக்கப்பட்ட மஞ்சள் ஃபில்டர் • 'வெயில்' அல்லது 'கருமேகங்களை'த் தோற்றுவிக்கும் லென்ஸ் ஸெட்டிங்ஸ் • ஃப்ளாஷ் கான்டேக்டுகள் • பெரிய ஆப்டிகல் வியூஃபைண்டர் • ட்ரிபாட் ஸாக்கெட் • எவர்ரெடி தோல் அல்லது ப்ளாஸ்டிக் கேஸ் மற்றும் ஏ 1 ஃப்ளாஷ்கன் தனியாக விலைக்குக் கிடைக்கிறது.

**இந்தியாவில் தயாரிப்பவர்கள்: தி நியூ இந்தியா இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட், பரோடா.**

ஏக போக விநியோகஸ்தர்கள்:

ஆக்பா-கேவார்ட் இந்தியா லிமிடெட். பம்பாய் . புது டில்லி . கல்கத்தா . சென்னை .

CHAI-BI & TAM

''இல்லே தம்பி, நான்தான் ஒரு பன்னும் டீயும் வாங்கி வரச் சொல்லி நாயர் கடைக்கு அனுப்பி வைச்சேன்.''

''எப்பப் பார்த்தாலும் பன்னேயும் டீயையும் சாப்பிட்டு உடம்பைக் கெடுத்துக்கிடறீங்களே, ஏன்? லச்சணமா வீட்டிலே சோறுக்கிச் சாப்பிடக்கூடாது?''

''ஆக்கி முடியறதுக்குள்ளே பசி தாங்க முடியாது போல இருந்திச்சு. கெடந்து எழுந்திருச்ச உடம்பு பாரு. நீ உக்காரு தம்பி, மங்கா இப்பவே வந்திடும்'' என்றாள் வெள்ளாத்தாள்.

''பரவாயில்லே, வள்ளிக்குச் சேலை எடுக்கும்போது அதுக்கும் ஒண்ணு எடுத்து வந்தேன். அது வந்ததும் குடுத்திடுங்க'' என்று புடவைப் பொட்டலத்தைத் தடுக்கின் மீது போட்டுவிட்டு வெளியே நடந்தான் காளியண்ணன்.

''என்ன அவசரம், தம்பி! ஒண்ணுமே சாப்பிடாமே போறயே!'' என்று வெள்ளாத்தாள் கூறியதை அவன் காதில் வாங்கிக் கொள்ளவில்லை.

மங்காவிடம் நேரில் கொடுக்க வேண்டுமென்று அந்தப் புடவையைக் கொண்டு வந்திருந்தானே ஒழிய உண்மையில் அவள் வீட்டில் இல்லாதது ஒருவிதத்தில் அவனுக்கு நிம்மதியாகவே இருந்தது. நேரில் கொடுக்கும்போது என்ன சொல்லிக் கொடுப்பது? எது சொன்னாலும் மங்கா அதைத் தூக்கி எறிந்தாற்போல் எதிர்ப் பேச்சுப் பேச மாட்டாள் என்பது என்ன நிச்சயம்? அந்தச் சங்கடமெல்லாம் இப்போது இல்லையல்லவா ?

அவன் நாயர் கடையைச் சமீபித்தபோதுதான் மங்கா கடையிலிருந்து வெளியே வந்து கொண்டிருந்தாள்.

''ஏ, மங்கா! ஒரு டீயும் பன்னும் வாங்கிட்டுப் புறப்பட இவ்வளவு நேரமா?'' என்று கேட்டான் காளி.

''அட! எப்படிய்யா அவ்வளவு கணக்காச் சொல்லிட்டே?'' என்று கேட்டாள் மங்கா.

''இப்ப உங்க வீட்டுக்குத்தான் போயிட்டு வரேன்.''

''எங்க வீட்டுக்கா? ஏது ஒருநாளும் இல்லாத அதிசயமா யிருக்கே!''

''கிழுரிலே வள்ளிக்குச் சேலை எடுத்தேன். அப்ப ஒனக்கும் சேத்து ஒண்ணு எடுத்து வந்தேன். நேரிலேயே குடுக்கலாம்னு வீட்டுக்குப் போனா நீ அங்கே இருந்தாத்தானே ?''

''எனக்குச் சேலை வாங்கிக் குடுக்க நீ யாரையா?''

''கழுத்திலே தாலி கட்டப் போற ஆளு சேலை வாங்கிக் குடுத்தா என்னவாம் ?'' என்றான் அவன்.

''தாலி கட்டற ஆளைப் பாரு. அதுக்கு ரெண்டு கை வேணுமய்யா'' என்றாள் மங்கா.

''மூணு முடிச்சுப் போட வேண்டியது நானில்லே, என் தங்கச்சி!'' என்றான் காளியண்ணன்.

''மெய்யாவாய்யா? வள்ளியக்காவா மூணு முடிச்சுப் போடும்? அப்ப நான்

---

## "திரு"வும் "உயர்திரு"வும்

ஒரு தடவை கல்கி அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட வரவேற்புப் பத்திரம் ஒன்றில் ''உயர் திரு கல்கி கிருஷ்ணமூர்த்தி அவர்களுக்கு'' என்று குறிப்பிட்டிருந்தது. அதற்கு அவர் பதில் சொல்லும்போது,



''என்னை இதற்கு முன் நீங்கள் பார்த்திருந்தால் 'உயர்திரு' என்று குறிப்பிட்டிருக்க மாட்டீர்கள். 'திரு' என்று மட்டும் குறிப்பிட்டிருப்பீர்கள்'' என்றார்.

ஆதாரம்: சோமலே எழுதிய 'பல்சுவைக் கட்டுரைகள்'.
தகவல்:
வி. சம்பத்குமார்



''ரிப்பன் கத்திரிக்கக் கட்டிடத்தைத் திறந்து வைக்கப் போறீங்களாமே. ஜாக்கிரதையாக் கத்திரிக்க விழா முடிஞ்சதும் ரிப்பனை ஞாபகமாக் கொண்டுவாங்க. நம்ம கருணை நாலு நாளா தலையில் நாரை முடிஞ்சுகிட்டு நிக்குது!''

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

உன்னையே கட்டிக்கறேன்!'' என்றாள் மங்கா.

இந்தப் பேச்சைக் கேட்டுக்கொண்டு அங்காயி மடக்கடையிலிருந்து வெளியே வந்தாள்.

''நடுத்தெருவிலே நல்ல பேச்சு நடக்குது. தங்கச்சியைத் தறிதலையா அலைய விட்டுட்டுத் தாலி கட்டக் கழுத்தைத் தேடி அலையறாரு இவரு.''

''ஏ அங்கி, யாரோட தங்கச்சியைப் பத்தித் தப்புத் தண்டாவாப் பேசறே?''

''உன் தங்கச்சி இல்லாம ஊரார் தங்கச்சியைப் பத்தியா உன்கிட்டே பேச வருவேன்?''

''எங்க வள்ளியக்காவையா தறிதலைன்னு சொல்லறே?'' என்று ஆத்திரத்துடன் கேட்டாள் மங்கா.

''நீ எப்படி இருக்கயோ, அப்படித்தானே உன் வள்ளியக்காவும் இருப்பா?''

''என்னை என்ன வேணும்னாலும் சொல்லிக்க. வள்ளியக்காவை ஏதேனும் சொன்னே......''

''என்ன பிரமாதமா மெரட்டறே? வள்ளி ஒண்ணும் தெய்வப் பிறவியில்லே. அது போடறதெல்லாம் வெறும் வேஷம். நல்ல பொண்ணு மாதிரி நடிச்சு அந்தக் குமரய்யாவைக் கைக்குள்ளே போட்டு வைச்சிருக்கு.''

''ஏ அங்கி, நீ மட்டும் பொம்பளையா இல்லே இதுக்குள்ளே....'' என்று பல்லைக் கடித்தான் காளியண்ணன்.

''கோவத்தை என்கிட்டே காட்டி என்ன பிரயோசனம்? அடக்கிற விதமா தங்கச்சியை அடக்கி வைச்சிருந்தா இவ்வளவு தூரத்துக்கு வந்திருக்குமா?''

''ஏய், இன்னொரு தரம் எங்கக்காவைப் பத்தித் தப்பாப் பேசினே, நான் சும்மா இருக்க மாட்டேன்'' என்று கத்தினாள் மங்கா.

''உனக்கு ஏண்டி ஆத்திரம் பொத்துக்குது? சம்பாதேவிக் கோயில்லேயிருந்தே அதோட நடவடிக்கையை நான் பார்த்துக்கிட்டுத்தானே வரேன். உன்னையும் அத்தையையும் தனியே விட்டுட்டு அவசர அவசரமா ஓடிச்சே எதுக்குன்னு நினைச்சே?''

''நெனைக்கறதென்ன நெனைக்கறது? எனக்குக்கூடத்தான் தெரியும். பாவம், அந்த ஐயா கண்ணிலே படக்கூடாதுன்னு ஓடிச்சு அக்கா. நடு வழியிலே அவரே எதிரே வந்திட்டாரு. பாத்தப்புறம் நின்னு பேசாமே என்ன செய்யும்?''

''இதெல்லாம் உண்மைதானா மங்கா?'' என்றான் காளியண்ணன் கனல் கக்கும் விழிகளுடன்.

''ஏன் அதிலே என்ன தப்புன்னு கேக்கறேன்?'' என்றாள் மங்கா.

அங்காயி வெற்றிச் சிரிப்பு சிரித்தாள். ''அந்த மூங்கில் புதர்த் திருப்பத்து மறைவிலே அந்தக் குமரய்யா கூடக் குழைஞ்சு, குழைஞ்சு, இளிச்சு இளிச்சு, அது பேசிக்கிட்டு நின்ற கண்றாவியை நினைச்சாலே பத்திக்குது. 'சீ, இது போடற சாது வேஷமெல்லாம் இவ்வளவுதானா' அப்படின்னு வெறுத்துப் போச்சு எனக்கு'' என்று கூறியதோடு நிறுத்தாமல் அங்காயி ஆங்காரத்துடன், ''தூ'' என்று துப்பியதைப் பார்த்த போது மங்காவின் ஆத்திரம் எல்லை மீறியது.

கையிலிருந்த மடையையும் பன்னையும் ஒரு பக்கமாக வைத்து விட்டு, ''எங்க வள்ளியக்காவைத் தூத்திப் பேசினது போதாதுன்னு துப்பவுமா துணிஞ்சிட்டே!'' என்று கத்திக் கொண்டே அவள் மீது பாய்ந்த மங்கா, அங்காயி தன்னைச் சமாளித்துக் கொள்வதற்குள் ஆத்திரம்தீர அவளை அடித்து விட்டாள்.

ஆனால் அவர்களுடைய சண்டையைப் பார்த்துக் கொண்டு காளியண்ணன் அங்கே நிற்கவில்லை. எல்லையில்லாமல் மனத்தில் குமுறும் கோபத்துடன் வீட்டை நோக்கி வெகு வேகமாக நடந்தான்.

(தொடரும்)




லலிதா ரஸாயனப் பரிசோதனை அறையில் இரண்டு பெரிய பீரோக்களுக்கு நடுவில் அமர்ந்து அழுது கொண்டிருந்தாள்.

அவளுடைய அழுகைக்குக் காரணங்கள் எத்தனையோ உண்டு.

''ஐயே! அந்தக் கருப்பியா, அவளோடு குரூப் போட்டோவா? நான் வரவில்லே. எனக்கு அந்தப் போட்டோவும் வேண்டாம்'' என்று மற்ற மாணவிகள் நகையாடும் அளவுக்கு லலிதா கறுப்பு. அழகற்றவளும்கூட.

அழகில்லாதவள் என்று தன்னை ஒதுக்குகிறார்களே என்பதால் உண்டான நிரந்தர சோகமும், அது கொடுத்த 'அழுமூஞ்சி' என்ற பட்டப் பெயரும் அந்தக் கல்லூரியில் அவளுடைய சிநேக எண்ணிக்கையை அறவே ஒழித்துவிட்டன. அவள் உதவி கேட்டு நெருங்கி வந்து பேசி வாங்கிப் போவார்கள். ஆனால் அந்தரங்கமாக அருகில்நெருங்குகிறவர்களே மிகமிக அரிதாகப் போய்விட்டது. பலரின் வெறுப்பு, பலரின் அநுதாபம் பலரின் அலட்சியம் என்று இப்படி வெறுப்பின் பல்வேறு கோணங்களுக்கு நடுவே அவள் தனியே விடப்பட்ட போதுதான் வரதன் அவள் மேல் அன்பு கொண்டு அவளை நெருங்கினான்.

ரஸாயனப் பரிசோதனைக் கூடத்தில் இரண்டு பெரிய பீரோக்களின் மறைவில் அவள் எதையோ நினைத்து விசித்து விசித்து அழுது கொண்டிருந்தாள். விசும்பல் ஒலி

கேட்டு எட்டிப் பார்த்த இரண்டொருவர் கண்டும் காணாமல் போய் விட்டனர்.

"அந்த அழுமூஞ்சி எதையோ நினைத்து அழுதுண்டு இருக்கு" என்ற ஒரு மாணவியின் ஒலியும் அவன் காதில் விழாமல் இல்லை. ஆறுதலுக்கு மட்டுமானாலும் அருகில் வந்து கேட்கக் கூடிய பெருந்தன்மையானவர்களே அங்கே அரிதாகிவிட்ட நிலையில்தான் அவள் முன்னால் வந்து நின்றான் வரதன்.

வரதனும் அவளும் ஒரே வகுப்பு. பாடப் பிரிவும் இருவருக்கும் விஞ்ஞானம். ரஸாயன

வரதனைக் கண்டவுடன் அவள் தன் அழுகையைச் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டவளாகத் தலையைக் கவிழ்த்துக் கொண்டே எழுந்தாள்.

"உட்காருங்கள்."

"மூடும் நேரமாகி விட்டதே."

"இதோ சாவி. பூட்டிக் கொண்டு வரும்படி ஏ. வி. சாவியைக் கொடுத்துவிட்டுப் போயிருக்கிறார்."

கையிலிருந்த கைக்குட்டையால் கண்களை அழுந்தத் துடைத்துக் கொண்டபோது கண்மை விழிப் பிராந்தியத்தில் பரவியது.

"உங்கள் துயரத்துக்கான காரணம் என்னிடம் சொல்ல முடியுமா?" — மிக மிக வினயத்துடன் கேட்டான் வரதன்.

அந்தக் கேள்வி அவள் துயரை இன்னும் அதிகமாக்கிய போது மார்பகம் எழும்பி அடங்கியது.



......அந்தக் கோப்பையில் இருந்த அக்கினித் திராவகம் அவன் முகத்தில் கொஞ்சம் பட்டுக் கீழே விழுந்து உடைந்து சிதறியது.

அறையில் ஒரே எக்ஸ்பெரிமெண்டை இருவரும் சேர்ந்து செய்த நாட்களும் எத்தனையோ உண்டு. இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில் ஏற்பட்ட சொற்பமான பழக்கம்தான் இப்பொழுது அழுகிற அவள் முன்னால் மௌனமாக வந்து நிற்கத் தோன்றியிருக்க வேண்டும்.

கல்லூரியில் ஒரே வகுப்பில் படிக்கிறோம் என்ற ஓர் உறவைத் தவிர வேறு எந்தவித இணக்கமும் இல்லாத, அறியாத இவரிடம் தன் அந்தரங்க சோகத்தை எப்படிச் சொல்வது என்று அவள் குழம்பிக் கொண்டிருந்த நேரத்தில் அவள் மனக் குரலாக அவன் பேசினான். "பரவாயில்லை, சொல்லுங்கள்.

துயரங்களைச் சொல்வதற்கு ஓர் அந்நியந்தம் வேண்டும் என்பதை நான் மறுக்கவில்லை. ஒப்புக் கொள்கிறேன். அப்படிப்பட்ட ஓர் அந்நியந்தம் இக்கல்லூரி வட்டத்திலே உங்களுக்கு இல்லை என்பதும் எனக்குத் தெரியும். இதோ, இந்தச் சூழ்நிலை, இந்தச் சந்தர்ப்பம், நம்முடைய நட்பைப் பலப்படுத்துமானால் அதை நான் போற்றுவேன். வரவேற்பேன்..... சொல்லுங்கள். ப்ளீஸ்....''

வரதன் கெஞ்சினான். ஒருவேளை அவளுடைய அந்தரங்க சோகம் பிறரிடம் சொல்ல முடியாததாக இருக்குமோ! தான் தொந்தரவு படுத்துகிறோமோ என்ற ஒரு தயக்கம் தோன்றிய போது வரதன் கொஞ்சம் நிதானித்தான். ''மன்னிக்க வேண்டும். சொல்ல முடியாத — சொல்லக் கூடாத விஷயமானால் நான் கேட்பதில் அர்த்தமில்லை....'' என்று தயக்கத்துடன் எழுந்தவனைக் கண்ட அவள் மனம் நிமிர்ந்தது. தன் மேல் அபூர்வமாகப் பரிவு காட்டும் ஒரே ஒரு நண்பனையும் இவ்வளவு சீக்கிரம் இழக்க அவள் மனம் இடம் தரவில்லை. மனத்தளவில் தயக்கம் சரியான பாதையைத் திறக்காமல் இருந்த நிலையிலேயே துயரத்துக்கான காரணத்தைச் சொல்லத் தொடங்கி விட்டாள்.

''என் அப்பா என்னைக் கண்டாலே வெறுக்கிறார். என்னைக் கண்டால் அவருக்குப் பிடிப்பதேயில்லை. எனக்கு என் மேல் அன்பு வைக்கவோ, பரிவு காட்டவோ யாருமே இல்லை. சில நேரங்களில் நான் ஏன் இன்னும்



உயிரோடு இருக்கிறேன் என்று கூடத் தோன்றுகிறது. இந்தச் சந்தர்ப்பத்தில் அப்பா என் கல்யாண விஷயமாக அடம் பிடிக்கிறார். எங்கிருந்தோ கண்டு பிடித்து அழைத்து வந்த மனத்துக்குப் பிடித்தமில்லாத ஒருத்தரைக் கல்யாணம் செய்து கொள் என்று தொந்தரவுபடுத்துகிறார்.'' — வார்த்தைகள் தயங்கித் தயங்கித் தொடர்ந்தன. பிறகு சரளமாக வந்தன.

''ஏன் மனத்துக்குப் பிடிக்காமல் போவானேன்? உங்களுக்கோ தன் மேல் யாருமே அன்பாக இல்லை என்ற ஏக்கம் இருக்கிறது. எல்லாரும் உங்களைக் கண்டு ஒதுங்குகிறார்கள் என்கிறீர்கள். தந்தைகூட அன்பும் பரிவும் காட்டவில்லை என்கிறீர்கள். விவாகமானாலாவது அந்த அன்பும் பரிவும் அவரிடமிருந்து கிடைக்க வழி பிறக்குமல்லவா? நல்ல இணையின் வாயிலாக உங்களுடைய தாகத்தைத் தீர்த்துக் கொள்ளலாமல்லவா?''

''நல்ல இணை?'' மீண்டும் கண்ணீர் விட்டாள் லலிதா! ''அப்பா எனக்காகப் பார்த்திருப்பது நல்ல இணையே அல்ல. என்னை எவன் கழுத்திலாவது கட்டிவிட வேண்டும் என்பதுதான் அவர் அவசரம். இப்பொழுது அவர் எனக்காகப் பார்த்திருக்கும் மாப்பிள்ளையை எனக்குப் பிடிக்கவில்லை.''

''பிடிக்கவில்லை என்றால் எந்தவிதத்தில்?''

''ரொம்ப ஒல்லியான உடம்பு. குட்டை. எனக்கு அவர் இணையாகவே முடியாது.''— லலிதா வெட்கத்தை விட்டு இந்த இடத்தில் தன் அபிப்பிராயத்தைச் சொன்னாள்.

லலிதாவின் மதர்த்த வளர்ச்சியில் ஒரு வசீகரம் உண்டு. அந்த நடையில், அந்த உயரமான உடம்பில் கழுத்தும் அதன் கீழும் கால் வரையிலே காணப் பெறும் அப்பூரணமான மலர்வு ஒரு வகையில் அசாதாரணமானதுதான்.

குள்ளமும், ஒல்லியுமான பிள்ளையை அவள் வெறுப்பதில் மனத் தத்துவ ரீதியில் தவறேயில்லை. பெண்மையைக் கவர ஓரளவு 'அவட்லுக்'கும் தேவைப்படுகிறது என்பதை வரதன் மறுப்பவன் அல்ல.

''நீங்கள் சொல்லி விடுவதுதானே!'' — மீண்டும் வரதன் பேசினான்.

''சொல்லி விட்டேன். மீண்டும் சொல்லத்தான் போகிறேன். நான் அதற்குச் சம்மதிக்கப் போவதில்லைதான். இருந்தாலும் என் சார்பில் எனக்காக அநுதாபப்பட்டுப் பேச என் வீட்டில் யாருமேயில்லை. அதை நினைத்தால்தான் துயரத்தை என்னால் தாங்கவே முடியவில்லை.''

லலிதாவுக்குத் தாயார் இல்லை என்பது அவனுக்குத் தெரியும். தந்தை வேதாந்தத்தையும் தெரியும். ஆனால் பழக்கம் கிடையாது. இதையே ஒரு முகாந்திரமாகக்

கொண்டு லலிதாவின் தந்தையைப் பழக்கப் படுத்திக் கொண்டால் என்ன என்று நினைத்தவன், ''நீங்கள் அனுமதித்தால் உங்கள் சார்பிலே, உங்களுடைய மன நிலையை உங்கள் தந்தையிடம் எடுத்துச் சொல்ல நான் வரத் தயாராக இருக்கிறேன்'' என்றான். வரதனின் இவ்வார்த்தை அவளுக்கு அதிகமான பரவசத்தைக் கொடுத்திருக்க வேண்டும். ''நிஜமாகவா? நீங்கள் வந்து சொல்கிறீர்களா ! கட்டாயம் வாருங்கள். என் அப்பா உங்களை ஒன்றும் சொல்ல மாட்டார். வித்தியாசமாக நினைப்பவரும் அல்ல. நீங்கள் வந்து சொன்னால் மிக மிக உதவியாக இருக்கும்'' என்றாள். அவளுடைய குழந்தைத் தன்மையான பேச்சு, மனம் எல்லாம் அவனிடத்திலே அவளைப் பற்றியதோர் இரக்கத்தைச் சேர்த்தன.

''என்று வரட்டும்?''

''இன்றே வாருங்கள். சாயங்காலம் அப்பாவும் இருப்பார். நானும் இருக்கிறேன்'' என்றவள் தன் தந்தையிடம் எப்படிப் பேச்சை ஆரம்பிக்க வேண்டும் என்பதைப் பற்றியும் கல்லூரி நண்பர் என்கிற வகையில் அவனுடைய வருகையால் தந்தைக்கு எந்தவிதத் தப்பெண்ணமும் உண்டாக வழியில்லை என்பதையும் சொல்லிக் கொண்டே எழுந்தாள்.

பரிசோதனை அறையைப் பூட்டிக்கொண்டு இருவரும் நடந்தனர்.

**அ**ன்று மாலை வரதன் அவள் வீட்டுக்கு வந்தது. அவள் தந்தை வேதாந்தத்திடம் பேசினது எல்லாமே அவள் அருகிருந்து கவனித்த விஷயம்தான். அதன் தொடரில் அவனை மீண்டும் கல்லூரித் தோட்டத்தில் தனிமையில் சந்தித்தபோது அவன் அவள் தந்தையைப் பற்றி வெகுவாகப் புகழ்ந்து பேசினான். ''உங்கள் தந்தை உங்கள் நன்மையை உத்தேசித்துத்தான் அதைச் செய்யத் தொடங்கினாராம். அதில் அவருக்கு எந்த வித பிடிவாதமும் இல்லையாம். நீங்கள்தான் ரொம்ப நடுங்கிப் போயிருக்கிறீர்கள்.''

''நான் நடுங்கவில்லை. நீங்கள் வந்து சரியான நேரத்தில் மிக மிகச் சாதுரியமான முறையில் என் மன நிலையை எடுத்துச் சொன்னதன் பேரில் அப்பா அடங்கிப் போய் விட்டார். 'விவாகம் என்பது என்னதான் பெரியவர்களால் நடத்தப்படுவதாக இருந்தாலும் அதை இரு சாராரும் மனமுவந்து ஏற்றுக் கொண்டு நடப்பதில்தானே சிறப்பு ! ஒருதலைப்பட்சமான முடிவு என்பது என்றைக்குமே ஆபத்தில்லையா ?' என்று நீங்கள் சொன்னதன் பேரில் அவர் சமாதானம் அடைந்திருக்கலாம். அது மட்டுமல்ல, அப்பாவின் அவசரத்துக்கு இன்னொரு காரணமும் உண்டு. அதைப் பிறகு தெரிந்து கொள்வீர்கள் — அது போகட்டும். நேற்று அப்பாவுடன் ரொம்ப நேரம் பேசிக் கொண்டிருந்தீர்களே, அப்படி என்ன பேச்சு?''

''எல்லாம் பேசினோம். அவருடைய வாழ்க்கை அநுபவங்கள், வெற்றி தோல்விகள், அவர் அடைந்த லாப நஷ்டங்கள், புதிதாக அவர் எடுத்திருக்கின்ற பேப்பர் ஏஜன்ஸி பற்றி — இப்படி எல்லாவற்றையும் பேசிக் கொண்டிருந்தோம். மனம் விட்டுப் பேசக் கூடிய அவரது சுபாவம், என்னை ரொம்பவும் கவர்ந்துவிட்டது. அதோடு தன் மகள் காரணமாக அவர் உற்சாகம் ரொம்பக் குன்றிப் போயிருக்கிறது'' என்றான் சிரித்துக் கொண்டே. அவள் பதில் ஏதும் கூறாமல் அவனைப் பார்த்தாள். அகலமான முகம், ஆத்மார்த்தங்களைப் பகிர்ந்து கொள்ளக் கூடிய உண்மையொளி வீசுகிற நிதர்சனமான கண்கள்.

அன்பென்ற அகழியிலிருந்து ஏக்கத்தின் பெருமூச்சொன்று வெளிப்பட்டது.

**கா**தல் என்பதே சில மாயமான மன விகாரத்தின் அடிப்படையில் பிறப்பதுதானே! ஒரு பெண் தன் மனத்தை ஒருவனிடம் பறி கொடுக்க, சந்தர்ப்பத்துக்கென்றோ, சூழ்நிலைக்கென்றோ காத்திருக்கத் தேவையில்லை என்பதைத் தர்க்க ரீதியிலே ஒப்புக் கொண்டால், லலிதா அதை மீறி விடவில்லை. அப்படி அதை மீறியிருந்தாலும் தவறில்லை. அன்பு மலர அந்தச் சந்தர்ப்பம்தான் முக்கியம் என்றாலும் அதுவும் இங்கே அவளுக்கு இசைவாகத்தான் பொருந்தியிருக்கிறது.

முதல் நாள் தந்தையின் அறிமுகம். அவளை ஓர் இக்கட்டிலிருந்து விடுவித்த சாதுரியம். அல்லது உபகாரம் இதோ இன்று நெருங்கி வந்து பேசக் கூடிய அத்யந்தம்; எல்லாமே அந்த மாயமான மன விகாரத்தின் அடிப்படையில் உண்டான விநோதம்தான்!

ஓர் அழிவின் வேகத்தைப் போலவே சில வேளைகளில் அன்பின் வேகமும் அசாதாரணமான வேகத்தில் சென்று படர்வதுண்டு. அழிவை நோக்கி விரைகிற அன்புக்கும் ஒரு வேளை இது பொருந்துமோ ?

**க**ல்லூரி தொடங்குவதற்கான மணி அடித்தாகி விட்டது. இருவருமாகப் பேசிக் கொண்டே மெல்ல நடந்து வகுப்பறைக்குள் நுழைந்தனர்.

கல்லூரி வகுப்பில் பின்னால் தள்ளியுள்ள கடைசிப் பெஞ்சியில் அமர்ந்திருக்கும் வரதன் சில வேளைகளில் அப்படியே முன்னே சாய்ந்து உறங்கிக் கொண்டிருப்பதையும் அவள் அநேக தடவை கண்டிருக்கிறாள். அவன் ஏதோ கம்பெனியொன்றில் இரவு 'ஷிப்டி'ல் வேலை செய்கிறான் என்பதை அவனிடமிருந்து இல்லாமல் பிறர் சொல்லிக் கேள்விப்பட்டிருக்கிறாள்.

வசதியான குடும்பத்தில் அவன் பிறக்கவில்லை என்பது அவளுக்குத் தெரியும். எத்தனையோ தடவைகளில் அவனுடைய கல்லூரிப் படிப்புக்கே இடைஞ்சல் வந்து விடும்படியான சூழ்நிலைகள் எத்தனையோ ஏற்பட்டதுண்டு. கல்லூரிச் சம்பளம் கட்ட முடியாமல் தவித்ததையும் அவள் கண்டு உதவியும் இருக்கிறாள்.

''நான் தொடர்ந்து படிக்கத்தான் விரும்புகிறேன். என் குடும்ப வறுமை என்னை வெளியே தெட்டித் தள்ளிவிடும் போலிருக்கிறது. இப்பொழுது கடைசி வருஷம். இந்த

# குடும்பத்தினர் அனைவரும் திட ஆரோக்கியத்துடன் திகழ

# ஃபாஸ்ஃபோமின்®

ஃபாஸ்ஃபோமின் பழரஸ மணம் கமழும் பச்சை நிற வைட்டமின் டானிக். இதில் வைட்டமின் 'பி' காம்ப்ளெக்ஸ் மற்றும் பலவகை கிளிஸரோ ஃபாஸ்பேட்டுகள் கலந்துள்ளது. இதுவே குடும்பத்தினர் அனைவரும் வலிவுடனும், சந்தோஷத்துடனும், ஆரோக்கியமாயும் வாழ உதவுவது. ஃபாஸ்ஃபோமின் வீட்டில் வையுங்கள். இதை அருந்தி வந்தால் களைப்பும் சோர்வும் உங்களை அணுகாது. இழந்த சக்தியை மீண்டும் பெற உதவுகிறது. பசியைத் தூண்டும். வலிவைப் பெருக்கும். நோய்களை எதிர்க்கும் சக்தியை அளிக்கும். குடும்பத்தினர் அனைவரும் ஆரோக்கியத்துடன் திகழ—ஃபாஸ்ஃபோமின்.




SQUIBB® TTT®

SARABHAI CHEMICALS

Shilpi SC 281 A Tam

உங்கள் ஸ்தாபனத்தில் தொழிலாளர் தகராறுகளைப்பற்றியும், அநேக இதர பிரச்னைகளைப்பற்றியும் பேசுகிறீர்கள். தொழிலாளர்கள் ஹிம்சை வழியில் இறங்கினால் நீங்கள் புகார் செய்வதில் முற்றிலும் நியாயம் இருக்கிறது. அரசாங்க ரீதியிலும் சட்டம், ஒழுங்குமுறை அடிப்படையிலும் தவிர நீங்கள் எந்த வகையில் நடவடிக்கை எடுத்துக் கொள்கிறீர்கள்? எண்ணற்ற மக்களிடம் இத்தகைய நடவடிக்கைசாத்தியமில்லை. மனிதாபிமானத்துடன் அவர்களிடம் பேசி, அவர்களை வெறும் சாதாரண விறகு வெட்டியோ, ஜலம் சேந்துபவரோ அல்ல என்றும், ஒரு தொழிலில் முக்கியமான, அத்யாவசியமான பணியாற்றுபவர் என்றும், உண்மையில் ஒரு மாபெரும் ஸ்தாபனத்தின் இயக்கத்தில் பங்காளிகள் என்றும் எடுத்துக்காட்டி உணரச்செய்ய வேண்டும்.

— ஜவாஹர்லால் நேரு





மூன்று ஆண்டுகளில் என் பணம் என்று கல்லூரிக்கு இரண்டொரு ''டேர்ம்''தான் கட்டியிருப்பேன். மற்றதெல்லாம் என் நண்பர்கள் எனக்குக் கொடுத்து உதவியது தான்'' என்று சொல்லுவான்.

அவனுடைய குடும்பம், பெரிய குடும்பம். தாயார், கண் தெரியாத தந்தை, விதவைச் சகோதரி, வயதுவந்த தங்கைகள் இருவர்— அந்தச் சாகரத்தில் அவன் மூத்த பிள்ளை! பெருமூச்சு விட்டுக் கொண்டே பின்னும் திரும்பிப் பார்த்தாள் லலிதா.

சோக மயமான அந்த உருவம் அவளுடைய பச்சாத்தாபத்தை அதிகமாக்கியது.

லலிதாவுடன் கொஞ்சம் நெருங்கிய நட்பு உண்டாகி, அது காலக்கிரமத்தில் இன்னும் அதிக ஈடுபாட்டோடு இணைந்து வந்த அந்தக் குறுகிய கால அளவிலே, மற்றவர்களின் பொறாமைக்கு ஆளாகவில்லை வரதன். பொறாமைக்கு ஆளாக லலிதா பெரிய அழகியல்லவே. பரிகாசத்துக்கு, நேரிடையாகவும், மறைமுகமாகவும் ஆளானான்.

மற்றவர் செய்கிற பரிகாசம், அதைக் கண்டு மனம் துடிக்கும் லலிதாவின் சோகம், அதை நினைந்து தனிமையில் அவள் விடுகின்ற பெருமூச்சுக்கள் — இவையே வரதனை இன்னும் ஓரளவு அதிகமாக அவள் பக்கம் பிடித்துத் தள்ளிக் கொண்டு போயின. இதற்கிடையில் வரதனின் குடும்பச் சூழலில் எத்தனையோ பிரளயங்கள் — ஒவ்வொரு சமயமும் அந்தப் பயங்கர அலையின் மேல் நீந்தி லலிதாவின் வீட்டு வாசற்படியில் வந்து நிற்பான். அதற்காக அவள் தயங்குவதேயில்லை. வரதனுடைய துயரங்களைத் தீர்ப்பது தன் கடமைகளில் ஒன்று என்ற மனோபாவத்தை ஒருவிதப் பெருமையோடு வளர்த்துக் கொண்டு விட்டவளுக்கு அவன் உதவி கேட்டு வரும் போது தயக்கம் ஏற்படக் காரணமே இல்லையே!

''என்னைப் பிடிக்கிறதா உங்களுக்கு?'' கட்டுப்பாட்டை மீறினதோர் ஆவேச நிலை அவளுக்கு. தன்னைப் பூரணமாக நேசிப்பவரின் விழிகளில் வருகின்ற நம்பிக்கை மட்டும் போதவில்லை. விழிகளில் உள்ளதை வார்த்தைகளில் கேட்க அவள் துடியாகத் துடித்தாள்.

'' நான் உன்னை நேசிக்கிறேன்.....''— வார்த்தைகளின் சங்கமத்திலே அமுதம் பிறந்து, அது அவள் நெஞ்சிலே சுரந்து பின் அதுவே கண்களில் கண்ணீராகக் கரைந்து, கொட்டியது. நெகிழ்வின் உச்ச நிலை, தன் காதுகளையே நம்ப முடியாத வார்த்தைகளைக் கேட்டதால் உண்டான பரவசம்; வரதனின் கரத்தைத் தன் இரண்டு கைகளில் இறுக்கமாகப் பிடித்துக் கொண்டாள் அழகற்ற லலிதா.

லலிதாவின் தந்தை வேதாந்தத்துக்கு மகளுடைய விவாக விஷயமாக அதிக சிரமம் ஏற்படாது என்ற அளவுக்கு வரதன் லலிதா இவர்களின் பிணைப்பு அவரை நிம்மதியடையச் செய்தது. அழகற்ற தன் மகளுக்கு இப்படியொரு 'நேசக் கரம்' நீளுவதைத் தடுத்து நிறுத்த அவர் அவ்வளவு விவேகமற்றவர் அல்லவே! அதோடு அவருமே இந்த நிலையின் உச்சத்தைச் சீக்கிரம் எட்டிவிட வேண்டும் என்று காத்திருந்தார். லலிதா அவரை விட்டுப் போய்விட்டால் அவர் நினைக்கிற — எதிர்பார்த்திருக்கிற மற்றொரு காரியத்தை எந்தவிதமான மனச்சாட்சியின் உறுத்தலுக்கும் தம்மை ஆளாக்கிக் கொள்ளாமல் சாதித்துக் கொண்டு விடலாம்.

ஆம், ரமாபாயைப் பதிவுத் திருமணம் செய்துகொண்டு விடலாம். ஐந்து வருஷங்களாகத் திரை மறைவில் நடக்கிற காதல் நாடகத்தை அரங்கேற்றி விடலாம். இதுதானே அவர் இஷ்டம்! கல்யாண வயதைக் கடந்து விட்ட மகளை வீட்டில் வைத்துக் கொண்டு இரண்டாம் மனைவியுடன் வீட்டில் சல்லாபிக்க முடியுமா? அதற்கும் வேதாந்தம் தயார் தான். ஆனால் அந்த ரமாபாய்தான் அதற்குத் தயாராக இல்லை.



ஆந்திரச் சட்ட மன்றத்தில் ஒரு சமயம், கே. வரதாச்சாரி என்ற உறுப்பினர் மிக அவசரமாக மன்றத்தின் உள்ளே கைத்தடியுடன் புகுந்து தம் இருக்கையிலும் அதனுடனேயே அமர்ந்து விட்டார்.

கிருஷ்ண ராவ் என்ற உறுப்பினர், ''கைத்தடி கொண்டு வருவது தவறல்லவா?'' என்று சபாநாயகரைக் கேட்டார். சபாநாயகர் விடையளிப்பதற்கு முன்பே தாம் செய்தது தவறென்று உணர்ந்து வரதாச்சாரி கைத்தடியுடன் வெளியேறிவிட்டார்.

''வயதில் முதிர்ந்தோர் கைத்தடி கொண்டு வரக்கூடாதா?'' என்று மற்றொருவர் கேட்க, ''ராஜாஜியவர்கள் தம் தளர்ந்த வயதில் சென்னை முதல் அமைச்சராக இருந்தபோது கைத்தடியை மன்றத்தின் வெளியே வைத்து விட்டே உள்ளே நுழைவார் என்றும் அவ்வாறே நாமும் நடத்தல் வேண்டும்'' என்றும் கிருஷ்ணராவ் விளக்கினார்.

## கைத்தடிப் பிரச்னை

நாகமாணிக்கம் நாகராசன்

''உங்கள் பெண் லலிதாவை யாருக்காவது விவாகம் செய்து கொடுத்து விடுங்கள். உங்களிடம்தான் பணம் இருக்கிறதே. ஆளா கிடைக்க மாட்டான்? அதைச் சீக்கிரம் முடியுங்கள். பிறகு நம் 'பாண்டேஜ்''' என்று கூறி விட்டாள். அவளுக்கு லலிதாவின் மேல் வெறுப்பும் கிடையாது; வாஞ்சையும் கிடையாது. தனிப்பட்ட குணாதிசயங்களோடு அவள் வேதாந்தத்தைக் கவரவில்லை. வேதாந்தமும் அவளை ஏதோ அளவுக்கு மீறின காதல் வயப்பட்டோ, விரக தாபத்தால் ஈர்க்கப்பட்டோ அவள் மேல் பைத்தியமாகி அலையவில்லை. ஏதோ மன ஈர்ப்புத்தான். சபல குணங்களின் இருமுனை ஈர்ப்பு அவ்வளவு தான்; ரகசியமான முறையில் சந்திப்பை மூடி மறைக்க இருவர் மனத்திலும் பயம் மூளவிட்டது. அந்தப் பயத்தோடு இருவரும் தூர விலகிப் போய்விட முடியவில்லை. உறவு

......இந்தக் குழந்தையைப் பற்றி எல்லாம் எனக்குத் தெரியும். இதோடு நீ இங்கே வந்தால் உனக்கு இந்த வீட்டின் கதவு சாத்தப்பட்டுவிடும்......



அவ்வளவு நெருக்கமானதாகப் பிணைந்துவிட்டிருந்தது. இவைகளோடு அவர்களுடைய 'பாண்டேஜை'த் தடுக்கவும் யாருமில்லை. ஒரே ஒரு தடை லலிதாதான்! வயது வந்த பெரிய பெண்.

"அப்படியா?" என்று வியந்தான் வரதன். லலிதாவின் வார்த்தைகள் அவனுக்கு வியப்பாகத் தோன்றின.

"ஆமாம்..." என்றாள் லலிதா வெட்கத்துடன்.

"அந்த ரமாபாய்க்கு வயது முப்பதுக்கு மேலே இருக்கும். இலை மறைவு காய் மறைவாக இது ஐந்து வருஷங்களாகவே உண்டு."

"ஐம்பதுக்கு மேல் வயதை ஓட்டிவிட்ட உன் தந்தைக்கு இந்த வயதில்....."

"வயதுக்கும் விவேகத்துக்கும் அவரைப் பொறுத்த வரையில் சம்பந்தமில்லை." லலிதா இதை வெறுப்புடனோ, வேகத்துடனோ சொல்லவில்லை. அநுபவித்துக் களித்த, அல்லது பார்த்துப் பார்த்துப் புளித்த நிலையோடு ஒருவித அலட்சியமாகவே பேசினாள்.

"இப்பொழுது சொல்லுங்கள். நான் அவருக்கு ஒரு தடைதானே ?"

இதற்கு வரதன் "தடை என்று ஏன் எடுத்துக் கொள்ள வேண்டும்? உனக்கும் காலத்தில் நடக்க வேண்டியதுதானே !" — என்றான் சிரித்துக் கொண்டே.

அன்று அவள் வரதனை வகுப்பறையில் கண்டபோது மிக மிக அதிகமாகக் கலவரம் அடைந்தாள். வரதனுடைய தோற்றம் அவளை என்னமோ செய்தது.

ஏன் இவர் இப்படி இருக்கிறார்? உடையும், முகமும் இப்படி இருப்பானேன் ? வீட்டில் ஏதேனும் நடந்திருக்குமோ? கண்கள் கூடக் கலங்கிப் போயிருக்கின்றனவே! தலை கலைந்திருக்கிறது. அவரைப் பார்த்தால் ஒரு கல்லூரி மாணவர் போலவேயில்லையே ! ஏழைமைக்கு இப்படி ஒரு கோலமா?



வகுப்பு முடியும் வரை அவள் சிரமப்பட்டுக் காத்திருந்தாள். அது முடிந்ததோ இல்லையோ, 'விடு விடு'வென்று அவர்கள் எப்பொழுதும் சந்தித்து உரையாடும் சிமெண்ட் மேடையருகில் போய் நின்றாள்.

அவன் வந்தான்.

அவனுடைய நிலையை அவன், அவள் வற்புறுத்தியதின் பேரில் விளக்கினான். வீட்டில் உண்டான ஒரு தவிர்க்க முடியாத இக்கட்டு. சங்கிலியை அடகு வைத்த இடத்தில் அதை உடனே திருப்பிக் கொள்ளும்படி தொந்தரவு கொடுப்பதையும், அப்பொழுது இருக்கின்ற நிலையில் அதை மீட்கப் பணமில்லாமல் அலைவதையும், இதன் காரணமாக வீட்டில் அவனுடைய விதவைத் தமக்கைக்கும் அவனுக்கும் ஏற்பட்ட சண்டை காரணமாக ஏற்பட்ட மனஸ்தாபங்களையும் விளக்கி விட்டுச் சோகத்துடன் நின்றான்.

வரதன் கலங்குவதை அவளால் காணவே முடியவில்லை. அன்று மாலையே அவனைத் தன் வீட்டுக்கு அழைத்துச் சென்று நகையைத் திருப்புவதற்கான தொகையைக் கொடுத்தாள்.

இரவு தொழிற்சாலையில் வேலை. பகல் நேரத்தில் கல்லூரிப் படிப்பு! நிம்மதியில்லாத வீட்டின் சூழ்நிலை. எவ்வளவு முயன்றும் அமைதியை நிலைநாட்ட முடியாத குடும்பம். வறுமையோடு பின்னிப் பிணைந்த சூழ்நிலையிலும் குறையாத குறைகள், கோபதாபங்கள், கடுசொற்கள், மனக்கிலேசங்கள் நடுநிலைமை நழுவிப் போகும் சம்பவங்கள்— எதையும் சரிவர ஒரு கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வர முடியாத பெரிய குடும்ப நிலை. யாருக்கென்று வாழ்வது ? யாருக்கென்று உழைப்பது ? படித்துப் பட்டம் பெற்று உழைத்து, சம்பாதித்து இந்த ஆலவிருட்சம் மாதிரியான குடும்பத்தைப் பாதுகாத்துக் கடைத்தேற்ற வேண்டும்.

வரதன் ஒரே ஒரு முறையல்ல, இப்படிப் பல முறைகள் சிந்தித்து மலைத்திருக்கிறான். இந்தச் சாகரத்தில் நீந்திக் கரை சேருவோம் என்ற நம்பிக்கை அவனுக்குச் சிறிது காலமாக இல்லை. அதை என்றோ இழந்துவிட்டான். நடுவில் லலிதாவின் அன்பும் பரிவும் அவனுடைய நைந்த உள்ளத்தில் கொஞ்சம் பசுமை செழிக்க உதவி செய்தன. இப்பொழுது அந்த நம்பிக்கையையும் இழந்து கொண்டு வந்தான். அவளுடைய உதவியை எத்தனை நாட்களுக்குப் பெற முடியும்? அவளையும் நேசித்துக் கொண்டு, அவள் உதவிக்காகக் கையையும் நீட்டிக் கொண்டு இருப்பது எவ்வளவு கேவலம்? குடும்பம் இருக்கிற நிலையில் அவளை நேசிக்கிறேன் என்று வேறு சொல்லியாகி விட்டது. இந்த நிலையில் அவளையும் கல்யாணம் செய்து கொண்டு அந்தச் சூழலில் அவளையும் கொண்டு வந்து சேர்க்க வேண்டுமா ?

கேள்விகள், அதற்குக் கிடைத்த பதில்கள், மனத்தளவில் எழும்பி அடங்கிய அசாத்தியங்களின் களைப்பு — இதற்குப் பின் உண்டான முடிவுதான் மிக மிக பயங்கரமான, இயற்கையை மீறின ரகசியம்.

அன்று மாலை நேரத்தில் வகுப்புகள் எல்லாம் முடிந்தபின் வெளியே வந்தபோது அபூர்வமாக வரதன் பரிசோதனை அறைக்குள் சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டே அறையின் ஒரு கதவை மட்டும் திறந்து கொண்டு உள்ளே நுழைவதைத் தூர நின்று பார்த்தாள் லலிதா. வரதன் அந்தப் பரிசோதனை அறையைத் திறந்த நிலை, கலவரம் சூழச் சுற்றுமுற்றும் பார்த்தது. அன்று முழுதும் அவனிடம் காணப்பட்ட தனிமை, மோனம் எல்லாவற்றையும் ஒன்று சேர்த்துப் பார்த்த போது லலிதாவுக்கு ஏற்பட்ட படபடப்புக்கு அளவேயில்லை.

இந்த வேளையில் அவருக்கு அங்கே என்ன வேலை இருக்கும்?

கேள்வி அவளை அந்த அறைக்குள் நெட்டித் தள்ளியது. உள் பக்கம் தாழிடப்படாமல் இருந்த ஒரு கதவை மட்டும் சப்தமின்றித் திறந்து கொண்டு உள்ளே எட்டிப் பார்த்தாள். பார்க்க எடுத்துக் கொண்ட அந்த விநாடியை விடக் குறைந்த அளவு நேரந்தான் அவள் வரதன் மேல் பாய்ந்த நேரம். அவன் வாயருகில் போய் விட்ட கண்ணாடிக் கோப்பையை அகர வேகத்தில் தட்டிவிட்டவள் அதே வேகத்தில் அங்கிருந்த ஸ்டூல் ஒன்று தடுக்கிக் கீழேயும் விழுந்தாள். எந்தக் கண்ணாடிக் கோப்பையை வரதன் கையினின்று தட்டி விட்டாளோ, அந்தக் கோப்பையில் இருந்த அக்கினித் திராவகம் அவள் முகத்தில் கொஞ்சம் பட்டுக் கீழே விழுந்து உடைந்து சிதறியது.

வலது காதுக்கு அருகில் பட்ட திராவகம் கீழ்த் தாடை வரையில் வழிந்து மேல் தோலைக் கருக்கி விட்டுக் கொண்டிருந்த நிலையில் கீழே விழுந்த லலிதா வலது கன்னத்தைப் பிடித்துக் கொண்டே எழுந்தாள்.

வரதன் பதறி விட்டான். சில விநாடிகள் அவனது மூளை செயலற்று ஓய்ந்துவிட்டது.

''லலிதா!.... லலிதா....!''

லலிதாவின் கண்களிலிருந்து வலி தாங்க முடியாமல் கண்ணீர் வந்து கொண்டிருந்தது. முதல் உதவிக்கென்று அவன் பதற்றத்துடன் வெளியே ஓடி வந்து உதவிக்கு அங்கிருந்த இரண்டு விரிவுரையாளர்களை அழைத்தான்.

''மேஜை மேலிருந்த அக்கினித் திராவகம் என் கைபட்டு நழுவி என் மேல் சிந்திவிட்டது. அவ்வளவுதான்!'' என்று வந்து கேட்டவர்களிடம் அவளே முந்திக் கொண்டு பதில் சொன்னது தன்னைக் காப்பாற்றத்தான் என்பதை வரதன் அறிந்துக் கொண்டான்.

திடசாத்திரமான உடல், மனமும்தான் அப்படி. எனவேதான் இவ்வளவெல்லாம் ஏற்பட்டும் லலிதா எந்த நிலையிலும் கூர நினைவுகளை இழந்து விடவோ, உறுத்தும் ரண வேதனையால் வாய்விட்டு அரற்றவோ செய்யவில்லை. மாறாக, வந்த விபத்துக்கான காரணத்தைத் தூண்டித் துருவிக் கேட்டவர்களிடமெல்லாம் அதையேதான் சொன்னாள்.

தந்தை வேதாந்தத்தின் கவலையும் விசாரமும் இரட்டிப்பானதற்குக் காரணம் இருந்தது. மகள் ஏற்கனவே அழகற்றவள். அதோடு அக்கினித் திராவகம் பட்டுக் காதிலிருந்து கீழ்த்தாடை வரையில் இரண்டு விரல் அகலத்துக்குத் தோல் கருகிப் பின் உரிந்து வெண்மையாகி விட்டிருந்தது. அவரது கொஞ்ச நஞ்ச நம்பிக்கையையும் வேரோடு சாய்த்து விட்டது.

மனத்தில் வேதனையின் உறுத்தல் புரையோடிக் கொண்டிருக்கையில், இயல்பாக இருக்க வேண்டிய அன்பின் அந்நியோந்நியத்தில்கூடச் சிறு கீறல் விழத் தொடங்கி விட்டது.

இருபது நாட்களுக்குப் பின் லலிதா மீண்டும் கல்லூரி வந்த போது அவளுக்குக் காத்திருந்த அந்தச் செய்தி அவளுடைய ஆறாத் துயரத்துக்கு அப்பொழுதே அடிகோலி விட்டது. வரதன் ராணுவத்தில் சேர்ந்து விட்டார். இனி கல்லூரிக்கு வரமாட்டார்.

தனியே நடந்து வந்து கொண்டிருந்தவள் வானத்தை நிமிர்ந்து பார்த்தாள். மாலை நேர வானில் மேகத் திடலுக்குக் கீழே தனியாக ஒரு பறவை மிக மிக நிதானத்துடன் பறந்து போய்க் கொண்டிருந்தது. துயர் சூழ்ந்த இந்தப் பத்து நாட்களில் கல்லூரியும், அதன் வகுப்புகளும், வரதனுடன் அமர்ந்து பேசுகிற மரங்கள் அடர்ந்த அந்தத் தோப்பும், பரிசோதனை அறையும் அவள் உள்ளத்தில் வெறுப்பையும் வேதனையையும் வளர்த்தன.

அழகற்ற தன் வாழ்வுக்கு ஒரேயொரு துணை.

உயிரைக் கொடுத்து, உயிரைக் காத்ததற்கு நேரில் சந்தித்துப் 'போய் வருகிறேன்!' என்று சொல்லக்கூட மனம் வராமல் மனம் மரத்துப் போன விந்தையை எண்ணி நொந்தவளுக்கு, அன்று வந்த அக்கடிதம் அவளுடைய கண்ணீரைத் துடைத்தது.

குடும்பக் கஷ்டத்தின் காரணமாக நிரந்தரமாக விடுதலை பெறத் துடித்து அக்கினித் திராவகத்தைக் குடித்து உயிரை மாய்த்துக் கொள்ள முயன்றது. அதனால் உண்டான சங்கடங்கள், அதற்கு மன்னிப்பு, சாவைவிட வாழ்விலே வாழ்வை, எதிர்த்துப் போரிட்டு அதன் சவாலை முறியடிக்க எண்ணியது. நேரில் வந்து விட்டால் அனுமதி கிடைக்காது என்ற சந்தேகத்தால் வெளியில் யாரிடமும் சொல்லாமல் ராணுவத்தில் சேர்ந்து விட்டது — என்று இப்படி எல்லாமே இருந்தது அக்கடிதத்தில். அதோடு, ''உன் தியாகத்துக்குப் பிரதி செய்யவே அருகதை யற்றவனாகி விட்டேன். மனிதாபிமானத்தின் முன் நீ மிக மிக உயர்ந்து விட்டாய். உன் தியாகத்தை மறப்பவன் மனிதனே ஆகமாட்டான். நலமுடன் காத்திரு — எந்நாளும் நாட்களானாலும் வந்து விடுவேன். முன்பு அன்றாட வாழ்க்கைப் பிரச்னைகளை முன்வைத்துக் கொண்டு போராடிக் கொண்டிருந்தேன். தனியாக.... ஆனால் இப்பொழுதோ பல பேர்களுடன் சேர்ந்து நாட்டுக்காகப் போராடும் பணியில் இறங்கிவிட்டேன்'' — என்று இப்படிக் கடிதம் நீண்டு கொண்டே போய் ஓரிடத்தில் முடிந்திருந்தது. அந்தக் கடிதம் முடிந்த இடத்தில் தான் லலிதாவின் சோக வாழ்வும் ஆரம்பித்தது.

வாழ்க்கை என்பது வெறும் காதல் கடிதங்களில் மட்டும் இல்லை என்பதை வரதன் அவளைத் தனியே விட்டுச் சென்றபின் உணர்ந்தாள் லலிதா.

தூரத்துப் பச்சை போல வெறும் எண்ணங்களை மட்டும் உணர்வு பூர்வமாக வளர்த்துக்கொண்டு அதன் இதமான நிழலிலே போலித்தனமான சுகத்தை நுகர்வதை வளர்த்துவிட்ட அவள் இதயம் ஏற்கவில்லை. வளர்த்துவிட்ட அவள் உடல் ஏற்கவில்லை. வளர்த்து விட்ட நியாயமான ஆசை ஏற்கவில்லை. வரதனுடன் அவள் எட்ட நின்று பழகிய ஆரம்ப காலத்துக்கும், நெருங்கி வந்து தொட்டு அணைத்துச் சிரித்து, முகத்தை வருடி, முத்தமிட்டுப் பழகிய கடைசி நேரத்துக்கும் எவ்வளவோ வித்தியாசமுண்டு. அந்தப் பழக்கத்தின் நெருக்க நினைவுகள்தான் இன்று அவளுடைய எதிரிகள்.

இரண்டு மூன்று மாதங்களுக்கு ஒரு முறை வந்த கடிதங்கள்கூட இப்பொழுதெல்லாம் அபூர்வமாகப் போய் விட்டன.

நாட்களின் எண்ணிக்கையைக் கணக்கிடுவதைவிடச் சோகமயமான நினைவுகளால் உடல் வாடிய வேதனையைக் கணித்துவிடுவது லலிதாவின் உருவத்தைப் பொறுத்த வரையில் சுலபமாகவே தோன்றியது.

வீட்டுக்கு வரும் கடிதங்கள்கூட நின்று விட்டன. மாதமானால் வரும் பணத்தோடு சரி. அதிலிருந்து வரதன் ராணுவத்தில் பணியாற்றுகிற வேலைப் பிரிவு மிக மிக முக்கியமானதாக இருக்குமென்பதை ஊகிக்க முடிந்தது லலிதாவுக்கு.

வேதாந்தத்தின் சினம் இந்த ஓராண்டுக் காலத்தில் குறைவதற்கான சம்பவம் ஒன்றும் நடக்கவில்லை. ரமாபாயை அவர் திட்டப்படி பதிவுத்[1] திருமணம் செய்து கொள்வதற்கான சந்தர்ப்பத்தை லலிதா இன்னும் ஏற்படுத்தவே யில்லை.

இளமைத் துடிப்புள்ள அந்த வாலிப நாட்களைவிட இதொன்றும் வசந்தம் வீசும் நாட்களில்லைதான். வேகமும் துடிப்பும் சிந்திச் சிதறும் பருவமில்லைதான். என்றாலும், இந்த இணைப்பிலும் ஓர் அவசரம் அவர்களிடையே! இருவருக்குமே விளங்காத மோக நிலையின் தவிப்பு.

அக்கினித் திராவகம் பட்டுத் தோல் கருகிக்காடு கிருந்து கீழ்த் தாடை வரை வெள்ளையோடி விகாரப்படுத்திவிட்ட மகளின் முகத்தைப் பார்க்கும் போதெல்லாம் அநுதாபத்தைவிடச் சில வேளைகளில் ஆத்திரம் தான் அதிகமாக வரும் அவருக்கு. செய்யாத சிகிச்சை இல்லை. பார்க்காத டாக்டர் இல்லை. ஏற்கனவே அதிக அழகில்லாத கறுப்பு. அதில் இது வேறு சேர்ந்து கொண்டது.

வேதாந்தத்துக்குத் தெரியாது. இது எப்படிப்பட்ட தியாகத்தின் வடு என்று.

வேதாந்தத்தின் மனக் குமுறல் அவர் நெஞ்சத்தில் கனன்று பிறகு லலிதாவின் முன் வெடித்துச் சிந்தியது.

''உன்னை அவன் நன்றாக ஏமாற்றிவிட்டான். யாரையோ நல்ல மனமில்லாதவனை நம்பி நீ மோசம் போய் விட்டாய். இனியும் அவனை நினைந்து வீணில் காலம் கடத்துவதை நான் விரும்பவில்லை. எனக்குக் காரியம் நடந்தாக வேண்டும்'' என்றவர் மேற்கொண்டு காரியங்களில் தீவிரமாக இறங்கி விட்டார். தடுத்துக் கூறும் சந்தர்ப்பத்தை அவர் அவளுக்குத் தரவில்லை.



''கரும்பு என்ன விலை?''
''செஞ்சுரி பைசா தான்!''

விம்மலிலும், வெடிப்பிலும் இரண்டு முறை வரதனின் வீடு சென்று அவனுடைய ராணுவ விலாசத்தை வாங்கி வந்தாள். அவசரம் அவசரமாக அவள் எழுதிய கடிதத்துக்கு அவனிடமிருந்து பதிலே வரவில்லை.

'தந்தையின் வார்த்தைகள் ஒரு வேளை உண்மையாக இருக்குமோ? இருக்கும் வரையில் தேவையான உதவிகளைப் பெற்று, அதற்காகவே காதலிப்பது போல் நடித்து என்னை ஏமாற்றியிருப்பாரோ? அப்படியானால் அவரைக் காப்பாற்றப் போய் ஏற்றுக் கொண்ட இந்தத் தழும்பு வெறும் வடுதானா? தியாகத்தின் சின்னமில்லையா? இதயமில்லாத ஒரு போலியை நம்பியதற்கு நான் அடைந்திருக்கிற வாழ்க்கை அடையாளமாகவே போய் விடுமா?'

எண்ணம் கசந்தது. இதயம் இருண்டது. நினைவுகளும், நினைவைச் சார்ந்த நினைவுகளும் மன அமைதியை அதிகப்படுத்திய நாட்களிலேயே வேதாந்தம் தம் தீவிரமான மாப்பிள்ளை வேட்டையில் வெற்றியும் அடைந்து விட்டார்.

ஒரு நாள் மாலைப் போதில் அவளை யாரோ சேலத்திலிருந்து பெண் பார்க்க வருகிறார் என்பதைச் சொல்லித் தயாராக இருக்கும்படி கட்டளை பிறப்பித்து விட்டார், வேதாந்தம்.

வரதனின் பாராமுகம், தந்தையின் வார்த்தைகள், வரதனைப் பற்றித் தந்தை ஊளப்பி விட்ட தப்பபிப்பிராயங்களின்பின்னே உள்ள வலு. அதனால் ஏற்பட்டு அடங்காத மனக் குழப்பத்தின் சாயல், இவை போன்ற

நிலையில் அவள் வேதாந்தத்துக்கு மறுப்பேதும் கூறவில்லை, பணிந்தே போய் விட்டாள்.

தந்தை பார்த்துத் தேர்ந்தெடுத்த அந்த மனிதர் தன்னை எப்படி விரும்பினார்? தன் முகத்தில் உள்ள வடுவைக் கண்ட பின்னரும் கூடத் தன்னை ஏன் மணந்தார் என்ற ரகசியம் பின்னர்தான் தெரிந்தது அவ ளுக்கு. அதிலும் அவளுக்குப் பெரும் தோல்வி தான். ஒன்றிலே இழந்த அமைதியை வேறு ஒன்றில் பெறலாம் என்று மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு நேச நினைவின் கதவுகளை இறுக்கமாகச் சாத்திவிட்டு வாழ்வெனும் வெளியில் வந்து நின்ற போது அவளை மணந்த நரசிம்மன் அவளை நெருங் காமல் தூர நின்றான். தூர நின்றதோடு மட்டுமல்ல, தூரவே விலகியும் சென்றான்.

''என்னைப் பிடிக்கவில்லையா உங்களுக்கு?'' அவள் கேட்ட முதல் கேள்வி இது.

நரசிம்மன் நகைத்தான். துயரத்துக்கு நகைப்பதும் ஒரு குணம் என்றால் அது நகைப்பு இல்லை.

''எனக்கு இந்த உலகமே பிடிக்கவில்லை.''

''இந்த உலகமே பிடிக்காமல்தான் என்னை விவாகம் செய்து கொண்டீர்களா?'' என்று கேட்டுவிடத் துடித்தாள். ஆனால் அதை மாற்றிக் கொண்டு, ''நான் அழகில்லாதவள். அதோடு அருவருப்பாகக் கன்னத்தில் தோல் உரிந்து வெண்மையான தழும்பு வேறு. அதுதான் காரணமாக இருக்கும்'' என்றாள். லலிதாவின் குரல் துயரத்தோடு வந்தது. கண்களும் பனித்தன.

அருகில் நின்ற நரசிம்மன் தழைந்த அவள் முகத்தைத் தூக்கினான்.

''உன் அழகைப் பற்றியே நான் கவலைப் படவில்லை. நீ அப்படியில்லையே என்ற ஏக்கமோ, தாபமோ எதுவுமே எனக்கு இல்லை. உன்னைப் பெண் பார்க்க வந்த போதே இந்த வடுவைப் பார்த்தேன். உன் தந்தையும் அதன் காரணத்தைச் சொல்லி விட்டார். ஆகையால் இதைப் போன்ற புற நிலையின் தேய்வுகளை நான் அவ்வளவாகப் பொருட்படுத்தவேயில்லை.''

நரசிம்மன் அவளை விட்டு நகர்ந்து நின்றான். அவன் பேச்சுக்கள்கூட அவளுக்குப் புரியாப் புதிராக இருந்தன.

''பின் இந்த உலகமே பிடிக்கவில்லை என்று கூறக் காரணமென்ன ?''

நரசிம்மன் சிறிது நேரம் தயங்கினான். பிறகு திடம் பெற்றவனாக, ''நீ எனக்கு மனைவியாக இருப்பதைவிட ஒரு குழந்தைக் குத் தாயாக இருக்கவேண்டும். இருப்பாயா?'' என்று கேட்டான்.

லலிதாவுக்கு ஒன்றுமே புரியவில்லை. தாம் ஏதோ பெருமளவில் ஏமாந்து விட்டதாக மட்டுமே அந்த நேரத்தில் ஓர் அவசர உணர்வாக உணர முடிந்தது.

''உங்களுக்கு ஒரு குழந்தையா ?''

''ஆமாம்.''

''அப்படியானால் நான்.... நான்.''

''நீ இரண்டாந்தாரமல்ல எனக்கு....'' என்றவன் நீண்ட பெருமூச்சோடு நாற்காலி யில் அமர்ந்தான்.



நீ குழந்தைகளைப் போலவே இருக்கப் பாடு படலாம்; ஆனால், உன்னைப் போல அவர்களை ஆக்க முயலாதே. -- கலீல் ஜிப்ரான்

அனுப்பியவர்: அ. பாண்டியராசன்

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

''எனக்கு முதல் மனைவி என்ற ஒருத்தி கிடையாது. ஆனால் குழந்தை மட்டும் உண்டு. இதை நீ நம்புவாயா ?''

''இதை நான் நம்பி என்ன ஆகவேண் டும்? நம்பாமல் உங்களுக்கு வாக்குக் கொடுப் பதைவிட நீங்கள் சொல்கிற உண்மையை ஏற்றுக் கொண்டு உங்களைத் திருப்திப்படுத்த நிச்சயமாக என்னால் முடியும்.''

லலிதாவை நிமிர்ந்து பார்த்தான் நரசிம் மன். இரண்டு கண்களிலிருந்தும் கண்ணீர் வழிந்தோடியிருந்தது.

ஓடிச் சென்று அவனது கண்களைத் துடைத்து விடுவதற்கானதொரு நெகிழ்வை அந்தச் சூழ்நிலை அவளுக்குக் கொடுக்கவில்லை. அதற்கு மாறாக மனத்தின் மூலையில் குழப்ப மும், பயமும் வந்து கனத்துக் கொண் டிருந்தன.

''நடத்தை கெட்ட துரோகி ஒருத்தியை நம்பி நான் மோசம் போய் விட்டேன் லலிதா!'' என்று சொல்லிவிட்டு உடல் குலுங்கக் குலுங்க அழுதான் நரசிம்மன்.

லலிதாவினால் ஒரு பிடிப்பின்றி அங்கே நிற்க முடியவில்லை. எதிரே கிடந்த நாற்காலி யைப் பற்றிக் கொண்டு விழிகளில் பீதியோடு அசைவற்று நின்றாள்.

''நடத்தைகெட்ட ஒருத்தியை நம்பி என் உடம்பைக் கெடுத்துக் கொண்டு விட்டேன். அது போதாதென்று எவனுக்கோ அவள் பெற்றுக் கொண்ட ஒரு பையனுக்கு இன்று தந்தையாக இருக்க வேண்டிய பாவத்தையும் நான் ஏற்றுக் கொண்டிருக்கிறேன். நல்லவள் என்று எண்ணியது ஒருபுறமிருக்க என் சபலத் தால் ஏற்பட்ட வினை என்பதையும் நான் உன்னிடம் சொல்வதில் வெட்கப்படவில்லை. நல்லவள் மாதிரி என்னிடம் நடித்துவிட்டு வேறு யாருக்கோ ஜனித்ததை 'உங்களுடை யதுதான்' என்று கூறி என்னிடம் ஒப் படைத்து விட்டு ஒரு நாள் தன் சுய சொரு பத்தையும் காட்டிவிட்டு ஓடி விட்டாள்.''

''ஓடி விட்டாளா?''

''ஆம்! ஓடிவிட்டாள், வேறு யாருடனோ!''

''அப்படியென்றால் அவன்...''

''அவனை எப்படி வேண்டுமானாலும் அழைக்கலாம். கண்ணியமற்றவனை எந்தப் பெயர் வைத்து அழைத்தால் என்ன?''

லலிதாவுக்கு உடம்பெல்லாம் வியர்த்துக் கொட்டியது. ''உங்களுக்குப் பிறக்காத குழந்தை என உங்களுக்கு எப்படித் தெரியும்? அந்த ஒரு பெண்தானே சொல்ல முடியும்?''

''அதை ஆணும் சொல்ல முடியும் இல்லையா?''

லலிதா மௌனம் சாதித்தாள்.

''அவள் எனக்கு முன் வேறு யாருடனோ கொண்டிருந்த தொடர்பும், அதனால் உண்டானதும் எனக்குத் தெரிய வந்தபோது அவளை வெறுத்து ஒதுக்கி விடத் தீர்மானித்தேன். இதை உணர்ந்து விட்ட அவள் தனக்குக் குழந்தை பிறக்கும்வரையில் சாது போல் இருந்து விட்டு, பிறகு குழந்தையை என் கையில் கொடுத்து விட்டுப் பாசாங்கு செய்தாள். நீலி போல் அழுதாள். ஊரைக் கூட்டினாள்....''

நரசிம்மன் அதை அதோடு நிறுத்திவிட்டான். அதற்கு மேல் அதைத் தொடர அவனுக்கு விருப்பமில்லை. மௌனியாகி விட்டான். அவனது மௌனம் சீக்கிரம் கலையாது என்பதை அறிந்தவள் அப்போது உண்டான ஒரு மன நெகிழ்வின் உந்தலோடு, ''உங்களிடம் உங்களுடையதில்லாத குழந்தையை ஒப்படைத்து விட்டாள். அதை இனி மேல் நான் பாதுகாக்க வேண்டும். அவ்வளவுதானே?'' என்றாள்.

''ஆமாம்'' என்பது போல் தலை அசைத்தான். பிறகு பெருமூச்சு விட்டுக்கொண்டே, ''இந்த நிகழ்ச்சி நடந்து இரண்டாண்டுகள் ஆகிவிட்டன. அதன் பின் விவாகம் செய்து கொள்ளும் ஆசையே இல்லாமல் காலம் தள்ளிவிட்டேன். இந்தப் பாபச் சின்னத்தோடு இருக்கும் என்னை யார் மணப்பார்கள்? அநேக சம்பந்தங்கள் நழுவியதற்கும் இதுதான் காரணம். முடிவாக என் முன் வாழ்வின் அவலத்தை மூடி மறைத்தால்தான் அக் குழந்தைக்கு ஒரு தாய் கிடைப்பாள் என்பதால் இதை மறைத்து விட்டேன். எனக்கு என் மனைவியை விட, என் இந்தக் கேவலமான பின்னணி வாழ்வைப் புரிந்து கொண்டு அந்தக் குழந்தையை வளர்க்க ஒரு பெண்தான் உடனடித் தேவையாக இருக்கிறது இன்று. அவளை யாரும் ஏற்க மாட்டேன் என்கிறார்கள். நர்ஸ் ஒருத்தி அந்தக் குழந்தையைத் தான் எடுத்துக் கொள்வதாக எடுத்துக் கொண்டு போனாள். இப்பொழுது அவளும் அதைக் கைவிட்டுவிடப் போகிறாள். நான்கு கடிதங்கள் வந்து விட்டன அவளிடமிருந்து, குழந்தையை எடுத்துக் கொண்டு போகும்படி. அவர்களது நண்பர்களும் மற்றவர்களும் ஏதேதோ கூறுவதால் அக்குழந்தை மேல் இருந்த அன்பு சரிந்து விட்டது அவளுக்கு. இந்த விவாகத்தைக் காரணம் காட்டி இன்னும் கொஞ்ச நாட்கள் வைத்திருக்குமாறு நான் கேட்டுக் கொண்டிருந்தேன். இப்பொழுது நீ வந்து விட்டாய். நான் போய் அந்தக் குழந்தையை எடுத்து வர வேண்டும்...'' என்றான்.

நரசிம்மன் அவள் முகத்தையே பார்த்தபடி அமர்ந்திருந்தான். அவன் கண்கள் அவளிடம் சம்மதம் பெறத் துடித்தன.

''இனி நான் என்ன செய்ய வேண்டும்?''

''உன் அனுமதி வேண்டும் குழந்தையை வாங்கி வரவா?''

''கொண்டு வாருங்கள். அதற்குத் தாயாக இருக்க நான் சம்மதிக்கிறேன். போதுமா? உங்கள் மனமும் இதற்காகத்தானே ஏங்கிக் கிடந்தது?''

''என்மேல் உனக்குக் கோபம் இருக்கும். இதை முன்பே சொல்லாமல் மறைத்து என்னையும் உன் அப்பாவையும் ஏமாற்றி விட்டதாக நினைப்பாய். நீ எப்படி நினைத்தாலும் சரி. இனி அதற்கு நீ என்ன தண்டனை கொடுத்தாலும் ஏற்பேன். எனக்கு இந்த இக்கட்டிலிருந்து மீண்டு வர வேறு வழியே தோன்றவில்லை.''

ஆழமானதோர் அநுதாபப் பார்வையோடு நரசிம்மனைப் பார்த்தாள் லலிதா.

'' கோபப்படவோ, ஆத்திரப்படவோ வாழ்க்கையில் என்ன இருக்கிறது? யாருடைய வாழ்க்கையும் தேர்ந்தெடுக்கப்பட்டு வாழ்கிற வாழ்க்கையல்ல. எப்படி எப்படி அமைகிறதோ, எப்படி எப்படி அமைத்துக் கொள்கிறோமோ அதுதான் வாழ்க்கை. படுகுழியில் விழ வேண்டுமென்று யாரும் திட்டமிடுவதில்லை. விழுந்த பின் பார்த்து நடந்திருக்கலாமே என்று எண்ணுவதுதான் மனித சுபாவம். இதில் யாரை யார் குறை கூறுவது? விபத்துக்கள் விபத்தோடுதான் முடிகின்றன. அது யாருக்கு நேர்ந்தால் என்ன?''

லலிதாவின் சமாதான வாதம் நரசிம்மனுடைய பகுத்தறிவைக் குத்திக் கிளறியது. தான் செய்துவிட்ட மாபெரும் தவறை இவ்வளவு சுலபமாக ஏற்று அதை எவ்வளவு பக்குவமாகத் தன்னுள் வாங்கிக் கொண்டு நிதானித்து விட்டாள்! இதை எண்ணிய போது லலிதா அவன் கண்களுக்கு ஓர் அபூர்வப் பிறவியாகத்தான் தோன்றினாள்.

இரண்டு நாட்களை இரண்டு யுகங்களாகக் கழித்துக் கொண்டிருந்தாள் லலிதா. கணவன் கோயமுத்தூர் சென்றிருந்தான், நர்ஸிடம் இரண்டாண்டு காலமாக வளரும் குழந்தையை வாங்கிக் கொண்டு வர.

சுமார் இரண்டு வயது நிரம்பிய குழந்தை பாபுவை—அதுதான் அவன் பெயர்—அவளிடம் கொடுத்து விட்டு மௌனமாக நகர்ந்தான் அவள் கணவன் நரசிம்மன்.

குழந்தை அழகாக இருந்தது. இரண்டாண்டு நர்ஸின் பராமரிப்பில் அதனுடைய போஷாக்கு நன்கு மெருகேறியிருந்தது. குழந்தையைக் கண்டவுடனேயே மனத்தில் ஒரு நம்பிக்கை! குழந்தை யாருடையதாக இருந்தால் என்ன? களங்கமற்ற அதன் இதயம், அதன் பார்வை, குறுகுறுக்கும் முகம் - லலிதாவைக் கவர்ந்து விட்டன.

நினைந்து ஏங்கும் ஏக்கம், பார்த்துப் பொருமும் வாழ்க்கையின் பாலைவனம், நின்று அழுகிற நிலை — இன்றைய சாதாரண ஜட நிலையோடு இணைந்து விட்ட வாழ்க்கை ஒப்பந்தம் — இவைகளுக்கு ஒரு சிறு மாறுதல் போல் இருந்தது குழந்தை பாபுவின் வருகை! ஆனால்....

அவன் வருகை அவனை விரட்டிவிட்டதே!

''என் மனசு சரியில்லை, லலிதா. இந்த அவமானகரமான பாபச் சின்னத்தைக் காண எனக்குப் பிடிக்கவில்லை. நீ இதன்மேல் காட்டுகிற அன்புக்கோ, பாசத்துக்கோ நான் என்றும் தடையாக இருக்க மாட்டேன். எனக்குத்தான் அதை ஏற்க மனம் கூசுகிறதேயன்றி உன்னையும் அந்த மாதிரி

இருக்க வேண்டும் என்று நினைக்கவில்லை. ஆனால் கொஞ்ச நாட்கள் நான் எங்காவது வெளியூர் போய்விட்டு வர எண்ணுகிறேன். இந்த ஒரே இடத்தில் இருந்து இருந்து மனமே சலித்துப் போய்விட்டது. எங்காவது போய்ச் சுற்றிவிட்டு வருகிறேன்'' என்றான்.

உடல் நலமில்லாத அவனது நிலை. மன நிலை சரியில்லாமல் அலைப்புறுவது இவைகளை யெல்லாம் மனத்தில் கொண்ட லலிதா அவனிடம் ''தயவுசெய்து இந்த நிலையில் நீங்கள் எங்குமே போக வேண்டாம். ஏற்கனவே உடம்பு பலவீனப்பட்டிருக்கிறீர்கள். இதோடு சுற்றினால் பின் உடம்பு தேறுவதே கஷ்டம்'' என்று தடுத்துப் பார்த்தாள். ஆனால் அவன் கேட்கவில்லை.

இரண்டு முறை அப்பா ரமாபாயுடன் வந்து விட்டுப் போனார். அவ்வளவுதான். ரமாபாயை ஐம்பதுக்கு மேல் விவாகம் செய்து கொண்டதில் அவருக்குப் புதிய இளமை திரும்பி விட்டது. அந்த மனக் களிப்பில் பாபுவின் பிறப்பின் ரகசியம் அவரிடம் அவ்வளவு ஆழமாக எடுபடவில்லை. அவர் அதை அவ்வளவு முக்கியமானதாகக் கருத மாட்டார் என்பதை முன்பே உணர்ந்த லலிதா அதைப் பற்றி அகௌரவமான முறையில் ஒன்றும் சொல்லாமல் 'இவருடைய முதல் மனைவியின் குழந்தையாம். இதை முன்பே உன்னிடம் சொல்லாததற்கு மிகவும் வருந்தினார்' என்று கூறிவிட்டு, அதனால் தான் அதிகம் கவலைப்படாதவள் போல் காண்பித்துக் கொண்டு தந்தையின் எதிர் உணர்ச்சிகளுக்கு முக்கியமில்லாமல் செய்து கொண்டு விட்டாள். ஆனால் ரமாபாய்க்குக் குழந்தையைப் பற்றியதொரு சந்தேகம் இருந்து கொண்டேதான் இருந்தது. வேதாந்தம் அந்த விஷயத்தை அவ்வளவு சாதாரணமாக எடுத்துக் கொண்டதே ரமாபாய்க்கு எரிச்சலூட்டியது. கணவன் இல்லாத நேரமாகப் பார்த்து லலிதாவிடம் கேட்டும் விட்டாள்.

ரமாபாயின் கேள்வி வந்த தோரணை, அதன் மேல் அவள் காட்டுகிற அக்கறை இவைகளைக் கண்ட லலிதாவுக்கு அதன் மேல் விஷயத்தை மூடி வைக்கவும் முடியவில்லை. அவளிடம் விண்டு சொல்லி விட்டாள்.

ரமாபாயின் அன்புள்ளத்தை உணர அவளுக்கொரு சந்தர்ப்பமாக அமைந்தது அது.

''லலிதா, உன்னுடைய தியாக வாழ்விலே இது இரண்டாவது கட்டம் இல்லையா? முதலில் வரதனைத் தற்கொலையிலிருந்து காக்கப் போய் உனது முகத்தில் இந்தத் தழும்பை ஏற்றுக் கொண்டாய். இப்பொழுது நரசிம்மனை மணந்து யாருக்கோ பிறந்த குழந்தையை அவருக்கென்று ஏற்றுக்கொண்டிருக்கிறாய். தியாக மனப்பான்மையால் உண்டாகும் தியாகத்தைவிட இப்படி வாழ்வில் எதிர்பாராத விதமாகத் தியாகியாகி விடுகிற சந்தர்ப்பம்தான் வாழ்க்கையில் மகோன்னதமானது. உன்னைக் கண்டு நான் பெருமைப்பட அந்தப் பெருமைக்குப் பூர்ண அர்த்தமாக இருக்கிறாய் நீ.''



''எங்கப்பா மருந்துக் கடை வச்சிருக்கார். என் அண்ணன் டாக்டர். என் தங்கை...''

''என்ன? நர்ஸ் தானே?''

''இல்லை! பேஷண்ட்.''

லலிதா தன் கன்னத்துத் தழும்பைத் தொட்டுத் தடவிக் கொண்டாள்.

''வரதனைத் தற்கொலையிலிருந்து காப்பாற்றி இதை ஏற்றுக் கொண்டேன் என்று உங்களுக்கு யார் சொன்னது?'' என்று வியப்புடன் கேட்டாள். காரணம் அந்த ரகசியம் அவளுக்கும் வரதனுக்கும் மட்டுமே தெரியும் என்பது அவள் எண்ணம். அவள் அந்தச் சம்பவத்துக்கான காரணத்தை யாரிடமும் சொன்னதில்லை.

''வரதன்தான். நான் தூண்டித் துருவிக் கேட்டதன் பேரில் உண்மையைக் கூறி விட்டார்.''

லலிதா மௌனமானாள். தியாகம் செய்வதை விட அதை ஏற்றுக் கொண்டவிதம் லலிதாவைப் பொறுத்த வரையிலே சோகமயமான நினைவு ஒன்றுதான்!

ரமாபாய் அதை அதோடு விட்டுவிட்டாள்.

குறைந்த நாட்களே மகள் வீட்டில் தங்கியிருந்த தந்தை ஊர் போய் விட்டார்.

அவளுடைய உலகம் என்பது பாபுதான். யாருக்கோ, யாராலோ பிறந்தது என்று கணவர் கூறுகிற அந்த அபாண்டத்தைத் தாங்கி வளரும் அந்தக் கபடற்ற உள்ளம் தான் அவளுக்கு அருகில் இருந்தது. சில வேளைகளில் அவள் அனுபவிக்கிற வேதனையின் உறுத்தலுக்குப் பாபுவும் இல்லையென்றால் சித்தப் பிரமையேகூட அவளுக்குப் பிடித்திருக்கலாம்.

யாருக்கு யாரால் பிறந்திருந்தால் என்ன? அன்புள்ளமும், அருள் சிரிப்பும் வேற்றுமை தெரியாத மழலை நிலையும், அவளுடைய காய்ந்து, வற்றி, உலர்ந்து போயிருந்த மனத்துக்கு, நினைவுக்குத் தெம்பைக் கொடுத்தன.

நரசிம்மனின் வாழ்க்கையில் குறுக்கிட்ட மதிமுகத்தைக் கற்பனைத் தூரிகை கொண்டு அட்டைப் படமாகச் சித்திரித்திருக்கிறார் ஓவியர் கல்பனா.

## உலகப் புகழ்பெற்ற நாட்டிங்ஹாம் லேஸ் உங்கள் உடை அலமாரிக்கு என்றுமில்லாப் புத்தெழிலைத் தருகிறது!



# லீலா லேஸ்:

காண அழகான... அணிந்தால் பிரமிப்பூட்டும்... லீலா லேஸ் (புத்தைபல இழை) - அசல் நாட்டிங்ஹாம் லேஸ் தற்போது பாரதத்திலேயே தயாரிக்கப் படுகிறது. பரபரப்பூட்டும் பலவித டிசைன்கள், கவர்ச்சிகர வர்ண வகைகளில் தேர்ந்தெடுங்கள் - ஆடைபணிகள், ஸ்கர்ட்டுகள் அல்லது எப்பொழுதாவது அணியும் ஆடைகளுக்கு. சோளிகள், ரவிக்கைகள் மற்றும் ஸல்வார் கமீஸ் ஆகியவற்றுடன் கூடிய உடை அலமாரியைக் கனவிலும் நினைக்க முடியாத குறைந்த விலையில் லேஸ் மயமாக்குங்கள். சிறந்த கடைகளில் விரைவில் லீலா லேஸைக் காணுங்கள் - எல்லாவற்றிற்குமே லீலா லேஸ் எனவிரும்பத் தொடங்குவீர்கள்!

ஆடைகளைத் தயாரித்தது வேணிடி.

பிரமிப்பூட்டும் பொலிவு.

- சலவை முறைக் குறிப்புகளின் துண்டுப் பிரசுரத்தைக் கேட்டுப் பெறவும்.

**லீலா லேஸ்**

ஏற்றுமதி பற்றிய எல்லா விவரங்களையும் அறிய, எழுதவும்
ஸ்ரீ. வி.பி. கிருஷ்ணன் நாயர்,
மானேஜிங் டைரக்டர்.

லீலா ஸ்காட்டிஷ் லேஸ் ப்ரைவேட் லிமிடெட்,
அந்தேரி - குர்லா ரோட், பம்பாய்-59-AS

ஏஜெண்டுகள்: மாயா டெக்ஸ்டைல் ஹால், 69, சட்டன் பஜார், சென்னை-3.
தி க்ரீன் ஷாப், கமர்ஷியல் ஸ்ட்ரீட், பெங்களூர்.

G.35-TAM

அவளை அவள் அம்மாவென்று அழைத் தாள். அவள் அவளை அன்புப் பெருக்கால் வாரி எடுத்து அணைத்தாள்.

அன்பு வளர்ந்தது. பாசப் பிணைப்பில் கணக்கற்ற அன்பு முடிகள் அவிழ்க்க முடியாமல் விழுந்தன.

அவளுடைய உலகத்திலே வசந்தம் இல்லை தான். என்றாலும் அதன் சாயல் இல்லாமல் போய் விடவில்லை. பாபுவால் அந்தச் சாயலின் நிழலில் கழித்தாள்.

பாபுவைப் பற்றியவரையில் அவளுடைய நம்பிக்கை அபரிமிதமானது. பாசம் வளர்ந்த வேகமும், விதமும் அவனை இனி அவளிடமிருந்து யாராலும் பிரிக்க முடியாது என்கிற நம்பிக்கையில்தான் வேரூன்றி நின்றது.

வாழ்வின் முன் அவள் அடைந்த மகத்தான தோல்விகளை யெல்லாம் அது ஈடு கட்டிக் கொண்டிருந்தது.

அழகற்றவளாகப் பிறந்தது. முகத்தில் தழும்பைத் தாங்கிக் கொண்டது. உயிருக்கு உயிராக நேசித்ததாக ஒருவனை நம்பி நம்பிக்கை இழந்தது. பொருத்தமற்ற ஒருவருக்குக் கழுத்தை நீட்டித் தாலியை ஏற்றுக் கொண்டது என்று இப்படி எத்தனை எத்தனையோ தோல்விகள்.

அவை அத்தனையையும் பாபுவினால் ஈடு கட்டிக் கொண்டு குளிர்ந்து நின்றாள்.

அவளுக்குத் தெரியும், பாபுவினால் அவள் நெருங்கிய உறவினர்களின் வெறுப்புக்கு ஆளானது. அவளை யாரும் மதிப்பதில்லை. முக்கியமான நாள் பண்டிகை என்றால்கூட அவளை யாரும் நெருங்கி வந்து அழைப்பதில்லை. ஓரளவு அதைச் சமூகப் பகிஷ்காரம் என்றுகூடச் சொல்லலாம். "யாரோ யாருக்கோ பெத்தாளாம். அதை இவள் கணவன் கொண்டு வந்து இவள் கையிலே கொடுத்தானும். அதை வச்சுண்டு இவ சீராட்டறு" என்ற சொற்களைக் கேட்டுக் கேட்டுக் காது புளித்து விட்டது அவளுக்கு.

"எங்கே வந்தாலும் இதையும் வேறு கூடக் கூட எடுத்துண்டு வரணுமா?" என்று ஒரு வீட்டின் விசேஷ தினத்துக்குப் போன போது எவளோ ஒருத்தி சொன்னது காதில் விழுந்தபின் அவள் எங்கும், யார் வந்து அழைத்தாலும் போவதில்லை.

அலுத்துச் சலித்துப் போன சம்பவங்கள், விவேகமே இல்லாத மனிதக் கூட்டம். காரணமற்ற கோப தாபங்கள், அனுவசியமான உணர்ச்சி வெடிப்புகள் — லலிதாவுக்கு இவையெல்லாம் சிரிப்பைக் கொடுத்தன.

பக்குவமற்ற மனநிலையோடு இணைந்து பிணைந்துவிட்ட வாழ்க்கைப் பந்தம்கூட ஓராண்டுச் சுமையை மெல்ல மெல்ல இழுத்துக்கொண்டு வந்து விட்டது. நரசிம்மன் இல்லாத தனிமை வாழ்க்கையில் அவள் வாடி வதங்கிப் போய் விடவில்லை. பிரிவுத் துயரால் தூக்கமின்றிப் புரண்டு புரண்டு படுக்கவில்லை. அவள் என்றாவது, எப்பொழுதாவது அமைதியற்று, தூக்கம் கெட்டுப் புலம்பியிருந்தால் அது பிரிவுத் துயரால் அல்ல! அவளிடத்தில் நிரந்தரமாக்கப்பட்டு விட்ட சோகத்துக்காகத்தான்.

நரசிம்மனைப் பற்றி என்றாவது நினைத்தால், "பாவம்! போகும்போதே பலவீனமான உடம்பு. எங்கே அயரவோடு சுற்று இருரோ?" என்றுதான் தவிப்பாளே யன்றி வேறெந்த விதக் காரணத்துக்காகவும் அல்ல.

இந்த மனநிலையை எண்ணி அவள் எத்தனையோ தடவைகள் குழம்பிப் போயிருக்கிறாள். 'நான் ஏன் இப்படி இருக்கிறேன்? எல்லாரையும் விடச் சிந்தனையளவில் என்னிடம் காணப்படுகிற இந்தப் புதிரான நிலையை என்னால் துடைத்து விட்டு எல்லோரையும் போலிருக்க முடியவில்லையே.'

ஓராண்டுக் காலம் கணவன் உடன் இல்லாததைக் கூடப் பொருட்படுத்தாத அளவுக்குத் தன் மனம் திண்மை பெற்றுவிட்டது என்ற அர்த்தமா? மனத்தின் மாதுர்யமான நினைவுகள் என்பது அழகிய பெண்களுக்கு மட்டும்தான் இருக்குமா? அழகிய கணவன்களுக்கு மட்டும்தான் இருக்குமா?



## விநோத ஃபீஸ்!

பஞ்சாப் மாகாணத்தில் சுற்றுப் பயணம் செய்தபோது ஒரு சமயம் மகாத்மா காந்தி மிகவும் களைத்துப் போயிருந்தார். காந்தி பக்தரான ஒரு பிரபல டாக்டர் மகாத்மாவுக்கு உடல்நலமில்லை என்று கேள்விப்பட்டு அவரைச் சோதிக்க வந்தார். ஆனால் மகாத்மா ஓய்வு தேவை என்பது தவிர தமக்கு உடலில் ஓர் அசௌகரியமும் இல்லை என்று கூறி உடம்பைக் காட்ட மறுத்து விட்டார். டாக்டர் உடம்பைப் பரிசோதித்துப் பார்க்காத வரையில் தமக்குச் சமாதானமாகாது என்று கூறி அனுமதி வேண்டினார்.

"உங்கள் சமாதானத்துக் கென்றால் சரி. ஆனால் எனக்குப் பீஸ்கொடுத்தால் தான் உடலைப் பரிசோதிக்க அனுமதிப்பேன்" என்றார்.

டாக்டர் உடனே தமது கையிலிருந்த பணத்தை யெல்லாம் திரட்டியெடுத்து காந்தியிடம் கொடுத்து, "இங்கு வருவதற்கு முன் ஒரு நோயாளியைப் பார்க்கப் போனேன். அங்கே கிடைத்த தொகை முழுவதையும் கொடுத்து விட்டேன்" என்றார். காந்திஜி அந்தப் பணத்தை மகிழ்ச்சியுடன் பெற்றுக் கொண்டு ஹரிஜன நிதியில் சேர்க்குமாறு கூறித் தமது உடலைப் பரிசோதிக்க அனுமதித்தார்.

காந்திஜி கதைகளில் கண்டெடுத்தவர்: குடந்தை துரைமுருகன்

வேதனை புன்னகையாய்ப் பூத்து உதிர்ந்தது.

நரசிம்மன் அப்படியொன்றும் பெரிய பணக்காரன் இல்லாவிட்டாலும் சேலத்தில் அவன் குடியிருந்த வீடு அவனுடையது. தேவையான அளவு பாங்கியில் பணமிருந்தது. ஆறு மாதங்களுக்கு ஒரு முறை வட்டியும், தேவையானபோது பணம் எடுத்துக் கொள்ளும் வசதியும் லலிதாவுக்குச் செய்து வைத்து விட்டுத்தான் அவன் போயிருந்தான். எனவே அன்றாட வாழ்வுப் பிரச்னையுடன் மற்றவர் படும் அல்லல் போல லலிதா படும்படியாக நேரவில்லை.

அப்பா வந்துவிட்டுப் போய் அதிக நாட்கள் ஆகிவிட்டன. தந்தையைப் போய்ப் பார்த்துவிட்டு வரலாம் என்று குழந்தையுடன் சேலத்திலிருந்து கோவை புறப்பட்டு வந்தாள். ஆனால் அவளுக்கு அங்கே சரியான வரவேற்பு இல்லை.

''இந்தக் குழந்தையைப் பற்றி எல்லாம் எனக்குத் தெரியும். இதோடு நீ இங்கே வந்தால் உனக்கு இந்த வீட்டின் கதவு சாத்தப்பட்டு விடும். இதை விட்டுவிட்டு வந்தால்தான் எனக்குப் பிடிக்கும், ஆமாம்'' என்று வேதாந்தம் கண்டிப்பாகச் சொல்லிவிட்டு முகம் கொடுத்துக்கூடப் பேசாமல் உள்ளே போய்விட்டார்.

''என்னை மன்னிச்சுடு, லலிதா. நான்தான் உன் அப்பாவிடம் நீ இக் குழந்தையைப் பற்றிச் சொன்ன விஷயங்களைச் சொன்னேன். அதை அவர் இவ்வளவு விபரீதமாக எடுத்துக் கொள்ளுவார் என்று தெரிந்திருந்தால் சத்தியமாகச் சொல்லியிருக்க மாட்டேன். விஷயத்தைச் சொன்னால் உன் மேல் அனுதாபப்படுவார். உன் பெருந்தன்மையைப் போற்றுவார் என்று எதிர்பார்த்தேன். ஆனால் அவரோ இதை ரொம்பக் கேவலமான ஒன்றாக எடுத்துக்கொண்டு என்னிடமே சண்டையிட்டார். அவரை என்னால் சமாதானப்படுத்தவே முடியவில்லை.'' ரமாபாய் உண்மையைக் கூறிவிட்டுக் கண்ணீர் விட்டாள்.

பிறந்த வீட்டின் வாசற்படி ஏறி உள்ளே கூடச் செல்லவில்லை. மனம் நொந்த நிலையில் தோளில் உறங்கும் பாபுவைப் பார்த்தாள். அவள் துயரம் எல்லாச் சூழ்நிலையைக் காட்டிலும் மிக மிக அவலமாக உணர்த்தப்பட்ட அந்த நேரத்தை எண்ணி விம்மி விம்மி அழுது கொண்டே திரும்பி விட்டாள்.

நரசிம்மனின் நெருங்கிய உறவினர்கள் கூட அவளைக் காண அபூர்வமாகத்தான் வந்தார்கள். குழந்தையின் மேல் இருக்கிற வெறுப்பிலும் வேற்றுமையிலும் அவர்களும் தங்குவதில்லை. வாவென்று வாயார அழைக்கின்ற அழைப்பைக்கூடக் கேட்க முடியவில்லை.

சில சமயங்களில் அன்பு மேலிட்டால் பாபுவை வாரி எடுக்கும்போது அவனது கபடற்ற முகத்தைப் பார்ப்பாள். 'என்னை விட்டு விட்டு நீயும் போய் விடுவாயா? எல்லாரையும் போல நீயும் என்னை வெறுத்து ஒடி விடுவாயா?' என்பது போலப் பார்க்கும், பனித்திருக்கும் கண்களோடு அதைப் பார்த்துச் சிரிப்பாள். அவனை விட்டால் அவளை நேசிக்கிற ஒரு சின்ன ஜீவனையும் அவள் இழந்தவளாகி விடுவாள். அதனால் அவனை அவள் வெறுக்கவே மாட்டாள்.

'குழந்தையைப் பார்த்துக் கொள். அதைக் காணும்போதெல்லாம் என் ஆத்திரம்தான் அதிகமாகிறது. இருப்பினும் நீ அதனிடம் காட்டுகிற அன்புக்கு நான் தடையாக நிற்க மாட்டேன்' என்று சொன்ன கணவன் வெளியூர் சுற்றப் போய் எத்தனையோ நாட்கள் ஆகிவிட்டன. சில நாளைக்கு நரசிம்மன் விரைவில் திரும்பமாட்டாரா என்று தோன்றும். சில நாட்களில் 'தனக்கு விவாகமாகி விட்டதா? தான் இப்பொழுது புருஷன் வீட்டில்தான் இருக்கிறோமா?' என்ற பிரமை கூட ஏற்பட்டு விடும். அப்படிப்பட்ட தனிமை அவளுக்கு.

உணர்வின் இரு வேறு தவிப்பு முனையில் நின்று கொண்டிருந்த போதுதான் அன்று எதிர்பாராதவிதமாக வரதன் அவளைத் தேடிக்கொண்டு சேலம் வந்தான்.

காலில் இலேசான ஊனம். முன்பு இருந்ததைவிட உடம்புப் பிடிப்போடு கொஞ்சம் சிவப்பேறிப் பருத்திருந்தது. முன்பு கல்லூரியில் படித்தபோதிருந்த இளமையின் மினுமினுப்பு இல்லை. உழைப்பினால் உண்டான புடைப்பு.

''நான் ராணுவத்திலிருந்து 'டிஸ்சார்ஜ்' ஆகி வந்துவிட்டேன். சண்டையில் இந்தக் காலில் இலேசான காயம் உண்டாகி இந்த ஊனம் நிரந்தரமாக்கப்பட்டு விட்டது. நேராக முதலில் கோயமுத்தூர்தான் வந்தேன். எல்லாவற்றையும் கேள்விப்பட்டேன். உன்னைப் பார்க்க வேண்டும் போல் தோன்றவே உன் சித்தி ரமாபாயிடம் உன் விலாசத்தை வாங்கிக் கொண்டு வந்தேன்.''

'படித்துக் கொண்டிருந்த இன்கவித் திரட்டைப் பாதியில் பிடுங்கிக் கொண்டு ஓடியவர்! வாழ்வில் வஸந்தமேயில்லை என்றிருந்தவளிடம் வந்து 'உன் வாழ்விலும் வஸந்தம் உண்டு' என்று ஆசை காட்டிவிட்டு முன்னதை உண்மையாக்கிவிட்டு ஓடியவர்' என்று நினைத்தபோது அவனைச் சிரித்த முகத்தோடு வரவேற்கக்கூடப் பிடிக்கவில்லை. அவனுடைய வருகைக்கு அவ்வளவு முக்கியத்துவம் கொடுத்துக் கொண்டதாகக் காண்பித்துக் கொள்ளாமல் நின்றாள் லலிதா.

இன்பக் கனவைக் கலைத்தவன் முன்னால் இதயத்தை இறுக்கமாக்கிக்கொண்டு நின்றாள். இதயத்து இறுக்கம் கண்களில் புழுக்கமாகக் கொட்டியது. அதைத் தொடர்ந்து விம்மல் வெடித்தது.

''இந்த நேரத்தில் நான் உன்னிடம் கேட்கின்ற மன்னிப்புக்கூடத் தேவையற்றது. அநாவசியமானது. காலம் கடந்தது என்றாலும்கூட உன் மனதார என்னை மன்னித்து விடு, லலிதா. ராணுவத்தில் என் உத்தியோகம் அப்படிப்பட்டது. மிக மிக ரகசியமான இலாகா. நான் எங்கே இருக்கிறேன் என்பதை நானேகூடத் தெரிந்து கொள்ள அக்கறை காட்டிக் கொள்ளக் கூடாது.'' வரதனின் நெஞ்சம் அடைத்துக் கொண்டது.

''உன்னை ஏமாற்ற வேண்டும் என்ற எண்ணமே எனக்கில்லை.....''

நடந்துவிட்ட விபத்துக்குக் காரணம் கூறிக் கொண்டு நிற்பவன் போல நின்று பேசினான்.

''உன்னைக் காண வந்ததுகூடத் தவறான செய்கைதான். இருந்தாலும் என் நிலையை உன்னிடம் எடுத்துச் சொன்னால்தான் என்னை ஒரு வேளை நம்பிக்கைத் துரோகம் செய்தவன் என்று எண்ணிக் கொண்டிருந்தால் அதை மாற்றிக் கொள்வாய் என்ற நோக்கோடுதான் வந்தேன். என்னைப் பற்றி நீ என்ன வேண்டுமானாலும் நினைக்கலாம். அதையெல்லாம் இன்று நினைவுபடுத்திக் கொண்டு பேசுவதால் நம் இருவருக்குமே நன்மையில்லை தான். நம்மிடையே இருந்த அந்த உறவின் இழை அறுந்து போய் விட்டாலும்....'' லலிதாவின் விசும்பல் ஒலி அவன் பேச்சை நிறுத்தி விட்டது.

தூங்கிக் கொண்டிருந்த பாபு எழுந்து வந்து லலிதாவின் கால்களைக் கட்டிக் கொண்டு அழுது கொண்டே நின்றான்.

''மன்னித்துவிடு, லலிதா. உன் மனத்தின் சோகத்தைக் கிளப்பக்கூடிய அளவுக்கு நான் பேசி விட்டேன். நான் போய் வருகிறேன். ஆனால் ஒரே ஒரு நம்பிக்கையோடு தான் நான் ஊர் திரும்பினேன். அதை இனி சொல்வதில் பயன் எதுவுமேயில்லை. ஒரு வேளை என் வருகைக்காக நீ காத்திருப்பாயோ என்றுதான் எண்ணினேன். அப்படி எண்ணியதிலும் ஓர் அர்த்தம் இருக்கிறது. என்ன தெரியுமா, நான் உன்னை.... நான் உன்னை.... அவ்வளவு ஆழமாக மனப்பூர்வமாக......''

ரொம்ப நேரத்துக்குப்பின் அவள் தன் மௌனத்தைக் கலைத்தாள்.

''பழைய கதையெல்லாம் வேண்டாம். அதைப் பேசவோ, நினைக்கவோ நான் கொஞ்சங்கூட விரும்பவில்லை. நான் ஏன் மாறினேன்? என்னை அப்பொழுது சூழ்ந்து கொண்ட பிரச்னைகள் என்ன? என்னை எந்த வகையில் பாதித்தன என்று கூறவும் நான் கொஞ்சம் கூட விரும்பவில்லை. தேவையில்லாதவற்றைப் பேசுவதால் யாருக்கு என்ன பிரயோசனம்....? அதை விடுங்கள். வேறு ஏதேனும் பேசுவோம். வீட்டில் எல்லாரும் சுகம்தானே !''

''உம்'' என்று தலையை ஆட்டினான். பிறகு, ''இவன்தானா அது....உன் சித்தி சொன்னது இவனைத்தானா?'' என்று கேட்டான்.

''ஆமாம்.''

''எனக்கு எப்படி உன் நிலைக்குச் சமாதானம் சொல்வதென்றே புரியவில்லை. ஒரு பக்கம் உன் மேல் அன்பில்லாத உறவினர்கள். இக்குழந்தையால் உன்னை வெறுக்கும் சுற்றம். குழந்தையுடன் வந்தால் இங்கே வராதே என்று சொல்லி விட்ட தந்தை. யாருடையதையோ உன்னிடம் ஒப்படைத்து விட்டுப் போய் விட்ட கணவர். இவற்றையெல்லாம் தாங்கிக்கொண்டு நிற்கிற உன்னைப் பார்க்கிற போது பெண்மைக்கு இவ்வளவு அநீதிகள் இழைக்கிற இந்தச் சமுதாயத்தைக் கண்டாலே வெறுக்கிறேன்.'' — வரதன்



''நானும் என் மனைவியும் சம்பாதிக்கிற பணத்திலிருந்து சேமித்துக் கட்டிய வீடு சார் இது! இதுலே முக்கியமான ஒரு விசேஷம் என்ன தெரியுமா? சமையல் அறை கட்டுவதற்கான செலவு மட்டும் தான் என்னுடையது. மற்றபடி, பாத்ரூம், டிரஸ்ஸிங் ரூம், ஹால், மாடி அறை, வராந்தா, பம்ப்செட் இதெல்லாம் என் மனைவியின் செலவு!''

---

பேசிக் கொண்டிருக்கும் போதே வீட்டின் வாசலில் வண்டியொன்று வந்து நின்றது. வண்டி பின்னே சற்றே சாய முதலில் கால் தெரிந்தது.

''அதோ, அவர்தான் போலிருக்கிறது'' என்று கூறிக் கொண்டே வாசலுக்கு வந்தாள் லலிதா. நரசிம்மன் வண்டியை விட்டுக் கீழே இறங்கி நிற்கக்கூட முடியாத பலஹீனனாய் வண்டியைப் பிடித்துக் கொண்டு வீட்டுக்குள் வரக் கைலாகு கொடுத்து அழைத்துச் செல்ல உதவியை எதிர்பார்ப்பவன் போல் நின்றான்.

பாபுவைக் கீழே விட்டு விட்டு லலிதா வண்டியடியில் இறங்கி நிற்கும் கணவனை அழைத்து வரக் கூடவே சென்றான்.

''இவர்தான் வரதன். எங்கள் ஊர்க்காரர். இத்தனை நாட்கள் ராணுவத்திலிருந்தார்.'' — லலிதாவின் முதல் அறிமுகத்தோடு நரசிம்மனுக்கு இரண்டு புறங்களிலே லலிதாவும் வரதனும் நின்றனர்.

அவர்களைக் கைத் தாங்கலாகப் பிடித்துக் கொண்டே வீட்டுக்குள் வந்தான் நரசிம்மன்.

வண்டியில் இருந்தவற்றையெல்லாம் எடுத்துக் கொண்டு வந்து வைத்தபின் வண்டி போய் விட்டது.

அசதியோடு நடுக் கூடத்திலிருந்த கட்டிலில் முதுகுக்குத் தலையணை இரண்டைத் தாங்கலாக வைத்துக் கொண்டு நரசிம்மன் சாய்ந்து அமர்ந்திருந்தான்.

போன போதிருந்ததைவிட உடம்பு இன்னும் அதிகமாக இளைத்திருந்தது. கண்களில் பிரகாசமில்லை. முகத்தில் ரோமம் மண்டிக் கிடந்தது.

''என்ன உடம்பு உங்களுக்கு ?'' என்று வேதனையோடு நரசிம்மனைப் பார்த்துக் கேட்டான் வரதன்.

கட்டிலுக்கு எதிரே நாற்காலியைக் கொண்டு வந்து போட்டாள் லலிதா. அதில் அமர்ந்தான் வரதன்.

மிக மிக சுனகரத்தில் வரதனைப் பற்றி எல்லா விவரங்களையும் மீண்டும் லலிதாவின் மூலமாகக் கேட்டுத் தெரிந்து கொண்டவன் விருப்பமில்லாத பாவனையோடு, ''என்னமோ உடம்பு. லலிதாவைக் கேளுங்கள். மனம் கெட்டதற்குக் காரணம் சொல்லுவாள். அதே காரணம்தான் உடம்பு கெடவும்'' என்றான்.

வரதனும் நரசிம்மனும் பேசிக் கொண்டிருக்கும் போது லலிதா பாபுவைத் தூக்கிக் கொண்டு அங்கே வந்து நின்றாள்.

''அவளே அந்தண்டை கொண்டு போய் விட்டு விட்டு வா'' என்றவன் வரதன் பக்கமாகத் திரும்பி, ''எனக்கு உடம்போடு இருக்கிற வியாதி வரதன். என் ஜென்ம வியாதி இது'' என்று நிஷ்டூரத்துடன் குழந்தையைக் காட்டினான்.

**வ**ரதன் நரசிம்மனுடன் பேசிவிட்டுப் புறப்படும் போது வாசல் வரை வந்த லலிதா ''என் மேல் தயவுசெய்து கோபப்படாதீர்கள். உங்களுடன் சரியாகவே பேச முடியவில்லை....... இப்பொழுது ஓரளவு என் நிலைக்குக் காரணம் புரிந்துகொண்டிருப்பீர்கள்'' என்று நிறுத்தினாள்.

''எல்லாம் புரிகிறது'' என்றான் வரதன், வீதியைப் பார்த்துக் கொண்டு.

''நீங்கள் உடனே ஊருக்குப் புறப்பட வேண்டுமா ? அவர் இப்பொழுதுதான் வந்திருக்கிறார். பார்த்தால் உடம்பில் வியாதி போன போது இருந்தது போலவே தான் இருக்கும் போலிருக்கிறது. நீங்கள் கொஞ்சம் இங்கே இருந்தால் தெம்பாக இருக்கும்; ஊரில் முக்கிய ஜோலியொன்றும் இல்லையென்றால், தங்கிப் போங்களேன்'' என்றாள் லலிதா.

உற்றார் உறவினர் என்று அவள் வீட்டுக்கு யாரும் வருவதில்லை என்பதும் அவனுக்குத் தெரியும். எந்தக் குழந்தையால் தந்தையின் வெறுப்புக்குப் பாத்திரமாகி நோயாளிக் கணவனுடன் நிர்க்கதியாக நின்று கெஞ்சும் அவளுடைய வாழ்வின் பின்னணியைச் சில கணங்கள் நின்று சிந்தித்தான். விகல்பமற்ற அந்த நல்ல இதயத்தில் கனிவு இனிமேல்தான் சுரக்க வேண்டுமென்பதில்லை. என்றோ சுரந்து தேங்கித் ததும்பி நிற்பதுதானே!

''ஆகட்டும், லலிதா! இந்த வகையில் உன் மனம் திருப்தியும் சந்தோஷமும் அடையு



மானால் அதை நான் மனப்பூர்வமாகச் செய்வேன். போதுமா?''

கதவுக்கு அப்பால் நின்ற லலிதா முகத்தைக் கவிழ்த்துக் கொண்டு அழுதாள்.

கணவன் வந்து இரண்டு தினங்கள் கடந்து விட்டன. இரண்டு தினங்களில் நரசிம்மனைக் காணவென்று தினம் வந்த வரதன் வரும் போது டாக்டர்கள் எழுதிக் கொடுத்த மருந்துகளையும், தேவையான பழங்களையும் வாங்கி வந்தான். அவனுடன் இரவு நேரங்களில் பேசிக் கொண்டிருந்து விட்டுப் போவான்.

அன்றுதான் லலிதா நரசிம்மனிடம் கேட்டாள்: ''இத்தனை நாட்கள் நீங்கள் எங்கே போயிருந்தீர்கள்?''

மனைவியின் கேள்வியை வாங்கிக் கொண்ட நரசிம்மன் நீண்ட நேரம் மௌனத்திலிருந்து விட்டு, ''இப்படியே கொஞ்சம் ஊர் சுற்றினேன். கடைசி மூன்று நான்கு மாதங்கள் வேலூர் ஆஸ்பத்திரியில் படுத்திருந்தேன்'' என்று கூறினான்.

லலிதா அதிர்ந்ததோடு மட்டுமல்ல, கணவன் தன்னிடம் எதையும் மதித்துச் சொல்லவில்லை என்ற கோபம் ஏற்பட்டது.

''வேலூரில் இருந்தால் கடிதம் எழுதக் கூடாதா? பக்கத்தில் உதவிக்குக்கூட ஆள் இல்லாமல்... அதுதான் போகட்டும். எனக்கு அதை எழுதினால் என்ன?''

''உன் அமைதியைக் குலைக்க வேண்டாமென்றுதான் எழுதவில்லை.''

''எழுதாமல் குலைத்தீர்களே, அதுமட்டும் நியாயமாகப் படுகிறதா?''

....அவளுக்குத் தன் வாழ்வின் ஒரேயொரு நம்பிக்கையும் தன்னைவிட்டுப் போய்விடுமோ என்ற பயம்...



"ஏற்கனவே உனக்கு நான் ஒரு பெரிய தொல்லையை உன் கழுத்தில் கட்டியிருக்கிறேன். அதனால் நீ அடைந்து வரும் கஷ்டங்கள் எல்லாம் எனக்கும் தெரியும். அதோடு இதையும் எழுதிக் கொஞ்ச நஞ்ச சுகத்தையும் கெடுக்க வேண்டாம் என்றுதான்."

"வேலூர் ஆஸ்பத்திரியில் நான்கு மாதங்களாகச் சிகிச்சை பெறும்படியாக என்ன வந்துவிட்டது உங்களுக்கு?"

"எல்லாம் அந்தப் பாவி கொடுத்தது தான். உயிரோடுதான் ஒழியும் போலிருக்கிறது" என்றான் நரசிம்மன்.

பின்னால் வரதன் மௌனமாக நின்று கொண்டிருந்தான்.

கூடத்தில் தவழ்ந்தும், எழுந்து நின்றும் தட்டுத் தடுமாறி நடந்து வந்த பாபு நரசிம்மனின் கட்டிலைப் பிடித்துக் கொண்டு, எழுந்து நின்றான். கையை நீட்டி நரசிம்மனைத் தொட முயன்றபோது "சீ...சீ...போ தூர. இந்தா இதை எடு..." என்று கோபத்துடன் பாபுவைத் தள்ளி விட்டான். பதறிய லலிதா பாபு கீழே விழு முன் தாங்கிப் பிடித்து எடுத்துக் கொண்டாள்.

"உங்கள் கோபத்தை வீணே இக் குழந்தையிடம்தான் காண்பிக்க வேண்டுமா? இது என்ன செய்தது உங்களை? இதற்கு என்ன தெரியும்?" என்று வெறுப்புடன் கூறிவிட்டுக் குழந்தையுடன் அப்பால் நகர்ந்து விட்டாள்.

விருப்பமின்றி, ஒரு பலவந்தமான சூழ்நிலையில் நரசிம்மனை மணக்க நேர்ந்த சந்தர்ப்பத்திலிருந்து 'எனக்கு மனைவியைவிட இக் குழந்தைக்கு ஒரு தாய்தான் முக்கியம்' என்று கூறிவிட்டு, இடம் தெரியாமல் சுற்றிக் கொண்டிருந்து, 'வேலூர் ஆஸ்பத்திரியில் நான்கு மாதங்கள் படுத்திருந்தேன்' என்று சொன்ன வரையில் நரசிம்மனுடைய எந்தச் செய்கையும் லலிதாவின் மனசில் அவனிடம் ஒரு பிடிப்பை ஏற்படுத்தவில்லை.

பந்தம் என்றதொரு பலவந்தம்தான் அவளைப் பொறுத்தவரையில் அவனிடத்தில் நிலைத்திருந்த உறவின் நெருக்கத்துக்குக் காரணம். நரசிம்மனும் அவளைத் தன்னிடம் அன்பு கொள்ள வேண்டியோ, தன்னிடம் வசீகரித்துக் கொள்ளக் கூடிய விதத்திலோ இந்த நிலையில் கூட நடந்து கொள்ளவில்லை. அதற்கு அவனுடைய உடல் நிலையும் மன நிலையும் சரிப்பட்டு வரவில்லை என்று வைத்துக் கொண்டாலும், அதற்கான முயற்சியோ மன்னிப்போ அவனிடத்திலிருந்து காணோம். ஒருவேளை அவனிடத்திலே இத்தனை நாட்கள் வளர்ந்து விட்ட வெறுப்பின் இயல்பான சுபாவமாக இருக்கலாம். அப்படியானால் மீதி நாட்களை அவருடன் தானே நடத்தியாக வேண்டும்? இவ்வகைப்பட்ட மனோபாவங்களோடு எப்படி ஒத்துப் போக முடியும்?

ஒன்று ஆட்கொள்ள வேண்டும், அல்லது ஆட்கொள்ள இடம் தரவேண்டும்.

பரிவுக்கு வரவேண்டும் அல்லது பரிவைக் கொண்டு அருகில் வருகிறவர்களைத் தடுக்காமல் இருக்க வேண்டும்.

விம்மல் வெடித்தபோது வரதன் அருகில் வந்து நின்றான். "நான் போய் வருகிறேன்."

"ஏன் திடீரென்று நீங்கள் போகிறேன் என்கிறீர்கள்?"

வரதன் மௌனம் சாதித்த நிலை அவளுக்குப் புரியவில்லை. அவன் முகம்கூட அவ்வளவு தெளிவாக இல்லை.

"வரதன்!"

"நான் போய் வருகிறேன் லலிதா! இங்கே உனக்கும் உன் கணவருக்கும் உதவியாக இருப்பதில் தனிப்பட்ட ஆசை எதுவுமே இல்லை. மனத்தில் விகல்பம் கூட ஏதுமில்லை. ஆனால் பிறருடைய மனோபாவத்தை அறிந்து கொள்ளாமல் போனதற்கு நான் வருந்துகிறேன்."

லலிதா ஒன்றும் புரியாமல் தடுமாறினாள்.

"நீங்கள்.... நீங்கள்?"

"உன் கணவர் என் வருகையைத் தவறாகப் புரிந்து கொண்டு விட்டார் என நினைக்கிறேன். இரண்டு நாட்களாக அவர் பேசும் தோரணை சரியாக இல்லை. உன் கணவர் மேல் குற்றம் சாட்டுவதாக நினைக்காதே. அந்த மனோபாவத்தோடு அவர் இருக்கையில் அதோடு நான் அடிக்கடி இங்கு வரப் போக இருந்தால் நிலைமை ரொம்ப அநாகரிகமாக மாறி விடலாம். உனக்கு இங்கே உதவிக்கு வேறு யாருமே இல்லையே, பெற்ற தந்தைகூட உன்னை வெறுத்துவிட்டார்; உற்றார் உறவினர்கூட இக்குழந்தையால் அருகில் வர யோசிக்கிறார்களே என்பதை உணர்ந்து கொண்டுதான் நீ சொன்னதும் நான் இங்கே வரச் சம்மதித்தேன். இல்லையென்றால் பிறர் குடும்ப விஷயத்தில் தலையிட நான் ஒன்றும் அவ்வளவுக்குப் புத்தியில்லாதவனில்லை" என்றவன் சிறிதுநேரம் மௌனத்தில் நின்றுவிட்டு வெளியேறி விட்டான். 'வரதன்' என்று அவள் ஒரு முறை நெகிழ்ச்சியோடு அழைத்தாள். அதற்குள் அவன் நெடுந்தூரம் போய் விட்டான்.

அந்தரங்கம் என்பதே அவளைப்பொறுத்த வரையில் ஓர் அநாதையின் குரலாகத்தான் போய் விட்டது. அதை அருகில் வந்து கேட்கவோ, அதை மதிக்கவோ யாருமே முன் வரவில்லை. வந்தவர் கணவனால் விரட்டப் பட்டு விட்டார். கணவரும் கேட்கவில்லை— வேதனையின் வெடிப்போடு கணவன் அருகில் வந்து நின்றாள்.

"வரதனை நீங்கள் என்ன சொன்னீர்கள்?"

கண்களை மூடிக் கட்டிலில் படுத்திருந்த நரசிம்மன் கண்களைத் திறந்து லலிதாவைப் பார்த்துவிட்டு மீண்டும் மூடிக் கொண்டான்.

"உமக்கு இங்கே என்ன வேலை என்றேன். லலிதாவுக்கு நீங்கள் என்ன உறவு என்று கேட்டேன்" என்றான் அழுத்தமாக.

"நீங்கள் கேட்ட கேள்வி நியாயமானது தானா என்று கேட்குமுன்போ, அல்லது கேட்ட பின்போவாவது நினைத்துப் பார்த்தீர்களா?" என்று வினவினாள் லலிதா.

"நான் கேட்டதில் தவறில்லை என்றுதான் படுகிறது."

"எப்படிப்பட்ட நேரத்தில் அவர் நமக்கு உதவியிருக்கிறார், தெரியுமா? உற்றார் உறவினர் எல்லாருமே நம்மை ஒதுக்கி விட்டார்கள். அந்த நேரத்தில் நெருங்கி வந்து..."

"நம்மிடையே ஆயிரம் இருக்கும். அதை உறவினன் இல்லாத இந்த மூன்றாமவனுடன் பகிர்ந்து கொள்ள வேண்டுமென்கிறாயா? உன் பேச்சு எனக்குப் பிடிபடவில்லையே! இந்தப் பாபச் சின்னத்தால் என் மானம் பறிபோனது போதாதென்று வரதன் வந்து உன்னால் வேறு என் மானம் பறி போக வேண்டுமா?" — அங்கே இருந்த பாபுவைப் பார்த்துவிட்டு அதே வெறுப்போடு லலிதாவையும் பார்த்தான்.

"அதோ, உன் கன்னத்தில் இருக்கும் அந்த வெள்ளைத் தழும்பு இந்த வரதனைக் காப்பாற்றி நீ ஏற்றுக் கொண்டதாமே! அவரைத் தற்கொலையிலிருந்து மீட்டு அந்தக் கொடிய அக்கினித் திராவகத்தைத் தட்டி விடும்போது உன் கன்னத்தில் பட்டதாமே. அது உண்மைதானே?"

"ஆமாம், உண்மைதான்!"

"நீ ஆரம்பத்தில் அவரைத்தான் விவாகம் செய்து கொள்வதாக இருந்தாயாம்."

"ஆமாம்."

"எல்லாவற்றையும் அவர்தான் சொன்னார். நல்ல இதயம் அவருக்கு. எல்லாவற்றையும் மறைக்காமல் ஒளிவு மறைவின்றிச் சொல்லி விட்டார். அவருடைய பரந்த மனப்பான்மையும் ராணுவத்தில் சேர்ந்து உலகைச் சுற்றியதால் உண்டான மனத்திண்மையும்தான் அதையும் மறைக்காமல் சொல்லிவிடக்கூடிய இடத்தையும் விகல்பமில்லாத உள்ளத்தையும் தந்திருக்கின்றன. ஆனால் எனக்கு அந்த உள்ளம் இல்லையே. என்ன செய்ய?" — கண்கள் மூடிய நிலையில் சிரித்துக் கொண்டான் நரசிம்மன்.

கணவனுடைய குறுகிய மனப்பான்மை அவளுடைய ஆத்திரத்தைக் கிளப்பியது.

'உங்களுக்கு ஏற்பட்ட வாழ்க்கை அநுபவம் தான் நல்ல இதயம் படைத்த பிறரையும் சந்தேகிக்கத் தூண்டுகிறது' என்று சொல்லி விடத் துடித்தாள். ஆனால் அதனால் விளையும் விபரீதமும் அவளுக்குத் தெரியுமாதலால் மௌனியாகி விட்டாள்.

நோயாளிக் கணவன் ஒருபுறம், நொந்து போன உள்ளம் ஒருபுறம், இரண்டும் வாழ்க்கையில் கசப்பைத் தவிர வேறெதுவுமே இல்லை என்றுதான் தோன்றியது.

உறவே இல்லாத உறவு, பாபுவினால் மன அமைதி கொஞ்சம் கிட்டியது. அவனை வைத்துக் கொண்டு அவன் விளையாடுவதைப் பார்ப்பது, அவனோடு அவன் மழலையைப் பேசி ரசிப்பது, அவனுக்கு உணவு ஊட்டுவது, உடை உடுத்தி அழகு பார்ப்பது.

வற்றிக் காய்ந்த ஆற்றில் அங்கங்கே தென்படும் ஊற்று நீர்க் குழிகள் போல இவை. ஆனால் அந்த இன்பத்தைக்கூடப் பறி கொடுக்கிற நிலைமை வந்து விட்டது அவளுக்கு.

அன்று மாலை.

பாபுவுக்கு உடை உடுத்தி அழகு செய்து எடுத்துக் கொண்டு வெளியே வந்து நின்ற போது, "நரசிம்மன் இருக்கிறாரா?" என்று கேட்டுக் கொண்டு வந்த பெண் ஒருத்தி லலிதாவிடம் இருக்கும் பாபுவையே வைத்த விழி வாங்காமல் பார்த்தாள்.

நரசிம்மன் இருக்கிறாரா என்று கேட்ட கேள்வியோடு அவள் பாபுவைப் பார்த்துக் கொண்டு நிற்பதையும் கண்டவுடன் லலிதாவின் நெஞ்சில் நடுக்கம் உதயமாகிவிட்டது. பளிச்சென்று அவளுக்குப் புலப்பட்ட உண்மையோடு ஒருவித இழப்பின் சோகமும் வந்து விட்டது.

ஒல்லியான உடம்பு. நீண்ட முகம். கண்களைச் சுற்றியும் ஒருவித கரு வளையம்.

"நீங்கள் யார்?"

"நானா? அதோ, உன்னிடம் இருக்கிறதே குழந்தை, அதன் தாயார்."

பேயைக் கண்டு பயந்தவள்போல் உள்ளே ஓடி வந்தவள், "உங்களைப் பார்க்க அவள்.... அவள்தான் வந்திருக்கிறாள்...." என்று சொல்லிக் கொண்டிருக்கும்போதே அவள்—ரஞ்சிதம் உள்ளே வந்து விட்டாள்.

படுக்கையில் மெலிந்து போய்க் கிடக்கும் நரசிம்மனைப் பார்த்தாள். அந்தப் பார்வையிலே ஈவு இரக்கம், பச்சாத்தாபம் எதுவுமேயில்லை. நோயாளியைப் பார்க்கிற பார்வைதான் அது.

ஒருக்களித்துப் படுத்திருந்த நரசிம்மன் சிரமப்பட்டு எழுந்து கட்டிலில் சாய்ந்த நிலையில் அமர்ந்தான். வெறுப்புடன் ரஞ்சிதத்தைப் பார்த்தவன், "மீண்டும் வந்து விட்டாயா? என் உயிரை வாங்க? உனக்கு என்ன வேண்டும் இன்னும் என்னிடம்....." என்று கேட்டான்.

"நான் உங்க உயிரை வாங்க வரலே. என் குழந்தையை வாங்கிக் கொண்டு போக வந்தேன்."

"அந்த மூதேவிச் சனியனைக் கொடுத்து அவளை உடனே அனுப்பி விடு, லலிதா!"

பாபுவை மார்புடன் இறுகத் தழுவிக் கொண்டாள் லலிதா. லலிதாவின் அருகில் நெருங்கினாள் ரஞ்சிதம். லலிதா குழந்தையுடன் நரசிம்மன் படுத்திருந்த கட்டிலுக்கு அப்பால் போய் நின்றாள்.

"முடியாது. நான் பாபுவைத் தர முடியாது" என்றாள் விறைப்புடன்.

"முடியாதென்றால் நான் விடமாட்டேன். அது நான் பெற்றது" என்றாள் கொஞ்சம் கூடப் பாந்தமில்லாத தொனியில். 'நான் எதற்கும் பயப்படாதவள். மான அவமானத்தைத் துச்சமாக நினைப்பவள்' என்கிற மாதிரி.

"இது நீ பெற்றதா? நீ பெற்றது என்றால் அதை உன்னுடன் தைரியமாக எடுத்துக் கொண்டு போயிருக்க வேண்டும். பலவந்தமாக இவர் தலையில் கட்டிவிட்டு ஓடியிருக்கக் கூடாது. இப்பொழுது நான் இதைக் கொடுக்க மாட்டேன். இது இவருக்குப் பிறந்தது என்றுதானே அன்று ஊரைக் கூட்டி அம்பலத்துக்கு இழுத்தாய். இன்றும்

அப்படியே செய். அதே கேள்வியை நான் கேட்கிறேன்.''

லலிதா தன் நிலையில் ஸ்திரம் பெற்று நின்றாள். அந்தக் குழந்தையை எல்லோரும் வெறுக்கிறார்கள் என்பது அவளுக்குத் தெரியும். ஏன், பெற்றவள் இவள்கூட இதைப் பாசமின்றித்தானே விட்டு விட்டு வேறு யாருடனோ ஓடியிருக்கிறாள் — உலகம் வெறுப்பது இதைவிடப் பெரிய விஷயமில்லையே. உலகத்தைப் போலவோ, பெற்று ஒதுக்கி விட்டுப் போனவளைப் போலவோ, அவள் இல்லை. அதன் மேல் இருக்கும் களங்கத்தைப் பற்றி அவள் கவலைப்படவில்லை.

லலிதாவைப் பார்த்த நரசிம்மனின் பார்வையில் ஆத்திரம் அளவுக்கு மீறி இருந்தது. ''லலிதா! அவனை அவளிடம் கொடுத்து உடனே அவளை இந்த இடத்தை விட்டு விரட்டி விடேன்.''

''என்னை விரட்ட வேண்டாம். குழந்தையைக் கொடுத்து விட்டால் நானே போய் விடுவேன்.''

''நடத்தை கெட்ட நாயே, பேசாதே என்னுடன்! அந்த அக்கறையும் பாசமும் இதை என் தலையில் கட்டும்போது இருந்திருக்க வேண்டும்.''

''நான் நடத்தை கெட்டவள்தான். அன்றைக்கும் அப்படித்தான். இன்றைக்கும் அப்படித்தான். அதைக் கேட்க யாருக்கும் உரிமை கிடையாது. அதைப் பற்றி இப்போ யாரும் பேசவும் வேண்டாம். எனக்குக் குழந்தைதான் வேண்டும்.''

லலிதா கண் கலங்கப் பாபுவைப் பார்த்தாள். பிறகு சோகமே உருவாக, ''உங்களைக் கெஞ்சிக் கேட்கிறேன். இவனைத் தயவுசெய்து கேட்காதீர்கள். இவன் மேலே இருக்கிற களங்கத்தைக்கூடப் பொருட்படுத்தாமல் உறவினர்களையும், தந்தையையும் பகைத்துக் கொண்டு இவன் மேலே அன்பு காட்டி வளர்க்கிறேன்'' என்றாள்.

லலிதா கண் கலங்குவதைப் பார்த்துச் சற்று நேரம் மௌனமாகி விட்டாள் ரஞ்சிதம். அந்த மௌனத்துக்குப் பிறகு வருகிற வார்த்தை அவள் சம்மதத்தைத் தாங்கி வராதா என்று ஏங்கினாள். அவளால் பாபுவை இழந்துவிட முடியாததொரு நிலை வரும் என்பதை நினைத்துக்கூடப் பார்க்க முடியவில்லை. அவனை இழப்பது என்பதும் அத்தனை சுலபமான சம்பவமாக இல்லை அவளுக்கு.

''உங்களுக்குப் பிறந்தது என்றுதானே உங்களிடம் விட்டு விட்டு ஓடினாள். இதை மீண்டும் வந்து கேட்க இவளுக்கு என்ன இருக்கிறது? நீங்கள் சொல்லுங்களேன்....''

''ஆமாம், நான் பொய்தான் சொன்னேன். இது இவருக்குப் பிறக்கவில்லைதான். அப்போ என்னோட மனசுக்கும், நான் இருந்த நிலையிலேயும் இது எனக்கொரு தொந்தரவாயிருந்தது. சொன்னேன். இன்னிக்கு வேணும் என்கிறேன். இதுக்குத் தந்தை யாராக இருந்தால் என்ன? தாய் நான் தானே! அதைக் கேட்கவோ, தடுக்கவோ யாருக்கும் உரிமையில்லை.''

ரஞ்சிதம் லலிதாவின் கண்களுக்கு அரக்கி போல் தோன்றினாள். குழந்தை பாபுவைக் கவ்விக் கொண்டு ஓட நிற்கிற ஓநாய் மாதிரி நிற்கும் அவளுடைய கண்ணியமற்ற பேச்சும், முகமும் அருவருப்பாக இருந்தன.

எவ்வளவு துணிவோடு பேசுகிறாள் இவள்? கொஞ்சம்கூடக் கூச்சமின்றித் தன் சீர்கெட்ட வாழ்வைப் பற்றிப் பேசுகிறாளே! அந்த ஆபாசமான வாழ்வுச் சேற்றில் ஊறி ஊறி அதனால் ஏற்பட்ட அப்பட்டமான சண்டித்தனம். வாழ்க்கையைப் பற்றி ஒரு புனிதமான எண்ணமில்லாத பெண் பேய் இவள் என்று எண்ணியபோது லலிதாவின் உடம்பு ஒரு தடவை நடுங்கியது.

''எனக்கு என் குழந்தை வேண்டும். இன்றைக்கு என் நிலையைப் பற்றி உங்களிடம் கூறி அதை யாசிக்க வேண்டுமென்ற அவசியமும் எனக்கில்லை. அப்பொழுது ஒரு மாதிரியாக வாழ்ந்தேன். இப்பொழுதும் அப்படித்தான் வாழவேண்டுமென்று என் தலையில் எழுதிவிட்டான். வருங்காலத்தைப் பற்றி என் கவலை எனக்குத்தானே தெரியும்?''

''என் உல்லாச வாழ்க்கைக்கு அன்று இக்குழந்தை தொந்தரவாக இருந்தது. இன்னிக்கு அந்தத் தொந்தரவு என்கிற எண்ணம் மாறிப்போய் விட்டது. ஏனென்றால் எனக்கும் பிற்கால வாழ்க்கை இருக்கே. அன்று ஒரு வெறுப்பு, வேகம், இதை யார் தலையிலாவது கட்டிவிட்டு ஓடினால் போதுமென்ற ஓடினேன். இன்னிக்கு மட்டுமல்ல, இனி என்னிக்குமே இது வேணுமென்ற எண்ணம் ஏற்பட்டு விட்டது. கேட்கிறேன். கேட்கிறேன் என்றால் அக் குழந்தையின் தாய் தான் கேட்கிறேன். கொடுக்க மாட்டேன் என்று அடம் பிடித்தால் அது சிறிதும் விவேகமே இல்லை.''

ஏதேதோ பேசிக் கொண்டு நிற்கும் ரஞ்சிதத்தை வெறுப்புடன் பார்த்தான் நரசிம்மன்.

''அந்தப் பாவத்தை அவளிடம் கொடேன் லலிதா, பாபுவை நீ வைத்துக் கொண்டு, அவள் பேசுவதையும் கேட்டுக் கொண்டு இன்னும் எத்தனை நேரம் என்னை வதைக்கப் போகிறாய்? உனக்குக் கோடிப் புண்ணியமுண்டு. என்னிடமிருக்கிற கொஞ்ச நஞ்ச அமைதியையும் கெடுத்து விடாதே.''

பாபுவின் மேல் தனக்கு அன்பில்லை என்பதை வெளிப்படையாகக் காட்டினான்.

கணவனின் வார்த்தையில் இருந்த வெறுப்பின் ஜ்வாலையில் அவளுடைய பாசத்தின் பொன்தளிர் மெதுவாகக் கருகிக் கொண்டு வந்தது. நரசிம்மன் தன் அன்புள்ளத்துக்கு அருகில் வராமல், வெறுப்பின் எல்லை நோக்கி வேகமாக ஓடுகிறான் என்பதை உணர்ந்த போது பாபுவை எடுத்துக் கொண்டு உள்ளே ஓடிவிடத் துடித்தாள் லலிதா. அவனை எப்படியும் காத்துவிட வேண்டும் என்ற தீவிரமான ஆசை. அதைப் பாச வெறி என்றுகூடச் சொல்லலாம்.

பாபுவை அப்படியே மார்போடு மார்பாக இறுக்கக் கட்டிக்கொண்டு அழுதாள். அவனை

## என்ன பெயரோ ?

'எட்டே கால் லட்சணமே' என்று யாரைப் பார்த்துச் சொன்னாலும் கோபம்தான் வரும் அவர்களுக்கு. பழக்க வழக்கத்தில் பரம்பரை பரம்பரையாக வந்த அந்தச் சொல் விகார உருவத்தைக் குறிக்கிறது என்றுதான் பொதுவாகப் பொருள் கொள்வார்களே தவிரப் பெரும்பாலோருக்கு அதன் உட்பொருள் தெரியாது. பலர் முன்னிலையில் ஒருவரைப் பகிரங்கமாகத் திட்டவோ கேலி செய்யவோ இயலாது. அது முறையுமல்ல. எனவே அதுபோன்ற நேரங்களில் சிலர் பரிபாஷையை உபயோகிக்கலாம். எட்டு என்ற எண்ணுக்குத் தமிழ் எழுத்து 'அ'.

கால் என்பதற்குத் தமிழ் எழுத்து 'வ'. இப்போது புரிகிறதா?

எட்டே கால் லட்சணம் என்றால் அவலட்சணம் என்று பொருள்! - குற்றாலம் வி. சம்பந்தன்

---

இந்தக் குரூரமான ஜன்மத்திடமிருந்து காக்க அவளுக்கு வழியே புலப்படவில்லை.

நிணத் துண்டைக் கவ்விக்கொண்டு ஓடக் காத்து நிற்கும் வெறி நாய் போல் நின்ற ரஞ்சிதத்தைப் பார்த்துப் பரிதாபமாகக் கண்ணீர் சொரிந்தாள். "இதை எனக்கு உன் பிச்சையாகக் கொடுத்து விட்டுப் போயேன். என் வாழ்வின் ஒரே யொரு தளிரையும் நகத்தால் கிள்ளி எறிகிற மாதிரி எறிந்து விட்டுப் போய் விடாதே. இவன் யாருக்குப் பிறந்திருந்தால் என்ன? நான் உன்னைவிட நன்றாக வளர்ப்பேன். சத்தியமாக நான் இவனுக்கு ஓர் உன்னதமான தாயாக ஆக முடியும், ரஞ்சிதம். நீ இவனை எப்பொழுது வேண்டுமானாலும் வந்து பார்க்கலாம். தேவைப்பட்டால் நானே கொண்டுவந்து காட்டிவிட்டுப் போகிறேன்... ரஞ்சிதம்... ரஞ்சிதம்...." லலிதா கண்ணீரிடையே பிச்சை கேட்டு நின்றாள்.

புனிதமான பெண்ணுள்ளத்தின் தாப மென்மையை உணர்கிற மனோ பக்குவங்களை அவன் தாண்டிப் போய் எத்தனையோ காலங்களாகிவிட்டன. அவனுடைய வாழ்க்கை வேதாந்தமே தனியானது. லலிதாவின் தாபத்தினருகில் நெருங்கி வரமுடியாத அளவுக்கு இரக்கம் செத்தவனாகி விட்ட அவன் உணர்ச்சியற்றவனாகத்தான் மௌனமாக நின்றான்.

லலிதாவின் துயரம் அணைகடந்தது. பெரியதான நம்பிக்கை விருட்சத்தில் கடைசியாக நின்ற ஒரேயொரு கிளையும் முறிந்து நிற்கிறது.

அவளுக்குத் தன் வாழ்வின் ஒரேயொரு நம்பிக்கையும் தன்னை விட்டுப் போய் விடுமோ என்ற பயம். ஆனால் நரசிம்மன் அவளுடைய விருப்பத்தைக் காலில் போட்டு மிதித்து விட்டான். உடல் நலமில்லாத நிலையில் சாய்ந்து உட்கார்ந்திருந்தவன் ஆத்திரத்துடன் கட்டிலை விட்டு எழுந்தான். லலிதாவின் கழுத்தை இறுகப் பிணைந்திருந்த பாலகன் பாபுவைப் பலவந்தமாகப் பிடித்து இழுத்தான்.

பாபு அலறினான்.

வீசாத குறையாகப் பிடுங்கிய வேகத்தில் அதை அப்படியே ரஞ்சிதத்திடம் நீட்டினான். அதை அவள் வாங்கிக் கொண்டாள்.

"போ... போய்விடு இங்கிருந்து. இனிமேல் இந்த வீட்டின் பக்கம் கால் வைத்தால் உன் கழுத்தை நெரித்துப் போட்டு விடுவேன்."

ரஞ்சிதம் பெரிய சிரிப்பொன்று சிரித்துக் கொண்டே பாபுவைப் பார்த்தாள். "யாரோ பெற்றதை எனக்கு வேண்டுமென்று அடம் பிடித்து ஆசைப்பட்டால் எப்படிடா ராஜா... அவ, அவ பெத்துக்கணும்... அப்போதான் தக்கும்...." என்று சொல்லிக் கொண்டே 'போய்வருகிறேன்' என்று சொல்லிக் கொள்ளாமல் கூடப் போய்விட்டாள்.

லலிதாவின் சோகம் எல்லை மீறிப் போய் விட்டது. வாய் விட்டு அழுது புலம்பினாள். "என் ஒரேயொரு சந்தோஷத்தையும் இப்படிப் பிடுங்கிக் கொடுத்து விட்டு மௌனமாக அமர்ந்திருக்கிறீர்களே" என்று கதறினாள்.

கணவனின் வெறுப்புக்கு முன்னால் தன் அன்பு, பாசம், பரிவு எல்லாம் செயலிழந்து விட்டதே என்ற சோர்வு அவளுக்கு.

கைதவறிப் போய்விட்ட பொருளுக்காக அவள் உகுத்த கண்ணீர் ஒரு தாய்மையின் பூரணத்தைக் காட்டியது.

காலவெளியில் அவளுடைய விசும்பல் புதைந்தது. கணவனின் சாயலாக இருந்த பாபுவை ரஞ்சிதத்திடம் பறிகொடுத்து விட்டு அதன் எண்ண நிழலையே வட்டமிட்டு அயர்ந்தாள்.

காற்றிலே அடித்துக் கொண்டு ஓடும் இலைச் சருகுகள் போல அவளுடைய ஜீவன்கள் எல்லாமே ஒவ்வொரு காலங்களில் உதிர்ந்து ஓடிவிட்டன. பூவின் மகரந்தம் அக்கினி வெய்யிலில் உதிர்ந்து வற்றிவிடுவது போல அவளுடைய வாழ்வெனும் மெல்லிதழின் மனோகர இழையெல்லாம் கருகிச் சுருண்டது.

பெரியதும், சிறியதுமாக இரண்டு இழப்புகள், அதைச் சரிக்கட்ட முடியாத மூன்றாவதன் நினைவும் அவளைப் பொறுத்தவரையில் மரம்தான். நிழல் தரக்கூட இதமற்றது.

கதவுக்கு வெளியே நின்ற லலிதா உள்ளே கட்டிலில் படுத்திருக்கும் கணவனைப் பார்த்துப் பெருமூச்சு விட்டாள். கவர்ச்சியோ, அழகோ இல்லாத இளைத்துத் துரும்பாகிக்கொண்டிருக்கும் அவனைப் பார்த்தபோது தன் அழகின்மைக்கு ஒரு சரியான தண்டனைதான் என்று எண்ணி நொந்தாள்.

கணவன் படுத்திருந்த அறையைச் சாத்திவிட்டு வெளியே வந்து நின்றாள்.

வசந்தத்தில் இயற்கை குதூகலித்துக் கொண்டிருந்தது.

பரிணாம வேகத்தோடு ஓட்டி, ஒன்றிய இயற்கைக்கு எத்தனையோ காலங்கள் உண்டு. ஆனால் லலிதாவுக்கு அவள் வாழ்க்கையில் ஒரேயொரு காலம்தான். அதுதான் இலையுதிர் காலம்.

# பொங்கல் திருநாள்
## உழவர் பெருநாள்

உலகெலாம் செழித்துப் பிரகாசிக்க
எங்கள் நல்வாழ்த்துக்கள்!

# ஓமேகா கேபிள்கள்

மகத்தான
மின்சார இயக்க
கேபிள்கள்



**தி ஒமேகா இன்ஸுலேடட் கேபிள் கம்பெனி (இந்தியா) லிமிடெட்**

நிர்வாக அலுவலகம்: 1-A; நுங்கம்பாக்கம் ஹைரோடு, சென்னை - 34
பதிவு அலுவலகம் & தொழிற்சாலை: அம்பத்தூர், சென்னை - 58

எமது ஏஜண்டுகள் :

மைசூர் ராஜ்யம்: மெஸர்ஸ் ஸ்ரீநிவாஸன் ஏஜன்ஸீஸ், பெங்களூர் - 1
ஆந்திர பிரதேசம்: மெஸர்ஸ் கப்ரபா கேபிள் கம்பெனி, நெல்லூர் - 1




**மாதர்ப் பிறைக்கண்ணி யானை**
**மலையான் மகளொடும் பாடி**
**போதொடு நீர்சுமந்தேத்திப்**
**புகுவா ரவர்பின் புகுவேன்**
**யாதுஞ் சுவடு படாமல்**
**ஐயா றடைகின்ற போது**
**காதன் மடப்பிடி யோடும்**
**களிறு வருவன கண்டேன்**
**கண்டேன் அவர் திருப் பாதம்**
**கண்டறியாதன கண்டேன்**

திருவையாற்றில் பல நாட்கள் தங்கிச் சிவத் தொண்டு புரிந்து வந்த திருநாவுக்கரசர் பல வண்டமிழ் மாலை பாடினார். பின் அங்கிருந்து புறப்பட்டுப் பல க்ஷேத்திரங்களைத் தரிசித்துத் திருப்பூந்துருத்தி அடைந்து திருத் தாண்டகங்களையும், திருவிருத்தங்களையும் திரு அங்க மாலையும் பாடினார்.

திருஞானசம்பந்தர் மதுரைக்குச் சென்று, சமணர்களை வென்று, சோழ நாடு திரும்பினார். திருப்பூந்துருத்தியில் அப்பரடிகள் இருப்பதைக் கேள்வியுற்று அவரைக் காணும் ஆவலால் திருப்பூந்துருத்திக்கு அருகில் வந்தார்.

திருஞான சம்பந்தர் வருவதையறிந்த திருநாவுக்கரசர் உள்ளம் உவந்தார். அவரைக் கண்டு வணங்கும் ஆவலால் எதிர் சென்றார். திருஞான சம்பந்தருடன் அளவிலாச் சிவனடியார்கள் வந்திருந்தனர். அக் கூட்டத்தினுள் நுழைந்த திருநாவுக்கரசர், திருஞான சம்பந்தர் தம்மைக் காணாதபடி வணங்கினார். திருஞான சம்பந்தர் முத்துச் சிவிகையில் வந்து கொண்டிருந்தார். நாவுக்கரசர் தம்மை ஒருவரும் அறியாத வாறு சென்று திருஞானசம்பந்தர் ஏறி வரும் முத்துச் சிவிகையைத் தாங்குபவர்களுடன் சேர்ந்து தாமும் அதனைத் தாங்கி மகிழ்ச்சியுற்றார்.

சிவஞானப் பால் உண்ட தவஞானச் செல்வராகிய திருஞான சம்பந்தர், திருப்பூந்துருத்திக்கு அருகில் வந்து, ''அப்பர் எங்கிருக்கிறார்?'' என்று கேட்டருளினார். ''தேவரீருடைய அடியேன் உமது திருவடிகளைத் தாங்கி வரும் பெருவாழ்வைப் பெற்று இங்கு இருக்கின்றேன்'' என்று உள்ளம் உருகக் கூறினார் அப்பரடிகள்.

**திருஞான மாமுனிவர் அரசிருந்த பூந்துருத்திக்(கு)**
**அருகாக எழுந்தருளி ''எங்குற்றார்? அப்பர்'' என**
**உருகாநின்று ''உம்மடியேன் உம்அடிகள்தாங்கிவரும்**
**பெருவாழ்வு வந்தெய்தப் பெற்றிங்குற்றேன்'' என்றார்**

அப்பரடிகள் கூறியதைக் கேட்ட ஆளுடைய பிள்ளையார் உள்ளமும் உடம்பும் பதைபதைத்தனர். விரைந்து பல்லக்கை விட்டிறங்கி, திருநாவுக்கரசரை வணங்கினார். அவர் தம்மை வணங்குவதற்கு முன் திருநாவுக்கரசர் அவரை வணங்கினார். சிவனடியார்கள் எல்லோரும் அவர்களைத் தொழுது ஆர்த்தார்கள்.

திருஞானசம்பந்தர் திருநாவுக்கரசருடன் திருப்பூந்துருத்தி திருக்கோயி

லுக்குள் சென்று மணிகண்டப் பெருமானை வணங்கி இன்புற்றனர். பின்னர் திருமடத்தில் இருவரும் தங்கியிருந்தார்கள்.

பாண்டிய நாட்டில் தாம் சமண நெறி நீக்கிச் சைவ நெறி செழிக்கச் செய்ததைத் திருஞான சம்பந்தர் கூறியருளக் கேட்ட அப்பரடிகள் தாமும் பாண்டிய நாடு செல்ல விரும்பினார். திருஞான சம்பந்தரை நோக்கி, ''தொண்டை நன்னாட்டில் உள்ள சிவத்தலங்களுக்குச் சென்று திருப்பதிகம் பாடுவீராக'' என்று கூறினார். அவ்வாறே திருஞான சம்பந்தர் திருப்பூந்துருத்தியைத் தொழுது புறப்பட்டார்.

திருநாவுக்கரசர் மதுரையம்பதியை யடைந்தார். செந்தமிழ்ச் சங்கத்தில் தாமே இருந்து தமிழினை ஆய்ந்த சோமசுந்தரக் கடவுள் வீற்றிருக்கும் திருவாலவாய்க் கோயிலை வலம் வந்து வணங்கிப் பாமாலை புனைந்தார்.

"வாயானை மனத்தானை மனத்துள் நின்ற
கருத்தானைக் கருத்தறிந்து முடிப்பான் தன்னைத்
தூயானைத் தூவெள்ளை யேற்றான் தன்னைச்
சுடர்த் திங்கட் சடையானைத்தொடர்ந்து நின்றென்
தாயானைத் தவமாய தன்மையானைத்
தலையாய தேவாதி தேவர்க் கென்றும்
சேயானைத் தென்கூடல் திருவாலவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே!''

பக்தியின் மிக்க பாண்டிமா தேவியார் மங்கையர்க்கரசியாரும், அவருடைய கணவனார் நின்றசீர் நெடுமாற நாயனாரும், குலச்சிறை நாயனாரும் அளவற்ற அன்புடன் அப்பரடிகளைத் தொழுது உபசரிக்க, அங்கு சில நாட்கள் தங்கித் திருப்பணிகள் செய்துகொண்டிருந்தார். பின் அங்கிருந்து புறப்பட்டு, திருப்பூவணம் போய், திருக்கோயிலினுட் சென்றார். நெடியமாலுக்கும், அறிவரிய நிலமனார் நேர் தோன்ற தரிசித்த நாவுக்கரசர், ''வடிவேறு திரிசூலம் தோன்றும் தோன்றும்'' என்ற திருத்தாண்டகத்தைப் பாடினார். ஸ்ரீராமர் தென்னிலங்கை வேந்தனுடைய பத்துத் தலைகளையும் துணித்ததனால் வந்த பிரமகத்தி வினை தீரும் பொருட்டுப் பூசித்த திரு இராமேசுரத்தை வணங்க வேண்டும் என்று விரும்பினார். ஆராத காதலுடன் அகங் குழைந்து உருகித் திரு இராமேசுரத்தை யடைந்தார். அங்கு கடற்கரையில் அருட் கடலாக எழுந்தருளியுள்ள இராமலிங்கத்தைக் கண்குளிரக் கண்டு பற்பல பைந்தமிழ்ப் பாடல்களைப் பாடி வணங்கினார்.

**பி**ன்னர் அங்கிருந்து புறப்பட்டு, திருநெல்வேலியையும், திருக்கானப் பேரையும் வணங்கினார். பாண்டி நாட்டில் உள்ள பல திருத்தலங்களையும் பணிந்து, சோழ நாட்டை யடைந்தார். பொன்னி நாட்டில் விளங்கும் பொன்னார் மேனியனுடைய புனிதத் தலங்களை யெல்லாம் வணங்கித் திருப்புகலூரை அடைந்தார். பொய்கை சூழ்ந்த பூம்புகலூர்ப் பெருமானைப் போற்றி, உழவாரப் பணி புரிந்து



கொண்டு எண்ணிறந்த இனிய தமிழ் மாலைகளைப் புனைந்தருளினார். நின்ற திருத்தாண்டகம், தனித் திருத்தாண்டகம், திருக்குறுக் கோவை, குறைந்த திருநேரிசை, தனித் திருநேரிசை, ஆருயிர்த் திருவிருத்தம், தசபுராணத் தடைவு, பாவநாசப் பதிகம், சரக் கறைத் திருவிருத்தம் முதலிய பலப் பல பதிகங்களைப் பாடியருளினார்.

திருப்புகலூரில் திருப்பணிகள் புரிந்து கொண்டிருந்த அப்பரடிகளின் நன்னிலைமையை உலகுக்குக் காட்டியருளும் பொருட்டுச் சிவபெருமான், அழகிய திருமுற்றத்திலே உழவாரப் படை நுழைந்த இடமெல்லாம் பொன்னும், நவரத்தினங்களும் வெளிவரும்படி செய்தார். பற்றற்ற பரம ஞானியாகிய திருநாவுக்கரசர், பொன்னையும் நவமணிகளையும் அங்கு உருளும் பருக்கைக் கற்களுக்கு நிகராக நினைந்து உழவாரப் படையில் ஏந்தி, அருகில் இருந்த தாமரைத் தடாகத்தில் எறிந்தார்.

புல்லோடும் கல்லோடும் பொன்னோடும் மணியோடும்
சொல்லோடும் வேறுபாடிலாநிலைமை துணிந்திருந்த
நல்லோர்முன் திருப்புகலூர் நாயகனார் திருவருளால்
வில்லோடு நுதல்மடவார் விசும்பூடு வந்திழிந்தார்

நாயனாரின் பக்தி வைராக்கியத்தைத உலகுக்கு மேலும் நன்கு அறிவிக்கத் திருப்புகலூரிறைவர் திருவுளங் கொண்டார். வில்லைப் போன்ற புருவங்களையும், மின்னலை ஒத்த மேனியையும் கன்னலையொத்த மொழியையும் உடைய அரம்பையர்கள் வானத்தினின்றும் மின்னற்கொடி போல் இறங்கினார்கள். மெல்லிய பாதத்தில் சிலம்புகள் ஒலிக்கவும், கைகளின் நெறியிலே கண்களைச் செலுத்தி நல்ல அபிநயம் பிடித்து, இனிய தேன் போன்ற கீதங்களைப் பாடி நடனம் புரிந்தார்கள்.

ஆடுவார்; பாடுவார்; அலர்மாரி மேற்பொழிவார்
கூடுவார் போன்றணைவார்; குழல் அவிழ இடை
நுடங்க
ஓடுவார்; மாரவேள் உடன்மீள்வார்; ஒளிபெருக
நீடுவார் துகில் அசைய நிற்பாரும் ஆயினார்

அழகிய அரம்பையர்கள் இவ்வாறு தாம் கற்ற கலைகளை யெல்லாம் காட்டிப் பற்பல செயல்களைப் புரிந்தும் அப்பரடிகள் சிறிதும் சித்த நிலை திரியாது, சிவபெருமான் திருவடியைச் சிந்தித்த வண்ணமாகத் திருத்தொண்டு புரிந்து கொண்டிருந்தார்.

பொய்ம்மாயப் பெருங்கடலில் புலம்புகின்ற
புண்ணியங்காள் தீவினைகாள் திருவே நீங்கள்
இம்மாயப் பெருங்கடலை அரித்துத் தின்பீர்க்கு
இல்லையே கிடந்ததுதான் யானேல் வானோர்
தம்மானைத் தலைமகனைத் தண்ணா வாரூர்த்
தடங்கடலைத் தொடர்ந்தோரை அடங்கச் செய்யும்
எம்மானை அடிதொழுவான் போகின்றேன்
இடையிலேன் கெடுவீர்காள் இடறேன் மின்னே."

"புவன போகங்களை நல்வினை தீவினையாகிய கயிற்றினால் கட்டி ஆட்டுகின்ற மாயை வடிவங்களே! நீவிர் உலகங்களை யெல்லாம் மயக்கி ஆணை செலுத்துகின்றீர். உமக்கு உலகமெல்லாம் போதாதோ? அத்துடன் அமைய மாட்டீரோ? யான் திருவாரூர் தேவ தேவருக்கு ஆளாகி அவர் பணியில் நீங்காது நிற்பவன். உம்மால் மயங்கேன்; நீவிர் வீணே அலையாதீர்; போமின்" என்று பாடியருளினார். அவர் இவ்வாறு கூறிய அருள் வலிமையை யாரே அளக்கவல்லார்?

அப்பெண்கள் அப்பரடிகள் அருகில் நெருங்கி வந்து மன்மதக் களியாடல்கள் புரிந்தனர்; வஞ்சனைகள் பல புரிந்தனர். அவற்றுக்கெல்லாம் அணுத்துணையும் அசையாது இருந்தார் வாகீசர். அவர் திருவுள்ளத்தைத் தம் காதல் கடலுள் வீழ்த்த இயலாத அம்மாதர் அவரை வணங்கி விலகிச் சென்றனர். அப்பரடிகளின் உள்ள உறுதியை அறிந்த ஏழு உலகங்களும் அவருடைய திருவடிகளைப் போற்றிப் புகழ்ந்தன. அன்பு வடிவாய அப்பரடிகள் மெய்ப்பதம் பெறும் காலம் நெருங்கி வர, சில நாட்கள் அங்கு விரும்பி இருந்தார்.

இறைவனடி சாரும் இன்பநிலை எய்துவதைத் திருவருட் குறிப்பினால் உணர்ந்த திருநாவுக்கரசர்,

"எண்ணுகேன் என்சொல்லி எண்ணுகேனோ
எம்பெருமான் திருவடியே எண்ணி னல்லால்
கண்ணிலேன் மற்றோர் களைகண் இல்லேன்
கழலடியே கைதொழுது காணின் அல்லால்
ஒண்ணுளே ஒன்பது வாசல் வைத்தாய்
ஒக்க அடைக்கும்போ துணர மாட்டேன்
புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணியனே"

என்ற திருப்பதிகத்தை ஓதினார். வானவர் மலர் மாரி பொழியவும், விண்ணில் தேவ துந்துபி ஊதும் முழங்கவும், பிரமனுர் உயிர்கள் எல்லாம் உளம் நிறைந்த மகிழ்ச்சி யடையவும் சித்திரைத் திங்கள் சதய நட்சத்திரத்தில், சிவானந்த ஞானவடிவேயாகிய அண்ணலார் சேவடிக் கீழ் அமர்ந்து பேரின்பப் பெருவாழ்வைப் பெற்றார். (தொடரும்)

## பொங்கல் மற்றும் ரம்ஜான் விற்பனை!



**பொங்கல்** மற்றும் **ரம்ஜான்**

பண்டிகைக்கு

பல நூதன ரக

- □ **பட்டுச் சேலைகள்**
  **சோளி பீஸ்கள்**
- □ **கைத்தறி சேலைகள்**

மற்றும் பல தினுசு லுங்கிகள்!

# நல்லி சின்னசாமி செட்டி

பனகல் பார்க் எதிரில்

தி. நகர் (போன் 41115 & 43369) சென்னை-17

அனைவருக்கும் எமது மனமார்ந்த பண்டிகை வாழ்த்துக்கள்!

சிறப்புச் சிறுகதை

# பட்டு

துரோணன்

இதயத்திலுள்ள துக்கத்தை அளவிடுவதற்கோ, எடையிடுவதற்கோ ஒரு கருவி இல்லையென்பதால்தான் அதன் மதிப்பைச் சொல்ல முடிவதில்லை. ஐம்பது வயது மனிதர், ஐந்து வயதுக் குழந்தையாக மாறிக் கதறும் நிலைக்கு வந்து விட்டால் அந்தத் துயரத்துக்கு அளவேது?

தாளமாட்டாத துயரத்தின் வெடிப்பாக வெம்பி எழுந்த வெறுப்பும் வெறிச் செயலும் அவரைப் பற்றிக் கொண்டு விட்டன. அந்தக் கூடத்துக்குள்ளே யார் இருந்தார், யார் இல்லை என்ற நினைவுகூட அவருக்கு இல்லை. ஆவேசம் கொண்டவர் போன்று எழுந்தார். மேஜையின் மேலிருந்த தோல் பெட்டியையும், ஸ்டெதாஸ்கோப்பையும் கையிலெடுத்துக் கொண்டு இரேழிப்புறத்துக்கு வந்தார். அதையும் கடந்து வெளியே ஓடுமளவுக்கு அங்கிருந்த கூட்டம் இடமளிக்கவில்லை. கையிலிருந்த அவ்விரண்டையும் மூலைப்புறத்தை நோக்கித் தடார் என்று வீசியெறிந்தார்.

அந்தப் பெட்டிக்குள் அவசரச் சிகிச்சைக்காக இருந்த விலையுயர்ந்த மருந்துக் குப்பிகளும், இன்ஜெக்ஷன் குழாய்களும் அவற்றுக்குள்ளாகவே நொறுங்கிச் சிதறி, அவருடைய மனத்தைப் போன்றே பிறிட்டு வெளியாயின. இந்த நிலையிலுள்ள அவர்தான் 'பட்டு டாக்டர்' என்றால் யார் நம்புவார்கள்?

அவருடைய பதற்றம் கொண்ட செய்கை அனைவரையும் பதறி நடுங்க வைத்துவிட்டது. அவரைக் கட்டிப் பிடித்துக் கூடத்துக்குக் கொண்டு வந்து சேர்ப்பித்தனர். திண்ணைக் கூட்டத்துக்குள்ளிருந்த மற்ற இரு டாக்டர்களும் விரைந்து உள்ளே வந்து அவரைப் பிடித்துக் கொண்டனர்.

''டாக்டர்! எனக்கு உண்மையான மனிதாபிமானத்தையும் கடமையையும் உணர்த்திக் கொண்டிருந்த சக்தி என்னை விட்டுப் போய்விட்டது; அவள் கையால் தூக்கிக் கொடுத்து வந்த இந்த மருந்துப் பெட்டியின் சக்தியும் இன்றோடு போய் விட்டது. ஊருக்கெல்லாம் உதவின இந்தப் பெட்டியின் மருந்தும், ஊசியும் அவளுடைய உயிருக்கு உதவவில்லை; இனி அதைக் கையாலும் தொடமாட்டேன் டாக்டர்!'' — இவ்வாறு கதறிக்கொண்டிருந்தார் பட்டு டாக்டர்.

''பட்டு, வைத்தியக்காரா! ஏன் பதறுகிறாய்? நீயே இப்படித் தைரியம் விட்டால், இதோ உள்ள உன் அருமைக் குழந்தைகளின் கதி என்ன? வீட்டில் உள்ளோரின் கதி என்ன? நம்மால் முடிந்ததைச் செய்துவிட்டோம். இனி ஆண்டவன்தான் கருணை காட்டவேண்டும்.'' — இவ்வாறு கூறினார் ஒரு டாக்டர்.



# டாக்டர்

வேறொரு முதியவர், ''பட்டு! உன் மருந்தானாலும் என் மருந்தானாலும் இனி அவன் பிழைக்கப் போவதில்லை. ஆனால் இங்கே கூடியிருக்கிற இவ்வளவு ஊர் ஜனங்களின் எண்ணங்களிலும் உள்ள தாப சக்தி இருக்கின்றதே, அதுதான் அவனுக்கு உயிரை அளிக்க வேண்டும். மனிதன் மனமறிந்து செய்யும் தர்மங்களின் நிழல்தான் அவனுக்கு மனம் அறியாமலே கூடிவரும் சக்தியாக வந்து உதவுகிறது. உங்கள் இருவருடைய தர்மமும் வீணாகி விடாது'' என்றார்.

சோகம் தாள்கலை அமுக்க, கூடத்து உள் படிக்கட்டின் மீது சாய்ந்தார் பட்டு. அவருக்குத் தன் நினைவேயற்றுவிட்டது.



அந்தச் சின்னஞ்சிறு வீட்டின் வாசற் புறத்திலும், ஆளோடி, திண்ணைகள், இடைகழி, உட்புறம் எல்லாவற்றிலுமாகக் கூட்டம் ததும்பி நிற்கிறது. எதிரே — அகண்டாகாரமாகவுள்ள குளத்தின் படிக்கட்டுகளிலும் வரிசை வரிசையாகக் கூட்டங்கள் கவர் வைத்தாற் போன்று நிற்கின்றன. காற்றுப் புகவும் இடமில்லை. இவ்வளவு கூட்டமும் இங்கே வந்து சேருவதற்கு ஒரு மணிநேரம்கூட ஆகியிருக்காது. இன்னும் 'சரியானபடியாகச் செய்தி ஊருக்குள் பரவிவிடுமானால் இந்த இருநூறும் இரண்டாயிரமாகப் பெருகி விடுவதற்கும் தடையிருக்காது.

அவர் பெயர்தான் பட்டு — பட்டு டாக்டர்; அவளுடைய பெயர் — தங்கம்! இப்படி பேர் இணைப்பு உலகத்தில் ஏற்படுவது அபூர்வம்; இப்படி ஒரு மண ஒற்றுமை ஏற்படுவதும் அபூர்வம். குழந்தைப் பருவத்தில் செல்லப் பெயராக விளங்குவதெல்லாம் குணத்தாலும், செயலாலும் பொருந்திக் காரணப் பெயர்களாகவும் நிலைத்துவிடுவதும் அபூர்வம்தான்! இத்தகைய அபூர்வம் உலகத்தில் நிலைத்து விடாமல் இருப்பதற்காகத்தானோ இந்தச் சோதனை?

ஊருக்குள் உழைப்பால் உயர்ந்த குடும்பம் அது. பட்டுவை, 'பட்டு டாக்டரா'க்கின பெருமையும், அவர் பெயராலேயே ஆஸ்பத்திரியும், மருந்துக் கடையும் ஏற்பட்டு, அதனால் பிழைக்கும் குடிகள் பெருகின வகையும், அக்கம் பக்கத்து வட்டாரத்தின் அன்புப் பெருக்கான செல்வாக்குகள் அவருக்கு ஏற்பட்ட விதங்களும், அவளால் ஊக்கி வைக்கப்பட்ட சக்திதான். அவர் ஈடுபடாத நல்ல காரியங்கள் ஊர் எல்லைக்குள் நடந்ததில்லை. இத்தனை பெருமைகளுக்கும் பட்டு டாக்டருக்குப் பின்னணி சக்தியாக இருந்தவள், அவருடைய வாழ்வுத் துணைவியான தங்கம்! அவளுக்குத்தான் இப்போது—

வாசலில் சூழ்ந்து நிற்கும் அவ்வளவு கூட்டமும், உள்ளே வரும் துடிப்பிலிருக்கின்றது. ஆனால், வீட்டின் முகப்பிலுள்ள ரூமில் கதவுகளின் பக்கங்களில் சிலர் நின்று தடுத்துக் கொண்டிருக்கின்றனர். சிலர் கூட்டத்தை விலக்குவதில், நயம், கடுமை இரண்டையும் வெளிப்படுத்தியவாறு இருக்கின்றனர்:

''ஐயா, என் குடும்பத்தையே காப்பாத்தின புண்ணியவான் ஐயா பட்டு டாக்டர்! அவருக்கு இப்படி ஒரு கஷ்டம் வந்தால் எங்கள் மனசு பொறுக்குங்களா?—''

''ஐயா, நீங்கள் நல்ல சேதியைச் சொல்லுங்கள் — நாங்கள் இப்போவே திரும்பிப் போறோம் — நாளைக்கு சந்தோஷமா வந்து அம்மாளைப் பார்க்கிறோம்.''

''ஐயா! இன்னிக்கு எந்நேரமானாலும் சரி. அம்மா நல்லபடியாக எழுந்திருச்சுட்டாங்க என்கிற செய்தியைத் தெரிஞ்சுக்கிட்டுத்தான் இதை விட்டு நகருவோம்; அதுவரையிலே எங்களை விரட்டியடிச்சாலும் அசைய மாட்டோம்.''

இவ்வளவு பிடிவாதக் கோரிக்கைகளையும் கேட்கிறார் டாக்டரின் தம்பி. அவரது கண்

களைவிட்டு நீர் ததும்பி வடிகிறது. "நீங்களெல்லாம் அன்பினால் கூடியிருப்பவர்கள்; உங்களைப் போகச் சொல்லவும் எங்களுக்கு மனமில்லை. உள்ளே — யாராரோ பெரியவர்களெல்லாம் மந்திரிக்கிறார்கள். ஏதோ, உங்களுடைய அன்பு மனசெல்லாம் கூடித்தான் கடவுளுக்கு இரக்கம் ஏற்பட வேண்டும்" என்று மிக அடக்கமாகக் கூறிவிட்டு உள்ளே செல்கிறார் அவர்.

'இதென்ன அநியாயம், அதிசயம்? நம்பவே முடியவில்லையே? மத்தியானம் மூன்று மணி வரை பம்பரமாக ஓடியாடி வீட்டு வேலை செய்தவளாவது; மூன்றேகால் மணிக்கு விஷம் தீண்டி இப்படிக் கட்டையோடு கட்டையாக?'

உள்ளிருந்து வெளியே வருபவர்களைக் கூட்டம் மடக்கிக் கொள்ளுகிறது. "எப்படி ஸார் இருக்கிறது? அவங்க பிழைத்து விடுவாங்களா? டாக்டர் எங்கே இருக்கிறார்? யார் மந்திரிக்கிறார்?" இவ்வளவு கேள்விகளும் ஒவ்வொருவரிடமிருந்தும் எழுகின்றன.

"ஏன் ஸார், அது பாம்புக் கடிதானா?"

"அதை யார் கண்டார்கள்? யாரும் பாம்பைப் பார்க்கவில்லையாமே?"

வேறொருவர் குரல் அழுத்தம் திருத்தமாகக் கூறியது: "அது பாம்புக் கடியேதான்; இல்லாவிட்டால் இப்படிச் சோகம் போடுமா?"

"எங்கே கையிலேயா கடித்திருக்கிறது?"

"ஆமாம், வலதுகை மோதிரவிரலிலே கடித்திருக்கிறது. கடிபட்ட இடத்தை டாக்டரே கீறிவிட்டு, மருந்து போட்டுக் கட்டினாராம்."

"அதெல்லாம் இஞ்செக்ஷனாவது கிஞ்செக்ஷனாவது? அதற்கெல்லாம் கட்டுப்படுமா அது? மந்திர சக்தி ஒண்ணுக்குத்தான் அது கட்டுப்படும். அதுவும் விதி ஒழுங்காக இருந்தால்."

"ஐயோ! வாரி வாரிக் கொடுக்கும் கையாச்சே அது! அவங்க கையாலே சாப்பாடு போட்டால் அந்த வயிறு வேணுமய்யா! இரவோ, பகலோ, எந்த நேரமாக இருந்தாலும் மருந்துப் பெட்டியைத் தூக்கிப் புருஷன் கையிலே கொடுத்து ஓடச் சொல்லுவாங்களே — அந்தப் புண்ணியவதி கைக்கா பாம்பு வரும்? இருக்கவே இருக்காது!"

அந்த நீளப்போக்கான திண்ணையில்தான் அவள் நீண்டு படுத்திருக்கிறாள் — தங்கத்தால் வார்த்தெடுத்த எழிலார்ந்த வடிவம், உயிருள்ளதா, உயிரற்றதா எனக் கருத முடியாத நிலையாக. தாய்வழிச் சோதரனின் மடியில் தலையிருக்க, தாரவழிச் சோதரனின் கைகளில் பாதங்கள் இருக்க, காணாத காட்சியாக அவளது கோலத்தை அன்று ஊர் காண்கிறது. ஏன், அவளும்தான் — அந்தக் கருவிழிகளின் ஒளி மாறாத நிலையில் அனைத்தையும் பார்த்துக்கொண்டே யிருக்கிறாள். நெற்றியிலும் வகிட்டுப் பிரிவிலுமாகக் காலையில் இட்ட இரு செந்நிறப் பொட்டுக்களும் கலையவில்லை. உதட்டிலே நிலையாக உள்ள புன்னகை மிளிரும் மாறுதலில்லை.

இரவுப் பொழுது அணுகிக் கொண்டிருக்கிறது. கணக்குப்படி இன்னும் ஒரு மூன்றே முக்கால் நாழிகைப் பொழுதுதான் பாக்கியிருக்கிறது. அதற்குள்ளாக அவளுக்கு மூச்சு திரும்பி வந்தால்தான் உண்டு. இல்லையானால்?

அந்தக் கேள்விக்குரிய பதிலில் பெரும் பயங்கரமல்லவா ஒளிந்து கொண்டிருக்கிறது?

வெளியே உள்ள கூட்டத்தில் ஒரு சலசலப்பு ஏற்படுகிறது. யாரோ ஒரு தடியன்—ஆறே கால் அடி உயரத்தில் எங்கிருந்தோ ஓடி வந்து கூட்டத்தினிடையே புகுந்து கொள்ளுகிறான். அவன் வந்துள்ள ஓட்டத்தின் வேகத்தை அவனுக்குள்ள வியர்வைகளும் இரைப்பு மூச்சுக்களும் காட்டிக் கொடுக்கின்றன. ஐம்பது வயதில், நல்ல கட்டுமஸ்தான உடல். அவனுடைய அகன்று பருத்துள்ள விழிகளின் பயங்கரமே அனைவரையும் அச்சமடையச் செய்கிறது. கறுப்பு நிறத்தில் ஒரு முண்டா பாடி அணிந்திருக்கிறான். இடுப்பில் தொடை அளவுக்கு ஓர் அரைக் கால்சட்டை உள்ளே யிருக்க, அதன் மேலே வரிந்து கட்டியுள்ள ஓர் அழுக்குத் துண்டு. வலது கை முண்டாவில் கட்டப்பட்டுள்ள கறுப்பு நிற முடிக்கயிறு அவனுடைய உடல் வலிவை விளம்பரப்படுத்துகிறது.

கூட்டத்துக்குள் புகுந்த அவன் எட்டப் பார்வையாக நாலாபுறங்களையும் பார்க்கிறான். அதைத் தொடர்ந்து ஒவ்வொருவரின் முகத்தையும், அவர்களது பேச்சுக்களையும் கூர்ந்து நோட்டமிடுகிறான் சிறிது நேரம். பின்னர் வீட்டு ஓரத்தில் நிற்கும் ஸ்திரீகளின் கூட்டத்துக்குள் புகுந்தடித்துக் கொண்டு படியேறி உள்ளேயும் நுழைந்து விடுகிறான். அவனுடைய தோற்றமே அவனுக்கு வழியை அளித்து விடுகிறது!

அவன் திண்ணையேறி, நேரே அவள் கிடத்தப்பட்டிருக்குமிடத்துக்கு வந்து சேருகிறான். யாவரையும் உறுத்து விழித்தபடி 'ஊம்—ஊம்' என்று அவன் கையசைத்து விலகிப் போகுமாறு கூறும் தோரணையும், அதிகாரமும் யாவருக்கும் வியப்பை அளிக்கின்றன.

அவன் அவளுடைய காலடியில் மண்டியிட்டவாறு அமருகிறான். தான் போட்டிருக்கும் கறுப்பு நிற ஜிப்பாவைத் 'தரதர'வெனக் கிழிக்கிறான்; அதை மாலையாக முறுக்கி அவளுடைய கழுத்தில் சுற்றிக் கட்டுகிறான். பின்னர் அவளுடைய புடவைத் தலைப்பை உருவியெடுத்து, அதிலிருந்தும் ஒரு முழம் கிழிக்கிறான். அதையும் முறுக்கி மாலையாக்கித் தன் கழுத்தில் சுற்றிக் கொள்ளுகிறான். அப்போது அவனுடைய விழிகள் நெருப்புத் தணலாகப் பழுத்து உருண்டபடி அவளுடைய முகத்தையும், உடலையும் வெறித்து வெறித்துப் பார்க்கின்றன. ஐந்தே நிமிஷங்கள் — அதன் முடிவாக பயங்கரமான உறுமலைக் கொண்ட ஊங்காரம் அவனிடமிருந்து எழுகிறது. பின்னர் எழுந்து நின்று கையிலுள்ள கறுப்புத் துணித் துண்டத்தை அவளுடைய தலையிலிருந்து கால் நுனிவரையில் படும்படியாகத் தடவி அதைக் கால்மாட்டின் கீழே வைக்கிறான். பின்னர் அவளுடைய கால்களைத் தன் கையால் தடவியெடுத்துக் கைவிரல்களை நெறித்துப் படபடவென்று சொடுக்கிவிட்டுக் கீழே உள்ள கறுப்புக் கந்தையையும் அவளுடைய கழுத்திலிருந்த மாலையையும் சேர்த்துச் சுக்கலாகக் கிழித்துக் கையில்

எடுத்துச் சொல்லுகிறான். முடிவாக அவளை நிடமாகச் சுற்றி வந்து, நிலையை விட்டுக் கீழே இறங்கிக் குடி போதை கொண்டவன் போல் இடித்துப் புடைத்துக் கொண்டு வெளியே ஓடுகிறான்!

கொஞ்ச நேரத்துக்கெல்லாம் நிலையி லிருக்கும் இரண்டு டாக்டர்களும் பரபரப்பாகச் சென்று அவளது கைநாடியைப் பிடித்துப் பார்க்கின்றனர். பின்னர் ஸ்டெதாஸ் கோப்பையும் கொண்டு வரச் செய்து அவளுடைய மார்பு, நெஞ்சு எல்லாவற்றையும் சோதிக்கின்றனர். அவ்விருவரின் விழிகளும் எதிரும் புதிருமான ஒளியுடன் சந்திக்கின்றன. அதனைக் காணும் அத்தனை விழிகளிலும் ஆர்வம் உச்சநிலையை அடைகிறது. சிலர் குடிதண்ணீர் எடுத்து வருவதற்காகப் பரபரப்பாக உள்ளே ஓடுகின்றனர்.

டாக்டர் அவளது வாயை நெம்பித் திறந்து கொண்டு, கொஞ்சம் குளிர்நீரைச் செலுத்துகிறார். அது உள்ளே இறங்கிச் செல்வதை அவளது குரல்வளைகள் அறிவிக்கின்றன. அடுத்த கணம்—

'ஆகா! அவளுக்கொரு புனர்ஜன்மம்! தங்கம் பிழைத்து விட்டாள்! அதோ அவளுடைய விழிகளுக்கு இலேசான அசைவுகளும் ஏற்படுகின்றனவே? ஆமாம், தங்கத்துக்குப் புனர்ஜன்மம்!'

'ஆகா! இப்போது வந்துவிட்டுப் போனவன் தெய்வமாக இருக்குமோ? ஆமாம், அவன் தெய்வம்தான்!'

'அவன் யார்? அவன் எங்கே? அவனை யார் அனுப்பினார்கள்? அவன் எப்படி, எந்த வழியாகப் போனான்?' — இவ்வளவு கேள்விகளையும் மாற்றி மாற்றி விடுக்கிறார்களே தவிர, பதில் சொல்லுவார்தான் யாரும் இல்லை.

மேற்குறிப்பிட்டுள்ள அநேகரின் கேள்விகளுக்கும் விடையாக, அதே சமயம் தானாகா

11-1-67
சாவித்ரி
இதழ்

## சாஸ்திரி கொடுத்த பரிசு



ஆதாரம்: ''ஆர்கனைசர்''
தகவல்: வி. சம்பத்குமார்

அப்போது லால் பஹதூர் சாஸ்திரி உத்தரப் பிரதேச உள்துறை அமைச்சராக இருந்தார். மொராதாபாத்தில் 'போலீஸ் பயிற்சிக் கல்லூரி'யின் ஆண்டு விழா விளையாட்டுப் போட்டி நடைபெற்றது. அவ்விழாவுக்கு சாஸ்திரி தலைமை வகித்தார். போட்டியில் வெற்றி பெற்ற இளைஞர்களுக்குப் பரிசு வழங்கிய சாஸ்திரி, ''இதுவரை இளைஞர்களின் போட்டியைக் கண்டோம். அவர்கள் பாரதத்தின் நாளைய பிரதிநிதிகள். பாரதத்தின் இன்றைய பிரதிநிதிகளான முதியவர்களும் இப்போது ஒரு போட்டியில் ஓட வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்'' என்றார். அவரது விருப்பத்துக்கிணங்கி மாவட்ட கலெக்டர், போலீஸ் ஐ.ஜி., கமிஷனர் போன்ற முதியவர்கள் பந்தயத்துக்குத் தயாரானார்கள். அப்போது சாஸ்திரி தம் அருகில் அமர்ந்திருந்த அலக்தாரி (பல சமஸ்தானங்களில் மந்திரியாகப் பணியாற்றியவர்)என்ற எழுபது வயதுக் கிழவரையும் போட்டியில் கலந்து கொள்ளச் சொன்னார். அவர் எவ்வளவோ மறுத்துக் கூறியும் சாஸ்திரி விட்டாரில்லை.

''ஒன்று, இரண்டு, மூன்று'' — எல்லோரும் ஓட ஆரம்பித்தனர். என்ன ஆச்சரியம்! எழுபது வயதான அலக்தாரி வெற்றி பெற்றார். பரிசுகள் அனைத்தும் ஏற்கனவே வழங்கப்பட்டு விட்டதால் மீதி ஒன்றும் இல்லை. உடனே சாஸ்திரி தமது பையிலிருந்த மணிபர்ஸை அப்படியே எடுத்து அலக்தாரிக்குப் பரிசளித்துவிட்டார்!

# இந்தச் சிறுமி யார் தெரிகிறதா?



டி. கே. எஸ். சகோதரர்கள் இல்லம். அவரது நாடகச் சிறப்பினை நவிலும் பழைய படங்கள் அந்த அறையை அலங்கரிக்கின்றன. நாடகத் துறையின் அதிர்ஷ்டம் திரு பகவதி எலும்பு முறிவு ஏற்பட்ட கால் குணமாகி நாற்காலியில் அமர்ந்திருக்கிறார். திரு டி. கே. சண்முகம் அந்த அறையிலுள்ள படங்களைச் சுட்டிக் காட்டி விமரிசித்துக் கொண்டிருக்கிறார்.

''அதோ, தம்பி பகவதியுடன் காட்சியளிக்கும் சிறுமி யார் என்று தெரிகிறதா?'' என்று திரு டி. கே. சண்முகம் வினவுகிறார்.

''திரௌபதியோ? உங்கள் குழு நடிகை ஆயிற்றே?''

''இல்லை! இன்னும் கொஞ்சம் யோசித்துச் சொல்லுங்கள்!''

நடிகைகளின் பட்டியலைக் கிடுகிடுவென்று சொல்லிப் பார்த்தாலும் சரியான விடை தெரியவில்லை. உங்களுக்காவது யார் என்று தெரிகிறதா? திகைக்கிறீர்களா? 118ம் பக்கத்தைப் புரட்டிப் பாருங்கள். யார் என்பது வெட்ட வெளிச்சமாகி விடும்.

---

போலீஸ் ஸ்டேஷனின் உட்புறத் தாழ்வாரத்துக்குள் வேறொரு நாடகம் நடந்து கொண்டிருக்கிறது.

நான்கு போலீஸ்காரர்களின் நடுவில் கைகளைப் பின்கட்டாகக் கட்டிவைக்கப்பட்ட ஒருவன் நிற்கிறான். ஆறேகால் அடி உயரத்துக்கு! அவனுடைய கழுத்தில் வெப்பு நிறப் பட்டுப் புடவையின் தலைப்பு ஒன்று அரளிப்பூ மாலைபோல் காட்சியளிக்கிறது!

அவனது முழங்கால்களுக்குக் கீழே எட்டாவது தடவையாகப் பிரம்படி சீறி விழுகிறது. அவன், 'ஐயோ, ஐயோ'வென்று கூச்சலிட்டபடி துள்ளிக் குதிக்கிறான்.

''களவாணிப் பயலே! இதுதானே ஓடினவனாறு? பட்டப் பகலிலே வீடு புகுந்து திருடறத்துக்கு எவ்வளவு துணிச்சல் இருக்கணும் உனக்கு? புடிச்சுக்கிட்டு வந்த போலீசை ஏமாத்திட்டு ஓடறதுக்கு எவ்வளவு நெஞ்சழுத்தம் இருக்கணும் உனக்கு? நீ ஒரு 'பழைய கேடி'ங்கிற சேதி அவங்களுக்குத் தெரியாது! இவ்வளவும் பண்ணிட்டு, பித்தலாட்டம் சோடிச்சு வேறேயா சொல்றே? திருட்டுக் கழுதை!'' — இந்த வார்த்தைகளைத் தொடர்ந்து இன்னும் இரண்டு பிரம்புப் பரிசுகளையும் சேர்த்து வழங்குகிறார் போலீஸ் ஏட்டய்யா.

அடுத்த கணம், அவன் மிகுந்த கண்டிப்பான பார்வையுடன் கூறுகிறான்: ''ஐயாய்யா! ஏட்டய்யா! கொஞ்சம் நிதானிக்கக்கிட்டு. அப்புறம் எவ்வளவுன்னாலும் என்னை அடியுங்க, உதையுங்க; நானு — இப்போ சொன்னது அத்தனையும் சத்யம்க! நானு தப்பிச்சுக்கிட்டு ஓடினது உண்மைதானுங்க. அந்த மாதிரியாக ஓடக்கொண்டு ஏதோ எங்க முப்பாட்டன் காலத்து மந்திர வித்தையாலே ஓர் உசிரைக் காப்பாத்தி வைக்க எனக்குத் தோது கிடைச்சது பாருங்க, அதுக்காகக் கடவுளைக் கும்பிடறேனுங்க! அதனாலே நானு மறுபடியும் உங்க கையிலே வந்து சிக்கும்படியா நேர்ந்ததுக்காகவோ எனக்குக் கிடைக்கப் போகிற தண்டனைக்காகவோ எனக்குத் துக்கமுமில்லே; கவலையுமில்லீங்க!''

அப்போது போலீஸ்காரர்கள் நால்வரும் திகைத்தவாறு நிற்கின்றனர். அவர்களும் மனிதர்கள்தாமே?

தெய்வத்தின் நிலையில் மதிப்பு வைக்கப்பட்ட 'அந்த ஒருவனை'ப் பற்றின அந்தரங்கத்தை ஒருவராலும் அறிய முடியவில்லை. அந்த டாக்டர் குறிப்பிட்டது போல், மனிதன் மனமறிந்து செய்யும் தர்மங்களின் நிழல்தான் அவனுக்கு மனமறியாமலே கூடி வரும் நல்ல சக்தி என்பதை, இன்றைய உலகமும் ஏற்றுக் கொண்டு விட்டது போதும்! அந்தச் சக்தியைப் 'பழைய கேடி' யென்று போலீஸ் ஏடுகள் வேண்டுமானால் கூறிக் கொள்ளட்டும்!

இதோ, தூக்கியெறிந்த மருந்துப் பெட்டியையும், ஸ்டெதாஸ்கோப்பையும் எடுத்துக் கொண்டு, ஊருக்கு உயிர்த் தொண்டு புரியக் கிளம்பி விட்டார் பட்டு டாக்டர். இந்தச் சக்தியை இயக்கும் சக்தியாக உள்ளவள் அவருடைய தங்கம்தான். ஆனால், இந்தச் சக்தியை மீட்டுக் கொடுத்த 'அந்த ஒருவனுக்கு' தன் நன்றிக் கடனைச் செலுத்த முடியவில்லையே யென்ற ஏக்கம் மட்டிலும் அவர் உள்ளத்திலுள்ளது. அவர் — ஊருக்கே தங்கமான பட்டு டாக்டர்!

BENTEX NOW BRINGS YOU STRAPS WITH

ENCHANTING

# EMBROIDERY

ON BEWITCHING BLACK

OR CATCHY COLOURS

Six in one pack – with a range of intricate embroidery on black or in a variety of colours




Especially for the ladies, Bentex brings beautiful inter-woven embroidery on washable nylon straps-Go exotic with bewitching black or match any ensemble with colourful embroidered straps - GET A PACK NOW

"Bentex"



with a special easy to fix, lock-clip

# காற்றினிலே வரும் கீதம்

ரா. கணபதி

## அத்தியாயம் 28

## களப்பலி

மீராவை விஷம் ஏதும் செய்யாத அதிசயத்தையும், கண்ணனின் கண்டம் கருப்பாகிய பேரதிசயத்தையும் மட்டுமே கும்பராணா கேட்டிருந்தால் ஒருகால் அவனது மனம் மாறி இருக்கக்கூடும். ஆயின், அப்படி அவன் மனமாற்றம் கொள்வது மாயக் கண்ணனின் திருவுள்ளமல்ல போலும்! காராக்கிருஹத்தில் நடந்த அற்புதத்தை ரத்னா அவனிடம் தெரிவித்த அதே சமயத்தில் இன்னொரு செய்தியும் ராணாவுக்கு வந்தது: பிராயோபவேசம் புரிந்த சண்டனின் உயிர் துர்கா பரமேசுவரியிடம் ஐக்கியமாகி விட்டது!

''மேவார் ராஜ்யத்தின் ஆன்மாவையே அந்தப் பெண் பேய் உறிஞ்சிவிட்டது'' என்று அலறினாள் சௌபாக்கியதேவி.

''அண்ணா, சாம்ராஜ்யமே செத்த வீடாகி விட்டது. எனக்குப் பீதியாயிருக்கிறது'' என்று திகிலடைந்து கூவினாள் உதயா.

''இனி ஒரு கணமும் அவள் இந்த ராஜ்யத்தில் இருக்கக் கூடாது: இருக்கவும் மாட்டாள்'' என்று குமுறினான் கும்பன்.

''அவளைக் கட்டுப்படுத்த என்னால் இயலவில்லை. நான் கையாலாகாதவன். ஆகையால் அவளை ஒரேயடியாக அவிழ்த்து விட்டு விடுகிறேன். இந்த நாட்டை விட்டே அவள் போய்த் தொலையட்டும். ராய்மல், மீராவை நான் நாடு கடத்துகிறேன். போய் அவளிடம் தெரிவி'' என்றான்.

நாடு கடத்தல் உத்தரவு அவளுக்கு மனோரஞ்சகமாகவே இருந்தது. 'ஆகா, நானாகக் கிளம்பினால் அவருக்கு அவமானம் என்று தான் இத்தனைக் காலம் கட்டுப்படுத்திக் கொண்டேன். ஆனால் அதுவே இப்போது அவர் கட்டளையாக வந்து விட்டது!' கூண்டிலிருந்து வெளியேறும் பட்சியாக மீரா உவகையில் பொங்கினாள். மலர மலரச் சிரித்தாள்.

சாட்சாத் கும்பராணாவே அப்போது அங்கு வந்து சேர்ந்து விட்டான்.

''மீரா, ராய்மல் கொண்டு வந்த உத்தரவை மாற்றி விட்டேன்'' என்று கூறிவிட்டு வெறி பிடித்தவன் போல் நகைத்தான்.

''மெய்யாகவா அப்பா?'' என்று ஆனந்தத்துடன் தந்தையை அணுகினான் ராய்மல்.

''ஆமாம் ராய்மல். நீ அங்கிருந்து புறப்பட்டதுதான் தாமதம். சாரர்கள் மேலும் சுபச் சேதி கொண்டு வந்தார்கள். உன் அருமைச் சித்தியின் தயவில் சித்தோர்க் கோட்டையைத் தங்கு தடையின்றி ஆண்டி வேஷத்தில் பரிசீலித்துச் சூக்ஷ்மங்களைத் தெரிந்து கொண்டு விட்ட கில்ஜி நம் நாட்டின் மீதே படை எடுத்து வருகிறானாம். தனியாக வரவில்லை. கில்ஜி நம்மிடம் தோற்றவுடன் சதிகார மஹ்மூத் குஜராத் சுல்தான் குத்புதீனைச் சரண் புகுந்தானாம். இப்போது அந்தக் குத்புதீனையும், என் உதவியாலேயே அரசாட்சி பெற்ற நாகோர் ஷாம்ஸ்கானையும் சேர்த்துக் கொண்டு கில்ஜி பெரும் படைகளுடன் வருகிறானாம். இந்த நாடே விரைவில் முகமதியர் ஆட்சிக்கு வரப்போகும் போது, உன் சித்தி செய்த உபகாரத்துக்குப் பிரதியாக அவளே அதில் சுல்தானாவாகப் பதவி வகிக்கக்கூடும். அவளை நாடு கடத்த எனக்கேது உரிமை?''

கும்பராணா பயங்கரமாகச் சிரித்தான். கொலை வெறியே அவன் முகத்தில் கூத்தாடியது. மீராவின் கழுத்தைப் பிடித்து நெரிக்கவொட்டாமல் அவனை எது தடுத்தது என்று அவனுக்கே தெரியவில்லை. சுற்று முற்றும் பார்த்தான். கிரிதர விக்கிரகத்தின் பின்னிருந்த காமதேனு அவன் கண்ணைக் குத்தியது. அவனே ஜயபுரிச் சலவைக் கல்லால் செதுக்கி வைத்த சிலை அது. பித்தனாக அந்தப் பசுப் பதுமையிடம் பாய்ந்தான் கும்பன். அதை அப்படியே உருட்டிப் புரட்டிக் கீழே தள்ளினான். எழிலார்ந்த சிலை துகள் துகளாகச் சிதறியது.

ராணாவும் உடைந்த சிலையாகத்தான் மீராவின் கண்ணுக்குத் தோன்றினான். ஆனால் அவள் மட்டும் உடையாமல் முழுமையுடனேயே இருந்தாள். பாறாங்கல்லும் சிதறிய போது மலர் நசுங்காமல் சொகுசாக இருந்தது. இதில் விந்தையென்ன? மலையுச்சியிலிருந்து பாறாங்கல்லைத் தள்ளினால் அது தானாக உடையும். ஆனால் அதே உச்சியிலிருந்து மலரைப் போட்டால் அது சிதைவதில்லையே! மலர் போன்ற மனம் படைத்தவர்களை எவ்வளவு கீழே தள்ளினாலும் அவர்கள் பாதிக்கப்படுவதில்லையே!

மீரா சாந்தமாக ராணாவிடம் சொன்னாள்:

''முகம்மதிய சாம்ராஜ்யத்தைவிடப் பெரிய ஓர் அரசுக்கு சுல்தானாவாகவே ஆசைப்படுகிறேன். நானாக நாட்டை விட்டோட முடியாமல் தவிக்கையில் அதையே தங்கள் உத்தரவாக இளவரசர் கொண்டு வந்தார். அதேபோல், உலகையே விட்டுப் போக முடியாமல் நான் தவிக்கும் போதும்....''

மீரா மேலே பேசிக் கொண்டு போனாள். கும்பன் செவியைப் பொத்திக் கொண்டான்.

விம்மி விம்மிப் பேசினான்: "நான் காதைப் பொத்திப் பயன் என்ன? நீ உண்மைதான் சொன்னாய் மீரா! நீ இந்த உலகில் இருக்க இந்த உலகுக்குத் தகுதி இல்லை. உன் உயிரை எடுக்க எவருக்கும் தகுதியில்லை போலிருக்கிறது. நான் கொடுத்தனுப்பிய விஷமே உன்னை ஒன்றும் செய்யவில்லையே. உன்னை எப்படி இந்த உலகிலிருந்து அனுப்பப் போகிறேன்?"

கும்பராணா சிந்தித்தான். சடேரென்று ஏதோ ஒன்று அவனுக்குத் தோன்றியது.

"மீரா, யுத்தத்தில் வெற்றி பெறக் களப்பலி இடுவதுண்டு. கல்தான்கள் படையெடுத்து வருகையில் உன்னை அப்படித் தரலாம். துர்காதேவியின் காரியமாதலால் அதற்குத் தடை நேராது. உன் விருப்பமும் நிறைவேறும். ஆனால் கொலையாளிகளைக் கொண்டு உன்னைப் பலியிட மாட்டேன். நீயாகவேதான் உன் உயிரைப் போக்கிக் கொள்ளவேண்டும். கவுகௌரி விரதத்தன்று வந்தாயே ஏரிக்கரைக்கு; அந்த ஏரியே தேவியின் ஸ்வரூபம் என்று கருதுவதுண்டு. அதில்..... அதில்......"

ராணா பெண் பிள்ளையைப் போலக் குலுங்கக் குலுங்க அழுது கொண்டே அகன்றான். அவன் பாதத்தில் ஏதோ இடறியது. குனிந்து பார்த்தான். மீராவுக்கு அவன் விஷமனுப்பிய கிண்ணம்! அது மட்டுமல்ல; ஆதியில் 'வாழ்க்கை இன்பத்தை நிரப்பித் தருகிறேன்' என்று கூறி அவன் மீராவிடம் பழரசம் தந்ததும் இதே கிண்ணத்தில்தான்!

ராய்மல் சிந்தையைப் பிரதட்சிணம் செய்து அவன் பாதத்தில் சிரத்தை ஒற்றி அகன்றான்.

ராய்மல் காராகிருகத்திலிருந்து மட்டும் புறப்படவில்லை. சித்தோரை விட்டே, மேவார் ராஜ்யத்தை விட்டே புறப்பட்டு விட்டான். அரசைப் பேரபாயம் சூழ்ந்திருக்கிறது என்பதை அவன் உணர்ந்த போதிலும் மனமுடைந்து இளம்பி விட்டான். முன்பே மானவத்துக்குச் சென்று போரிட முடியாமல் தவித்த அவனுக்கு இப்போது வலுவில் வீரலட்சுமியின் வரவேற்பு கிடைத்த போதிலும் அதை ஒதுக்கிவிட்டு இதயம் வெடிக்கப் புறப்பட்டு விட்டான்.

மீராவும் பரிமள மலராகப் புறப்பட்டாள். கண்ணன் சிலையை வணங்கி, அவனுக்குச் சாத்தியிருந்த துளசி மாலையை எடுத்துத் தரித்துக் கொண்டாள். ஆதியில், பாட்டனாரிடம் ஸாவன் தீஜ் தினத்தன்று கேட்டுப் பெற்ற முரட்டுத் தோம்புப் புடவையைத் தனிர் மேனியில் சுற்றிக் கொண்டாள்.

இணை பிரியாத தன் தம்புராவையும் கரதாளத்தையும் எடுத்துக் கொண்டு, காலில் சலங்கை கட்டிக் கொண்டு, இன்ப நடமிட்டு, ஏரிக்குப் புறப்பட்டாள். சித்தோர் சாலைகளின் இருபுறமும் மக்கள் செயலிழந்து பார்த்திருக்கும்போது, அந்தச் சாலைகளுக்கும் மேலாகச் சங்கீதத்திலேயே மிதந்து கொண்டு தன் நித்திய கல்யாண நிலையத்தை நினைத்துச் சென்றாள்:

தடுப்பவர் யாருமின்லை -- கண்ணன் அன்பு
மதுதனில் மூழ்கிட மங்கை புறப்பட்டேன்

மானமும் வெட்கமும் குலமரியாதையும்
வானத்தில் விட்டேன்; ஞான வழி தொட்டேன்

சிரத்தின் உச்சியில் மாளிகையாம்
செந்நிற அன்பு அதன் இருக்கையாம்
சுழுமுனை முடிவினில் சூனியமாம்
சூனியத்தில் ஐயன் பாயல் உண்டாம்

அந்த புலன்களும் குஞ்சங்களாம்;
எண்ணங்கள் வண்ணப் புஷ்பங்களாம்;
மணவாளனை நோக்கி மணமகள் நான்
நியான தாளமதைத் தட்டி ஏகினேன்

கபடமும் இல்லை கழுமுனைப் பாயலில்
அப்பனை அடைந்தே இன்பம் கொள்வேன்
ராணா தன் வழி போனதே செல்க;
நானும்(து) என்வழி நானும் செல்வேன்

ராணாவைப் பற்றி அவள் பாடியது மக்களின் உணர்ச்சியைத் தட்டி எழுப்பியது. இயல்பாகவே வீர ரத்தம் ஓடப்பெற்ற அவர்கள், 'ராணா அவரது வழியிலேயே செல்ல வேண்டும்' என ராணி தேவி கூறிய நால் ராணாவின் வழியில் தாங்களும் சென்று நாட்டைக் காக்க வேண்டியதே தங்கள் தலையாய கடமை என்று உணர்ந்தார்கள். சித்தோர் அரசுக்கு ஒருகால் மீரா இழைத்திருக்கக்கூடிய தவற்றுக்குக் கழுவாயும் அவள் செய்து கொண்டுவிட்டாள் போலும்! மக்கள் அனைவரும் — ஆண் பெண் குழந்தை குட்டிகள் அடங்கலாக — பிரிய மகாராணியை விட்டுத் தளபதி மந்திராலயத்துக்கு விரைந்தனர்.

தன்னந்தனியளாக மீரா சென்றாள் :

மாதிலா கிரிதரன் அல்லாமல்
வேறு யாரும் வேண்டேன்

சங்கு சக்ரம் கதையும் பதுமம் தொங்குமாலை
தோகை

முழுதும் அழகு புரியும் பொருளைக் கொழுநனைக்
கொண்டேன்

அன்னை தந்தை உற்றம் சுற்றம் உன்னையன்றி
வேண்டேன்

குடியின் மானம் அடித்துவிட்டேன்; அடக்கு
யாருமில்லை

அடியார் கணத்தை அண்டி அமர்ந்து கொடிய
வெட்கம் ஒழித்தேன்

பவளம் முத்து நீத்(து) அணிந்தேன் துளவம்;
சந்தை உகந்தேன்

சித்தப் பாலைப் பிரேமை கொண்டு நித்தலும்
கடைந்தேன்

கண்ணனென்ற வெண்ணெய் கொண்டேன்;
உண்டனர் பிறர் மோரை

பாதை காணும் பேதைக்கு குரு, நாதன் பேரைத்
தந்தான்

இதயத்தீசன் நாமம்; ஆசான் பதம் சிரத்தில்
பதிந்தேன்

கண்ணின் நீரை வார்த்து வார்த்து, அன்புக்
கொடியை வளர்த்தேன்

செழித்துக் கொடியும் பரவி மணக்க, பழுத்ததே
பழமின்பம்

அன்பு வழியை அண்டர்க்குரைக்க ஜன்மம்
கொண்ட மீரா

துன்பம் நிறைந்த உலக நிலையைக் கண்டு கண்
சிவந்தேதான்

பிருந்தாவனத்துக்கு யாத்திரை போகும் ஆனந்தத்துடனேயே ஏரி விளிம்பிலே வந்து பனிங்காக நின்றாள் மீரா. சின்னஞ் சிறு




# ஸ்ரீ விசாலம் சிட் பண்ட் லிமிடெட்

(நிறுவியது 1947)

சென்ட்ரல் ஆபீஸ் : 61 - B, உஸ்மான் ரோடு
தி. நகர், சென்னை -17 போன் : 42916

ரிஜிஸ்டர்டு ஆபீஸ் :
திருநெல்வேலி – 6

கிளைகள் :

17, பேக்கர் தெரு
சென்னை - 1
தபால் பெட்டி நெ. 1841
போன்: 21955. தந்தி: FUND

12, கிலேதார் தெரு
திருச்சி - 2
போன்: 2276, தந்தி: VECIPA

12, போடி செட்டித் தெரு
திருப்பாப்புலியூர்

61, மேல செட்டிகள் தெரு
மதுரை
போன் : 3981. தந்தி : CHIT

4, பிள்ளையார் கோவில் தெரு
சாத்தூர்
போன் : 92

27, போஸ்ட் ஆபீஸ் தெரு
விருதுநகர்
போன் : 241. தந்தி : FUND

கட்டளைத் தெரு
திருநெல்வேலி - 6
தபால் பெட்டி நெ. 27
போன் : 274. தந்தி: FUND

115, தெற்கு சித்திரை வீதி
ஸ்ரீரங்கம்

59, விஸ்வேஸ்வரராவ் ரோடு
மாதவநகர், பெங்களூர்-1
போன் : 75955

8-563, சாலை பஜார்
மீனாக்ஷிபுரம்
நாகர்கோயில்

117, மகாதானம் தெரு
மாயூரம் (தஞ்சை ஜில்லா)

| | |
|---|---|
| அதிகாரம் பெற்ற மூலதனம் | ரூ. 5,00,000 |
| செலுத்தப்பட்ட மூலதனம் & ரிசர்வ் | ரூ. 1,20,123 |
| 31-3-66ல் புழக்கத்திலுள்ள மூலதனம் | ரூ. 163 லட்சம் |
| மொத்த ஆஸ்திகள் | ரூ. 80 லட்சம் |

## வட்டி 9½% வரை

பிக்சட் டிபாசிட்டுகளுக்கு

## M - 28 வது

குரூப் ரூ. 25,000 சீட்டு
விரைவில் ஆரம்பமாகிறது

ஏலம் எமது திருச்சி ஆபீசில்
நடைபெறும்

•

சென்னை சிட் பண்ட் ஆக்ட் அமுலில் உள்ள இடங்களில் அதன்படி சீட்டு நடத்தப்படுகிறது

விவரங்களுக்கு
அருகாமையிலுள்ள
எமது கிளையுடன்
தொடர்பு கொள்ளவும்

கிளைகள் :

61-B, உஸ்மான் ரோடு
தி. நகர், சென்னை -17
போன் : 42916

3-24-63, H. தர்மபுரம்
ஆதீனம் பில்டிங்
ஹைரோடு
திருநெல்வேலி ஜங்ஷன்
போன் : 382

25, ஆசாத் ரோடு
மேலப்பாளையம்
போன் : 267

19, கிக் பஜார் தெரு
சிவாஜிநகர், பெங்களூர்-1
போன் : 70406

247, வடக்கு ரத வீதி
தூத்துக்குடி
போன் : 342. தந்தி : FUND

59, அம்பலத்தாடியார்
மடம் தெரு
பாண்டிச்சேரி
போன் : 250. (available)
தந்தி : FUND

கலக்ஷன் ஆபீஸ்கள் :

ராயவரம் (திருச்சி ஜில்லா)
போன் : 43

154, நியூரோடு
சிவகாசி
போன் : 217. (available)

22 & 23, ராமசாமி செட்டியார்
தெரு, காரைக்குடி -1
பள்ளத்தூர் - போன் : 72

K. A. ராம், B.A., B.L.
மத்திய அலுவலக மானேஜர்

A. R. ராமசாமி
ஜெனரல் மானேஜர்

K.M.K. முத்தையா செட்டியார்
மானேஜிங் டைரக்டர்

Paramount

அலைகள் சிலும்பிக் கொண்டு வந்து அவளது பாதங்களைத் தொட்டன. யமுனாநதியில் முழுக் கண்ணனிடமே போகும் இன்பத்துடன் மீரா ஏரியில் புகுந்து சென்று கொண்டேயிருந்தாள். பாதத்திலிருந்து—முழங்கால், இடுப்பு, மார்பளவாகி அவளது மோவாயையும் தொட்டு விட்டது நீர். ஓர் அலை அடித்தது. மீரா நினைவின்றி ஆடினாள். அவள் நாசிக்குள் நீர் சரேலென்று புகுந்தது. கபாலத்தின் உச்சியில் ஏதோ ஒரு வீணையின் பிருடைகள் ஒரேயடியாக முறுக்கேறி 'ஹூஊர்' என்று ஒலித்தன. அந்த ஒலியும் வெள்ளத்தில் சிலம்பிய காற்சிலம்பு, கரதாளம், தம்புரா இவற்றின் ஒலியும் ஒன்றாக லயித்தன. அவ்வளவுமாகச் சேர்ந்து மோகனக் கண்ணனின் முரளி கானத்துக்குச் சுருதி கூட்டின. சுருதியின் பயமான நிசப்தத்தில் மீரா மூழ்கிவிட்டாள்

## அத்தியாயம் 29

# காமதேனுவின் தாண்டவம்

**ரா**ணா அதிக காலம் உள்ளம் குமுறித் துடிக்க அவகாசமில்லை. எதிரிகளின் முப்படைகள் அவ்வளவு வேகமாகச் சித்தோரை நோக்கி வந்தன. ராணாவின் வீர உணர்ச்சியையும், செயலாற்றலையும் தூண்டி எழுப்பியது ஒரு சம்பவம். நாகோரில் முகமதியர்கள் வேண்டுமென்றே ஆயிரக்கணக்கில் பசுக்களைப் பிடித்து அடைத்து வைத்தனராம். சித்தோரைக் கைப்பற்றி, ராணாவைச் சிறைப் பிடித்து அழைத்துச் சென்று, அவனது ஹிந்து ரத்தத்தைக் கொதிக்கச் செய்வதற்காக அவனெதிரிலேயே பசுக்களை வதைக்க எண்ணியிருந்தார்களாம்.

இந்த கோஹத்தி மாபாவத்துக்கு வித்திட்ட மாபாவி தானே என்று ராணாவின் இதயம் தன்னையே தின்று கொண்டது. தான் காமதேனுவின் விக்கிரகத்தைக் கீழே பிடித்துத் தள்ளியதன் விளைவாகவே இப்படி ஓர் எண்ணம் எதிரிகளுக்கு ஏற்பட்டது என்று அவனது உள்ளம் கூவியது. அதற்குப்பின் கும்பன் காத்திருக்கவில்லை. உடலில் கடைசிச் சொட்டு ரத்தம் உள்ள வரையில், நாசியில் கடைசி மூச்சு இழையோடும் வரையில், இதயத்தில் கடைசி கடைசி எண்ணம் தேய்கிற வரையில் போராடுவது — போரில் தோற்றால் நாடு திரும்பாமல் சாவது—என்று பிரதிக்ஞை செய்து கொண்டு காவி உடை உடுத்தான் ராணா. மீரா தோம்புத் துணி கட்டிக் கொண்டு ஒரு வகையில் சந்நியாசினியாகப் புறப்பட்டாள். ராணா இன்னொரு விதத்தில் சந்நியாசியாகப் புறப்பட்டு விட்டான்!

ராஜபுதனத்தில் வீரம் வெள்ளமெடுத்தால் உலகையே புரட்டிவிடும் என்பதற்குச் சரித்திரம் கூறும் சான்றாக அமைந்தது யுத்தம். எண்ணிக்கையை வைத்து நடத்திய போரல்ல அது; எண்ணத்தின் அடர்த்தியை வைத்து நடத்திய போர். ராஜஸ்தானியரின் சுதந்திர எண்ணமே இறுதியில் வென்றது.

வாழ்க்கையில் தோற்றும் போர்க்களத்தில் வென்ற கும்பராணா ஓட்டம் பிடிக்கும் படைகளைத் தொடர்ந்தான். நாகோரை அடைந்தான். எந்த இடத்தில் பசுக்களை ஒன்றுகூட்டி வதைக்கப் பகைவர் உத்தேசித்திருந்தனரோ, அதே இடத்தில் அவற்றை ஆராதனை செய்வதற்காகத் திரட்டினான்.

அந்தப் பசுக்களின் முன் வந்து நிற்கும்போது அவனது கண்கள் மடையாகத் திறந்தன. 'மக்கள் உண்பதற்காக வயலில் உழுபவை மாடுகள். மக்கள் உண்பது போக எஞ்சிய வைக்கோலைத் தின்னும் தியாகிகள் அவை. அந்த வைக்கோலையும் அமுதப் பாலாக்கித் தன் கன்றுகளுக்கு மட்டுமின்றி உலகுக்கும் பொழியும் உத்தம ஜீவன்கள் அல்லவோ பசுக்கள்? அவற்றைவிடப் பூஜைக்குரியன எவை உண்டு? ஆகா, இந்த ஆயிரமாயிரம் பசுக்களில் ஒவ்வொன்றையும் அர்ச்சிக்க இயலவில்லையே' என்று ஆதங்கமடைந்தது ராணாவின் இதயம்.

அவ்வளவு பசுக்களையும் சித்தத்தால் ஒன்றாக்கி மனக்கோயிலில் வைத்துப் பூஜித்தான் கும்பன். நன்றியும் அன்பும் நிறைந்த அவனது உள்ள அரங்கில் எல்லாப் பசுக்களுக்கும் ஆன்மாவாகிய காமதேனுவே கம்பீரமாகத் தரிசனம் தந்தாள். அவளுக்குப் பக்கத்தில்....

ஆம், காமதேனுவின் பக்கலில் அவனது ராணியாக மீராவே நின்றாள். பக்கலில் நின்றாளா? பசுவாகவே நின்றாளா ?

'காமதேனு வேறு; மீரா வேறா?' ராணாவுக்குத் தெளிவு பிறந்தது. பசு — பசுபதி; கோ — கோபாலன் என்று சித்தாந்த வித்துவான்கள் விரித்து விரித்து விளக்கிக் கேட்டிருக்கிறான் கும்பராணா. ஆனால் இப்போது அதன் பொருள் அநுபவபூர்வமாகவே புரிந்துவிட்டது. 'கோ என்றால் ஜீவாத்மா; கோபாலன் பரமாத்மா' என்ற விளக்கம் ஒருபுறம் இருக்கட்டும்! அன்பு இருக்க வேண்டுமாயின் அன்பு செய்பவர் என்றும் அன்பு பெறுபவர் என்றும் இருவர் இருக்க வேண்டும். அன்பு புரிவதே கோ — அதுவே மீரா; அன்பு பெறுபவனே கோபாலன்'. உறுத்தும் வைக்கோலை உண்டு பாலாக்கும் பசுபோல் உலகத் துயரனைத்தையும் ருசித்து உண்டு பாலாக்கிப் பொழிந்த மீரா என்ற காமதேனுவின் அவதார ரகசியத்தையும் ராணா புரிந்து கொண்டு விட்டான்.

கும்பராணாவுக்குத் தான் அறிந்த ரகசியம் உண்மைதானா என்று இன்னொருவரைக் கேட்டு ஸ்திரப்படுத்திக் கொள்ளவும் முடியாமல் போயிற்று. அவன் கேட்டாலும் கூட அதைத் தெரிந்து கொண்டு உறுதிப்படுத்தும் ஞானியர் இவ்வுலகில் இருக்க முடியுமா?

'நிச்சயமாக ஒரு ஜீவனுக்கு அந்த உண்மை தெரியும்; தான் ரகசியத்தை உடைக்காமல் வெறுமே அந்த ஜீவனின் எதிரில் சென்று நின்றாலே அந்த ஜீவன் இவ்விஷயத்தில் தனக்கு உறுதி உண்டாக்கி விடும்' என்று

ராணாவின் மனம் கூறிற்று. காமதேனு தான் அந்த ஜீவன். உண்மைக் காமதேனு கோலோகத்தில் இருப்பதாகக் கூறப்பட்டாலும் ராஜஸ்தானத்தைப் பொறுத்த மட்டில் ஏகலிங்கர் ஆலயத்தில் ஒரு காமதேனு வாழ்ந்தாளே!

வெற்றி வீரனை கும்பராணா சித்தோரில் விஜயபவனி வராமல் நேரே ஏகலிங்கர் ஆலயத்துக்கு விரைந்தான்.

முன்பு மீராவுடன் தான் அங்கு வந்ததும் அப்போது காமதேனு கதறியதும், மீரா அதை நோக்கி ஓடி மூர்ச்சித்ததும் ராணாவின் நினைவரங்கில் நிழலாடின. இனம் தெரியாத வேதனையுடன் ஆலயத்துள் நுழைந்தான்.

வேதனையவ்வளவும் அக்கினியிலிட்ட பஞ்சாக எரியும் ஆனந்தம் ஆலயத்துக்குள் விளைந்தது. ஏகலிங்கர் ஆலயக் காமதேனுவை ராணா நோக்கியதும் அந்தப் பசு ஆனந்த மயமாக ஹூஹாகாரம் செய்து கொண்டு சுற்றிச் சுற்றி நிருத்தமிட்டது. கூடியிருந்தவர்களுக்கெல்லாம் அது பேராச்சரியமாயிருந்தது.

கோலோகத்திலே கண்ணபெருமான் காமதேனுவிடம் சொன்னான்: "நீ ஆனந்தத் தாண்டவமிடும் நாள் வரும் என்று சொன்னேனே, மெய்யாயிற்று பார்த்தாயா?"

இங்கே ராணாவால் இன்பச் சுமையைத் தாங்க முடியவில்லை. 'தன்னோடு பல்லாண்டு வாழ்ந்த மீரா யாரென்று நிச்சயமாகி விட்டது! ஆகா, அப்படிப்பட்டவளுடன் அத்துணை ஆண்டுகள் சேர்ந்து வாழ என்ன பாக்கியம் செய்திருந்தேனோ? ஆனால் அவளைத் துன்புறுத்தியவனும் நானேயல்லவா? இல்லை இல்லை. தான் எவ்வளவு பாடுபட்டுத் துயருக்கு மேல் துயரை அவளுக்கு அனுப்பி வைத்த போதிலும் அவள் துயரப் படவேயில்லை. அவளை யாராலும் துன்புறுத்த முடியாது. அப்படியானால் அமர மீராவைக் கொல்லமட்டும் முடியுமா என்ன? மீராவை நான் நிச்சயமாகக் கொல்லவில்லை. அவள் உயிர்வாழ்ந்து கொண்டேதான் இருக்கிறாள். உலக தர்மத்துக்கு உறைவிடமான மேவாரை விட்டு அவள் கண்ணனின் தர்மத்துக்கு உறைவிடமான பிருந்தாவனத்துக்குப் போய்விட்டாள். அவ்வளவுதான்!'

தன் எண்ணத்தை ஸ்திரப்படுத்திக் கொள்ளக் காமதேனுவை நோக்கினான் — கும்பாஜி. அது இன்னமும் குதித்துக் கூத்தாடியது.

"காமதேனு தாண்டவம் செய்தாள்", "காமதேனு தாண்டவம் செய்தாள்" என்பதையே திரும்பத் திரும்ப வாய்விட்டுக் கூறியபடி ராணா புறப்பட்டான்.

சித்தோர் நகர பவனியின் போதும், பின்னர் சபாமண்டபத்துக்கு வருகை தந்து சிம்மாதனத்தில் ஆரோகணித்த பின்னரும் இதையே மீண்டும் மீண்டும் கூறிச் சிரித்துக் கொண்டிருந்தான் கும்பாஜி ராணா.

அவையில் கூடியிருந்த சாரணர் எனப் படும் கவிஞர்களில் ஒருவர் உடனே ஆசுகவி பாடினார் :

**நாகோரில் கோரக் கோவதைப் பேச்செழ**
**காமதேனு கதிகலங்கி விட்டாள்**
**முப்பத்து முக்கோடி மூவாதவரும்**
**தந்த தண்ணீர் புல்லைத் தொட மறுத்தாள்**
**முகமதியரை முகம் கொண்ட மாராணா**
**பசுக்களைமதனைப் பரிபாலித்தார்;**
**சங்கரன் சந்நிதி சேரும் சீருடைக்**
**காமதேனுவும் களிநடம் செய்தாள்**

அவ்வளவுதான்! கும்பராணா 'காமதேனு தாண்டவம் செய்தாள்' என்று சொல்வதை நிறுத்திக் கொண்டான். மாறாக 'மீராவை அழைத்து வாருங்கள்' என்று திரும்பத் திரும்பக் கூறலானான்.

ஒன்று மாற்றி ஒன்றாகக் குமுறும் பல உணர்ச்சிகளிலும் நிகழ்ச்சிகளிலும் அலைப் புண்டதால் மகாராணாவின் ஈடிணையற்ற பேரறிவு பேதலித்து விட்டது என்ற பயங்கர உண்மையை நாடும் நகரமும் புரிந்து கொண்டன.

## அத்தியாயம் 30

# பிருந்தாவனம்

சித்தோர் ஏரியில் முழுகிய மீரா மீண்டும் கண் விழித்தது அவளுக்கே அதிசயம்தான்! 'அதிசயமென்ன? ஏரியில் விழுந்தால் அதோடு ஆன்மாவே செத்து விடுமா என்ன? கண்ணனின் உலகில் நான் மீண்டும் கண் விழிக்கத் தானே வேண்டும்?'

மீராவுக்குத் தான் கண்ணனின் உலகில் மட்டும் இல்லை என்பதும், மண்ணுலக மண்ணிலும் நீரிலும் வெயிலிலும் காற்றிலும் கிடப்பதும் புரிந்தது. ஏதோ ஒரு நீர் நிலைக்கரையில் கிடக்கிறாள். 'ஓகோ, சித்தோர் ஏரியும்கூட என்னை வைத்துக் கொள்ள மாட்டேன் என்று பகிஷ்காரம் செய்து விட்டதோ? இல்லை, இது சித்தோர் ஏரியில்லை. இது... இது...' மீராவின் இதயம் துள்ளியது. 'அப்படியும் இருக்க முடியுமா? நான் யமுனைக் கரையிலா இருக்கிறேன்? பிருந்தாவனத்திலா இருக்கிறேன்? இங்கு எப்படி வந்தேன்? அநாவசியக் கேள்வி! அவன் செயல்தான்.'

பிருந்தாவனத்து மண்ணில் புரண்டு கொண்டே யமுனைக்குள் வந்து விழுந்தாள் மீரா. பிருந்தாவனத்து நீரின் ஒவ்வொரு துளியிலுள்ளும், மண்ணின் ஒவ்வொரு துகளினுள்ளும் கிருஷ்ண பரமாத்மாவைக் கண்டாள். இதே பிருந்தாவனத்தில் கண்ணனின் வயிற்றுக்குள் அண்டங்களைக் கண்டாள் யசோதை. மீராவோ அண்டத்தின் ஒவ்வோர் அணுவுக்குள்ளும் கண்ணனைக் கண்டாள். சாகரத்தினுள் நீர்த் துளியைக் கண்டாள் யசோதை. நீர்த் துளியினுள் சாகரத்தைக் கண்டாள் மீராபாய். கண்ணன் என்ற கடலில் மீரா கானப் படகில் சஞ்சரித்த நாட்களுக்கு மீதாக, இப்போது படகுக்குள்ளேயே கடல் முழுதும் முழுகிவிட்டது!

பிருந்தாவனத்தில் மீரா கழித்த ஆனந்த நாட்களுக்கு ஈடேது, இணையேது? எளிய உள்ளத்து ஆயச் சிறுவர்களுடனும் அவள் ஆய்ப்பாடித் தெருவெல்லாம் புரண்டு இன்புற்றாள். மேவார் மகாராணியைச் சுற்றி இடைச் சிறுவர்கள் உட்கார்ந்து கதை கேட்டார்கள். அவள் தன் கதை முழுவதையும் பாட்டிலேயே சொல்வாள். தன் வாழ்வையே மூன்றாம் மனிதராகப் பார்க்கிற பாக்கியம் — கலைஞனாக இருந்து செய்ததை ரஸிகனாகிப் பார்க்கும் பாக்கியம் — மீராவுக்கு அப்போது கிடைத்தது. பல சந்தர்ப்பங்களில் உணர்ச்சியின் நெரிசலில் தான் பாடிய பாடல்களை இப்போது சாந்த நிலையில் பாடினாள். அந்தப் பாடல்களை ஆயர்குலத்தவர் கானம் செய்தனர். பிருந்தாவனத்திலேயே வாழ்ந்த சாதுக்களும், ஞானிகளும் அங்கு யாத்திரைக்கு வந்த பாகவத உத்தமர்களும் அந்தப் பாடல்களைக் கேட்டு ஆச்சரிய முற்றனர். இடைச் சிறுவர்களிடம் சென்று தவசிகளும் அப்பதாவலிகளைப் பாடம் கேட்டனர்.

பிருந்தாவனத்துக்கு வந்த தவசிகளில் ஒருவர் சாட்சாத் ரூபகோஸ்வாமியே என்று அறிந்த மீராவின் உயிர்ப் பறவை சிறகடித்தது. தனக்குக் கண்ணனன்பு புகட்டிய அந்த மகனீயரைத் தரிசிக்க விரைந்து சென்றாள். ஆனால் அவரது ஆசிரம வாயிலிலேயே அவளைத் தடுத்து நிறுத்தினர் ரூபரின் சீடர்கள். "துவாரகாபுரியில் கண்ணன் சந்நிதிக் கதவுகள் சாத்திக்கொண்ட நாளாக ஏதோ பெரும் அபசாரம் நடந்திருக்கிறது என்று குருஜீ வியாகுலமுற்றிருக்கிறார். அதற்குப் பரிகாரமாக மிகவும் கடுமையான தவ விரதங்களை அனுஷ்டித்து வருகிறார். எனவே, அவர் பெண்களைப் பார்ப்பதில்லை" என்றனர் ரூபரின் சீடர்கள்.

மீரா சிரித்தாள்.

"பெண்ணைப் பார்ப்பதில்லையா? புருஷன் ஒருவனை மட்டுமே பார்க்கிற பக்குவ நிலையா அவருக்கு வந்து விட்டது? கேட்டுக்கொண்டு வாருங்கள்" என்றாள்.

இவ்வார்த்தைகள் ரூபரின் செவியில் விழுந்ததோ இல்லையோ, அவர் ஒரு குலுங்குக் குலுங்கி விட்டார்.

'புருஷ ஏவேதம் ஸர்வம்' என்ற வேத வாக்கியம் அவரது இதய குகையில் சுழன்று சுழன்று கம்பீரமாகப் பிரதித்வனி செய்தது.

'புருஷன் என்றால் ஒருவனே ஒருவன் தான். பரம புருஷனுடன் கூட வேண்டிய அத்தனை ஜீவான்மாக்களும் பெண்கள் தாமே! நானே பெண்ணாயிருக்க, பெண்ணைப் பார்க்க மறுத்தேனே! என்னையே பெண்ணாகப் பார்த்துக் கொண்டிருந்தால் பெண்ணின்ப இச்சை இயல்பாகவே கழன்றிருக்குமே! அப்படியின்றி 'ஆண்' என்ற உணர்விலே ஆழ்ந்தபடியே பெண்ணின்பத்தைத் துறக்க எண்ணிய மடமையை என்ன வென்பது?' ரூபர் விரைந்தோடி வந்தார் ஆசிரம வாயிலுக்கு.

"குருமகாராணி ராதே! வணங்குகிறேன்" என்று கூறி மீராவின் பாதத்தில் விழப் போனவரைத் தடுத்து நிறுத்தினாள் அவள்.

"நான் யார் பாருங்கள்! அப்புறம் வேண்டுமாயின் வணங்குங்கள்" என்றாள்.



அவளது திருமுகத்தைக் கூர்ந்து கவனித்தார் ரூபர். ராதாராணியின் சின்னஞ்சிறு பேத்தி அந்தத் தூயமுகத்தில் நடனமிட்டாள். 'எத்தனையோ ஆண்டுகளாகி விட்டன. வயது ஏற ஏற மீராவின் குழந்தைத் தன்மையும் ஏறி, அன்று கண்டதைவிடச் சிறிய குழந்தையாய் இதோ நிற்கிறாள்!'

''மீரா, நீ எனக்கு அறிவுச் சுடர் கொளுத்தியது மட்டும் போதாது. இங்கே ஒரு பெரிய பண்டிதர் வந்திருக்கிறார். யாராலும் வெல்ல முடியாத அவர் அஜிதர் என்றே பெயர் பெற்றிருக்கிறார். பக்தி மார்க்கத்தைப் பற்றி அவர் கேட்கும் கேள்விக்கு உன்னையன்றி விடை சொல்வார் இல்லை. அவரிடம் போவோம் வா'' என்று கூறி மீராவை அழைத்துச் சென்றார் ரூபகோஸ்வாமி.

அஜிதர் கேட்டார் : ''மாயையை மாய்த்தாலன்றி மோட்சம் கிடைக்காது என்று பக்தி மார்க்கக்காரர்களாகிய நீங்களும் ஒப்புக் கொள்கிறீர்கள். உருவமும், உணர்ச்சிகளும் மாயை என்பதையும் ஒப்புக் கொள்கிறீர்கள். அப்படியிருக்க உருவமும் உணர்ச்சியும் கொண்ட உங்கள் பக்தி மார்க்கத்தால் மோட்சம் பெற முயல்கிறீர்களே! இது முரணல்லவா? உருவமும் உணர்ச்சியும் அற்ற ஞானமார்க்கத்தில்தான் மோட்சம் பெற முடியும் என்பது உங்கள் அறிவுக்கு ஏன் எட்டுவதில்லை?''

மீரா இளநகை பூத்தாள். ''மத்தகஜத்தை நேருக்கு நேராகச் சண்டையிட்டுப் பிடிப்பது எளிதா? அல்லது இன்னொரு பெண் யானையைக் காட்டி வசியம் செய்வது எளிதா ?'' என்று கேட்டாள்.

''இதென்ன கேள்வி? யானையை யானை கொண்டு பிடிப்பதுதான் எளிது. யாரேனும் அதனுடன் நேருக்கு நேர் சண்டையிடுவார்களோ?'' என்றார் அஜிதர்.

''மாயையுடன் நேருக்கு நேராகச் சண்டையிடுவதுதான் ஞானமார்க்கம். அதில் பராக்கிரமசாலிகள் வெற்றியும் பெறலாம். ஆட்சேபமில்லை. ஆனால் மாயையை எளிதில் மயக்கிப் பணிய வைக்க எங்களைப் போன்ற பலவீனர்களுக்கும் பக்தி உபயோகமாகிறது'' என்றாள் மீரா அடக்கத்துடன்.

அஜிதர் ஜிதராகி விட்டார். ''தேவி, தோற்றேன். ஆனால் தோல்வியிலேயே வென்று விட்டேன். உணர்வாலும் உருவாலுமே உணர்வையும் உருவையும் கடக்கும் வழியின் பெருமையைப் புரிந்து கொண்டேன். எங்கிருந்து கற்றீர்கள் தேவி, இத்தகைய அற்புதத் தத்துவத்தை?'' என்று விநயசிரத்தையுடன் வினவினார் அஜிதர்.

''கற்பதா?'' என்றாள் மீரா. ''பெண்ணுக்குத்தான் பெண்ணின் இரகசியம் தெரியும். நான் பெண். பக்தியும் பெண். மாயையும் பெண். எனவே ரகசியம் தானாகவே தெரிந்துவிட்டது. நீங்களும் பெண்ணாகுங்கள். ஞானக் குகைகளெல்லாம் வெட்ட வெளிச்சமாகிவிடும்'' என்றாள் மீரா.

அப்புறம் என்ன? பிருந்தாவனத்தில் அனைவருமே உள்ளத்தால் பெண்களாயினர். கோபிகளைக் காணக் கண்ணனும் வந்து சேர்ந்தான். பாகவதம் மீண்டும் நிகழ்ந்தது.

## அத்தியாயம் 31

# குற்றச்சாட்டு

பழைய பாகவதத்தில் கண்ணன் ராதையைத் தவிக்க விட்டுப் பிருந்தாவனத்திலிருந்து மறைந்தான் அல்லவா? இப்போதும் அதையே செய்து விட்டான்.

ஆயினும் பிருந்தாவனத்திலிருந்து கண்ணன் வடமதுரை சென்றான். அதன்பின் அவன் நிரந்தர வாசஸ்தலமாக்கிக் கொண்டது துவாரகையைத்தான்! அந்தத் துவாரகையை நோக்கி மீரா புறப்பட்டாள்.

'ஆய்ப்பாடிக் கண்ணன் கோபியரின் சேலைகளைக் களைந்து மானத்தை வாங்கியவன்; துவாரகைக் கண்ணனோ பாஞ்சாலிக்குச் சேலை தந்து மானத்தைக் காத்தவன். இதுவரை என் மானத்தை வாங்கியவன் இப்போது மானம் காக்கவே துவாரபதிக்குக் கூப்பிட்டிருக்கிறானோ?'

மழையிலும், வெயிலிலும், புயலிலும் நாட்டுக்கு நாடு மாறி நூறு நூறு காவதங்கள் கால்நடையாகச் சென்றாள் மீரா. மலைகளையும் பாலைகளையும் காடுகளையும் காட்டாறுகளையும் கடந்து தனியே சென்றாள் மீரா.

வழியில் எத்தனை எத்தனையோ சோதனைகள். நீரில் ஊறிக் கால் சதை புண்ணாகிய நாட்கள் பல. மண்ணில் பொறிந்து கொப்புளித்த நாட்களும் பலப் பல. பனியில் எலும்புக் குருத்துக்களும் முடங்கிய நாட்கள் எத்தனை எத்தனையோ! ஆனால் இந்த வருத்தங்களுக்கு மேலாகக் கண்ணனின் தரிசனத்தை அடியோடு இழந்த வருத்தம்தான் அவளுக்குப் பெரிதாக இருந்தது. அந்த வருத்தம் பாடலாக வெளிவந்தது.

எங்கு சென்றான் பிரியன் ?
பொங்கும் ஆசையைப் பொழிந்துவிட்டே பின்னர்
(எங்கு)

பக்தி எனும் ஜோதி வத்தியை ஏற்றிப்பின்
நம்பிக்கைத் துரோகியாய் நம்பி சென்றானடி

விரகக் கடலினிடை விட்டுச் சென்றானடி
பரிவென்னும் புணையினைப் புனைந்து வாரானோ?

மீராவின் பிரபு கிரிதர நாகரன்
வாராதிருந்திடில் வாழ்வு பாழாகும்.

ஆய்ப்பாடியிலிருந்து ராஜஸ்தானம் வழியாகவே துவாரகாபுரி சென்றாள் மீரா. மகாராணாஜி தன்னைப் பார்க்கப் பித்தமுற்றிருக்கிறார் என்று ஏதோ ஒன்று அவளுக்குக் கூறியது. 'ஆயின் இப்போது தான் சித்தோர் சென்றால், ஏரியில் மூழ்கியும் உயிர் துறக்காத தன்னை ஒரு தெய்வமாகவே மக்கள் வழிபடு

**எமது பொங்கல் வாழ்த்துக்கள்!**

பொங்கல் - ரம்ஜான்
விசேஷ விற்பனை!

உயர்தர
காஞ்சீபுரம், பனாரஸ்

# பட்டுச் சேலைகள்

மற்றும்
மில் ஜவுளிகளுக்கு

# P. B. லக்ஷ்மண ஸா & பிரதர்ஸ்

பனகல் பார்க்
தியாகராயநகர் - சென்னை -17
போன்: 43435
சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2
போன்: 86366

---

PANDARAM'S
HERBAL PURGATIVE OIL
(Regd.) For
CHILDREN'S CONSTIPATION
Convulsions, fits and
enlargement of spleen etc.
MCN'S ECLECTIC PHARMACY & DISPENSARY
MADRAS.

1. குழந்தைகளுக்கு ஓர் வரப்பிரசாதம்!
2. குழந்தைகளை ஆரோக்கியமாக இருக்க உதவுகிறது.
3. மலச்சிக்கலுக்கு சிறந்த நிவாரணி.
4. மாந்தம் வராமல் தடுக்கிறது.
5. வலிப்பு, இழுப்பு வராமல் காப்பாற்றுகிறது.

**பண்டாரம் மாந்த எண்ணெ**
( Registered - Ayurvedic )

தயாரிப்பாளர்கள்: M. C. N'S
**எக்லக்டிக் பார்மஸி & டிஸ்பென்ஸரி**
டாக்டர் நஞ்சுண்ட ராவ் மருந்து ஷாப்
56, சிங்கராச்சாரி தெரு
திருவல்லிக்கேணி, சென்னை-5 போன்: 86748

விநியோகஸ்தர்கள்:
ஸ்ரீ வெங்கடேஸ்வரப்பிரசன்னு & கோ.
56, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி
சென்னை - 5

Paramount

---

## என்ன? எப்ப பார்த்தாலும் கண்ணாடியும் கையுமா?



என்னைப் பார்!
என் தலையைப் பார்!
இப்போது நான்
வயது முதிர்ந்தவனாகவே
காணவில்லை.
எல்லாம் நீ சொன்ன
**கேசவர்த்தினியின்**
மகிமைதான்!
ஆண்களுக்கும்
கேசவர்த்தினி அடர்ந்த
கேசத்தை அளிக்கிறது.




எங்கள் இதர தயாரிப்புகள்:
கேசவர்த்தினி ஷாம்பு
கேசவர்த்தினி
ரெடி மிக்சட் ஹேர் ஆயில்

வார்கள். தன்னைச் சுற்றி தெய்விகப் பிரபையைக் காண்பது அவர்களுக்கு இன்பமாக இருக்கலாம். ஆனால் எனக்கோ தலையைச் சுற்றியுள்ள பிரபையின் உஷ்ணம் எரிக்கத்தான் செய்யும். யாரும் அறியாமலே சித்தோர் சென்று ராணாஜியைச் சந்திக்க வேண்டும்' என்று தீர்மானித்துக் கொண்டாள் மீரா.

விந்தையிலும் விந்தையாக அவளைச் சித்தோரின் கிரிதா நாகரன் ஈர்க்கவில்லை. கும்பல்கர் என்ற கோட்டையிலுள்ள ராணாவின் மூத்த தாரமாகிய கும்பலா தேவியின் சிலையே அவளை ஆகர்ஷித்தது. கற்பரசியாகிய அவளை வணங்கி ஆசி பெற்றாலே, என்றும் பிரியாமல், என்றும் விரகதாபம் ஏற்படாமல், தான் கண்ணனை அடைய முடியும் என்று மீராவுக்குத் தோன்றியது.

துர்கா தேவி தனது சாமள வண்ணத்தையே குழைத்து வானுக்குப் பூசுகிறாளோ என்னுமாறு சாந்த இரவு பரவுகையில், 'யாரும் கவடுபடாமல்' மீரா கும்பல்கரை அடைந்தாள். கும்பலாதேவியின் திரு உருவத்தை அடிபணிந்துவிட்டு, கும்பஸ்வாமியாகிய கோபாலன் கோயிலை நோக்கி ஊர்ந்தாள். வழியில் இரண்டு பிரம்மாண்டமான தொட்டிகள். நெய்க்கிணறு (கேபாவுரி) என்றும் எண்ணெய்க் கிணறு (தேல் பாவுரி) என்றும் அவற்றுக்குப் பெயர். ஊதாவின் திருமணத்தின்போது இந்த இரண்டு தொட்டிகளிலும்தான் நெய்யும், எண்ணெயும் நிரப்பி இருந்தார்களாம். கடையில் ஊதாவோ இளமையிலேயே கைம்மை அடைந்து விட்டாள். ஊதாவை நினைந்து இந்நாள்வரை இல்லாத ஓர் இரக்கம் மீராவின் உள்ளத்தில் சுரந்தது. தொட்டியின் பக்கத்திலேயே சிந்தனைச் சுமையுடன் அமர்ந்தாள். 'ஆகா, இந்த மங்கல் வெளிச்சத்திலும் அதோ தொட்டிகளின் மறுவிளிம்பில் உட்கார்ந்திருக்கும் ஓர் உருவம் தெரிகிறதே... அது ... அது....இந்த நெஞ்சு ஏன் இப்படி அடித்துக் கொள்ள வேண்டும்? உடம்பு ஏன் இப்படி நடுங்குகிறது? கண்ணனையே சர்வ சகஜமாகக் கண்டு உரையாடும் எனக்கு அதோ கும்பராணாஜியைக் காணும்போது ஏன் இப்படி நிலைதடுமாற வேண்டும்? ஏன் இப்பேர்ப்பட்ட பீதி எனக்கு ஏற்படுகிறது?'

இனம் தெரியாத சோர்வும், சோகமுமே ஓர் உருவாகத் தொட்டி விளிம்பில் அமர்ந்து எட்ட உள்ள கும்பலா தேவியின் நினைவுச் சின்னத்தில் நினைவைப் பதித்திருந்தான் ராணா. அவனை ஏதோ பேராபத்துச் சூழ்ந்திருக்கிறது என்ற உள்ளுணர்ச்சி மீராவின் பிடரியைப் பிடித்து உந்தியது.

மீரா கும்பராணாவை நோக்கி வேகமாகச் சென்றாள்.

அவளைவிட வேகமாக ஒரு திருகு கத்தி ராணாவின் இதயத்தை நோக்கிப் பாய்ந்தது.

மார்பில் புதைந்த செருகு வாளுடன் மீராவின் மடியில் சாய்ந்தான் மகாராணா.

கண்ணீரின் ஆழமும் தொட முடியாத சோகத்தில் மீரா சிலையாகி விட்டாள். கும்பாஜியோ தன் கண்களையே நம்ப முடியாத இன்பத்துடன் அவளது திருமுகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

''மீரா தேவி, வரமாட்டேன் என்று போனவள் வந்துவிட்டாளா? தருணம் அறிந்து என்னைப் பரமபதத்துக்கு அனுப்பி வைக்கவே வந்தாயா? பிரேமை நதிக்கரையில் ஞான நடுநிசியில் வந்து நிற்பானே ஒருவன், அவனிடம் அனுப்பி வைக்கச் சரியாக வந்து விட்டாயே! எங்கே மீரா, அந்தப் பதாவளியைப் பாடு. உன்னுடைய தூய கானம்தான் இந்தப் பாவியின் ஆன்மாவை கோலோகத்துக்குத் தூக்கிச் செல்ல வேண்டும். பாட மாட்டாயா? நான் உன்னைப் பாடாகப் படுத்தினேனே என்று கோபமா? அதெல்லாம் கனவு மீரா. அப்புறம், நீ யார் என்ற ரகசியத்தையே — அது உனக்குக் கூடத் தெரியுமோ, தெரியாதோ — நான் தெரிந்து கொண்டு விட்டேன். இப்போது நீ என் மனைவியல்ல; மேவார் ராணியல்ல; நீ மீரா கூட அல்ல...''

இதயத்தில் புதைந்த கத்தி குருதியைத் தான் கசியச் செய்தது. ஆனால் ராணாவின் இதயத்தில் புகுந்த காமதேனுவின் தரிசனக் காட்சியோ அமுத சாகரத்தையே தன்னென அவன் மீது வாரிவிட்டது.

இக்கித் திணறி வார்த்தை வார்த்தையாக முணுமுணுத்த கும்பராணா எதையோ நினைத்துக்கொண்டான். மிகவும் சிரமத்துடன் தொடர்ந்தான்: ''உன் நாள் முடிந்து நீண்ட காலத்துக்குப் பின்னும் ரகசியமாக இருக்க வேண்டிய விஷயம் அது. ஆனால் என் காலத்திலேயே நான் பகிரங்கப்படுத்தியிருக்கவேண்டிய இன்னொரு ரகசியம் உண்டு மீரா. சித்தோர் ராஜ வாரிசாகப் பிறந்து சித்தோர் மன்னனாகவே சாகிற நான் ராஜ தர்மப்படி ஒரு காரியத்தைச் செய்யாமல் விட்டு விட்டேன். அதுதான் இந்த வாளை விட என்னை அறுக்கிறது. உன்னை நான் தெய்வமாகப் பாவிப்பதும், நீ கண்ணனோடு நேருக்கு நேர் நாயகியாய் இன்புறுவதை நான் ஒப்புவதும் வேறு விஷயம். ஆனால் இந்த மேவாரில் நீ பிரஜையாகவும், நான் மன்னனாகவும் இருந்தால் உன்னை நான் பார்க்க வேண்டிய விதமே வேறு. அதன்படி...... எவ்வளவுதான் நான் மனத்தைத் திடம் செய்து கொண்டாலும் என்னால் அதை வாய் விட்டுக் கூற முடியவில்லை. எங்கே மீரா, இப்படி உன் செவியை என் வாய்க்கருகே கொண்டு வா.''

மீராவின் காதோடு காதாக அவன் கூறிய விஷயம் அவளுடைய உடலைத் துகள் துகளாகச் சிதற அடிக்காதது அவளுக்கே அதிசயம்தான்! எவ்வாறோ மனத்தைப் பாறாங்கல்லாக்கிக் கொண்டு, ''பிரபு, தாங்கள் கூறியபடியே கிரிதரன் மேல் ஆணையாகச் செய்கிறேன். இன்னும் என்ன செய்யவேண்டும்?'' என்றாள்.

''பாடு மீரா, பாடு; முன்பு நீ பாட நான் வீணை வாசித்திருக்கிறேன். இன்று என்னையே உன் மடியில் வீணையாக வளர்த்திக் கொண்டிருக்கிறாய் அல்லவா? என் ஆன்மத் தந்திகளை மீட்டிப் பாடு'' என்றான்.

மீரா பாடினாள். இதுவரை அவளுடைய குரலிலேயே இருந்திராத தெய்விக மாதுரியம் இன்று சாரீரத்தில் செறிந்து விட்டது. தேவாமுதமே வாய் திறந்து கானம் செய்தது!

திரைகடல் ஆழமும் குகையின(து) ஆழமும்
நிறைந்தவன் மீரா நாதன்

ப்ரேமை நதிக் கரையில் ஞான நடுநிசியில்
ஸ்யாமளனும் வந்து நிற்பான்

கும்பல்கரைக் காவல் காக்கும் வீரர்கள் சங்கீதத்தைக் கேட்டு அதிசயித்து ஓடி வந்தனர். அங்கு கண்ட காட்சியில் அவர்களுடைய ரத்தமே உறைந்து விட்டது.

சித்தோருக்குள் சமாசாரம் பரவியதும் மேவார் ராஜ்ய தேவதையின் ரத்தமே உறைந்துவிட்டது. சௌபாக்கியதேவி பாக்கியசாலி! அவள் ஒரு விநாடிக்கு மேல் புத்திர சோகத்தில் தவிக்கவில்லை. விஷயம் கேட்ட இரண்டாம் விநாடியே அவளது இதயம் வெடித்தது!

ஊதா ஓடிவந்து அண்ணனின் சடலத்தின் மீது விழுந்து அலறினாள்.

“சண்டாளி, இப்படிச் செய்து விட்டாயே! இருட்டில் பதுங்கி இதற்காகத்தான் கோட்டைக்குள் வந்தாயா? வஞ்சம் தீர்த்துக் கொண்ட பெருமையில் இனி நீ சாகக்கூடத் தயார். அதுதான் ஆனந்தமாகக் கானம் செய்துவிட்டு அசையாமல் இருக்கிறாய்!”— மதனியை நோக்கிக் கத்தினாள் ஊதா.

கூடியிருந்த அனைவரும் அதிர்ந்து விட்டனர். மீரா மட்டும் ஆடவில்லை, அசையவில்லை. கும்பராணா அவள் காதோடு காதாகக் கூறிய விஷயத்தையே தாங்கிக் கொண்ட பின் இதற்கு அசைந்து கொடுப்பானேன்?

நாடறிய நகரறிய மீரா மீது கொலைக் குற்றம் சாட்டப்பட்டு அவள் சபையில் நின்றாள். மன்னன் போய்விட்டான். அடுத்த மன்னனாக யார் பட்டம் ஏற்பது என்பதையும் அவன் சொல்லிப் போகவில்லை. எப்படியாயினும் ராணாவும் நாடும் போற்றிய ராய்மல் — மீராவை நாடு கடத்து முன்பு நாட்டை விட்டுச் சென்றவன்—இன்னமும் இரும்பவில்லை. மூத்த இளவரசன் உதயனுக்கே பட்டம் கட்டலாம் எனில் அவனது இருப்பிடமும் தெரியவில்லை. மந்திரி பிரதானிகளும் ராஜகுருவும் அந்தரங்க ஆலோசனையாளருமே மன்னனிடத்தில் நிர்வாகம் ஏற்றிருந்தனர். அவர்கள் முன்னரே மீரா குற்றம் சாட்டப்பட்டு நின்றாள்.

அவள் மீது கொலைக் குற்றம் ஆரோபணம் செய்யப்பட வேண்டிய தருணத்தில் அதைத் தடுத்து மீராவே பேசினாள். வெட்டு ஒன்றும் துண்டு இரண்டுமாகத் தன்னிடம் துளிக்கூடத் தாட்சிண்யமின்றி மீரா பேசினாள்:

“ராவல்ஜியின் இறுதிக் கட்டளையைச் சொல்கிறேன். கொலைக் குற்ற விசாரணைக்கு முன்னதாக இன்னொரு குற்றத்தைப் பெரியோர்கள் விசாரிக்கக் கோருகிறேன். அது விபசாரக் குற்றம்...”

சபையோர் திக்பிரமித்தனர். மீராவோ நிச்சலமாக, அதே இரக்கமற்ற குரலில் தொடர்ந்தாள்:

“மாளவ சுல்தான் கில்ஜி இந்தச் சித்தோருக்குள் ஆண்டியாகப் பிரவேசித்து ஆலயத்துக்கு வந்து, கிரிதரனுக்காக என்னிடம் முத்து மாலை தந்த அதே இரவில் மகாராணா ஆலயத்துக்கு வந்தார். அப்போது என்னுடன் யாரோ ஆடவன் பேசிச் சிரிப்பதை அவர் கேட்டார். அவர் உள்ளே பிரவேசித்தவுடன் ஆளைக் காணவில்லை. ஆலயத்தின் பின் கதவு மட்டும் திறந்திருந்தது. நான் அந்த ஆடவனுக்காகப் பரிமாறியிருந்த தாலமும் அப்படியே இருந்தது. தரும நியாயப்படி இதை மகாராணா பகிரங்கமாக நீதி விசாரணை செய்ய விரும்பினாலும் ஏதோ ஒன்று அவரது மனத்தில் கட்டை போட்டது. ஆனால் அவர் உலகிலிருந்து மறையும்போது, தம் கடமையைப் பூர்த்தி செய்த திருப்தியை அவருக்கு நான் அளிக்க வேண்டும் என்று பணித்தார். அந்தக் கட்டளையையே இங்கு நான் இப்போது நிறைவேற்றுகிறேன். முதலில் விபசாரக் குற்றத்தை விசாரித்து விட்டு, பிறகு கொலைக் குற்றத்தை [விசாரியுங்கள்” என்றாள் மீரா.

மீராவின் தூய்மையும் பக்தியும் உலகறிந்தது. அதுவும் அவள் சித்தோர் மடுவில் மூழ்கி பிருந்தாவனத்தில் எழுந்த பின் ஒரு தெய்வமாகி விருந்தாள். ஊதாவின் வற்புறுத்தலுக்காகவே அவள்மீது கொலைக் குற்ற விசாரணை பகிரங்கமாக நடந்தது. இப்போது அவள் விபசாரக் குற்றத்தையும் சாட்டிக் கொண்டவுடன் முதலில் யாருக்கும் எதுவும் புரியவில்லை. ராணாவின் கட்டளையை அவளாகவே சொன்னதால் அவளைப் பரம நிர்மலமாகவே முதலில் சபை பார்த்தது.

எனினும் மனித மனத்தின் விசித்திரத்துக்கு யாருமே விலக்கில்லையே! சபையோருடைய உள்ளத்தின் ஒரு மூலையில் ‘ஒருவேளை மீரா மாய மந்திர சூனியக்காரிதானோ? செய்கிற பாபத்தையும் செய்து விட்டு, மந்திர சக்தியால் நம்மை மயக்குகிறாளோ?’ என்ற எண்ணமும் எழத்தான் செய்தது.

விசாரணை என்றால் எதை விசாரிப்பது? எப்போதோ நடந்து போன விஷயம். விஷயம் அறிந்தவர்கள் மீராவையும் ராணாவையும் தவிர யாருமில்லை. ராணா இன்றில்லை. மீரா சற்று முன் சொன்னதற்கதிகமாக எதுவும் சொல்லவில்லை. ஏன் சொல்லவில்லை? அன்று ராணாவிடம் அவள் கண்ணனே வந்ததாகச் சொன்னாள். அதை ராணா நம்பவில்லை. ராணா நம்பாத ஒன்றை இந்தச் சபையினர் நம்பினால் ராணா தவறு செய்ததாகவே ஆகிவிடும் அல்லவா? அந்த அவப் பெயர் மறைந்த மன்னனுக்கு வரக் கூடாது என்றே மீரா வாய் திறக்கவில்லை.

பயங்கர நிசப்தத்தில், மக்களின் மனத்தில் எழுந்த ஐயத்தின் நிழல் மீராவின் முன் பேயாக ஆர்த்தது.

மீரா மெல்ல விம்மினாள். விம்மல் அழுகையாயிற்று. அழுகை கதறலாயிற்று. ‘கற்பரசி கும்பலா தேவியைத் தரிசித்தேன்; விபசாரக் குற்றத்துடன் நிற்கிறேன். துரௌபதிக்குச் சபையில் மானம் காத்த துவாரகாபதியைத் தேடிப் புறப்பட்டேன்; சபையில் மானமிழந்து நிற்கிறேன்!

“கிரிதரா! கிரிதரா! தாங்கவே முடியவில்லையப்பனே! இந்தக் கிரியையும் நீதான் தரிக்க வேண்டும்” — ஹோவென்று அலறி விட்டாள் மீரா.

ஆனால் அவன் எதிரே மலை தாங்கிய கிரிதரன் நிற்கவில்லை. கோதண்டம் தாங்கிய ஸ்ரீராமனே நின்றான்.

''மீரா, இன்றுதான் எனக்கு நான் பிராயச் சித்தம் செய்து கொண்டேன். சீதாதேவி யாக வந்த உன்னை ஊருலகம் உத்தமியாக மதித்தபோதும் நான் ஒருவன் மட்டுமே உன் மீது பழி சுமத்தி உன்னைப் பூமி கொள்ளுமாறு செய்தேன். இன்று உலகெல்லாம் சந்தேகிக் கும்போது, நான் ஒருவன் மட்டுமே நிச்சய மாக உன்னைச் சந்தேகிக்கவில்லை. இது உனக்கு உறுதிதானே?'' என்றான்.

மீரா ஏதும் விடை சொல்லவில்லை. பரமனே ஒரு பிராயச்சித்தம் செய்துகொள்வ தெனில் அதற்காகத் தான் எவ்வளவு பரித விக்கவும் அவள் தயாராக இருந்தாள்.

ஸ்ரீராமனே தொடர்ந்து பேசினான்: ''நான் ஒருவன் மட்டும் என்றேன். ஆனால் நான்தான் இத்தனை உயிர்களும். எனவே அவர்களில் இழியவர்களில் இழியவன் மூலம் உன் உன்னத உத்தமத்தை நிலைநாட்டுவேன்'' என்று சொல்லி மறைந்தான்.

அடுத்த கணமே பாபக் குன்றான உதயன் சபா மண்டபத்தில் பிரவேசித்தான்.

இனி அவன்தான் மன்னன். வைதிக பட் டாபிஷேகத்துக்கு முன்பாகவே, அவசர காலத்தை உத்தேசித்துப் பிரதான மந்திரி தாரணகர் உதயனை நெருங்கி, அவனது இடை யில் ஈசன் தந்த வாளைச் சொருகி, மும்முறை நிலத்தைத் தொட்டு, ''ஹிந்துவா சூரஜ் மேவார் மகாராவல்ஜி உதயசிங்ஜி—ஜெய்'' என்று கோஷித்தார்.

மேவாரின் சாபத்திடு போன்ற உதயன் நீதி பீடம் ஏறியது மக்களுக்குக் கேலிக் கூத் தாகவே இருந்தது. அவர்கள் மீராபாயைக் குறித்து லவலேசமே ஐயுற்றனர். இந்தச் சண்டாளனோ அவளது புனிதத்தை அறியா மல் வாயில் வந்ததைப் பேசி, மிகவும் அவ மானகரமான தண்டனையை விதித்துவிடப் போகிறானே என்று அவையோர் கலங்கினர்.

ஆனால் மகாராணா உதயசிங்கிடம் இரண்டு குற்றச்சாட்டுகளும் கூறப்பட்டவுடன் அவன் தோற்றத்தில் கண்ட மாறுதல் உலகுக்கே அதிசயமாயிருந்தது. உருக்கமே உருவானாற் போல் அவன் எழுந்தான். நாத்தழுதழுக்கும் குரலில் கூறினான்.

''மீரா தேவி ஒருகாலும் விபசாரக் குற்றம் செய்ய முடியாது என்று என் அன்னை கும்பலா தேவியின் மீது சத்தியமிட்டுச் சாற்றுகிறேன். அவரிடம் துர்எண்ணத்துடன் செல்லும் படு பாதகனுக்கும்கூட அவர் அன்னையாகவே தரிசனம் தருவார்'' என்று விம்மலுக் இடையே கூறினான். ''லௌகிகமாக யதார்த்தத்தை வைத்து விசாரணை செய்ய வேண்டிய சமயத்தில் நான் மன உணர் வைக் கூறினால் ஒப்ப மாட்டீர்கள். ஆனால் இதோ அடித்துச் சொல்கிறேன். லௌகிக மாக, யதார்த்தமாக, பிரத்தியட்சமாக பாபாவியான நானே தேவி மீராஜியை என் தாயாகக் கண்டிருக்கிறேன். அதனால் அவர் மீதுள்ள குற்றச்சாட்டைச் சாட்சியுடனும், சட்டப்படியும் ரத்து செய்கிறேன்.

''இன்னொன்று கொலைக் குற்றம். அதுவும் அவர் செய்யவில்லை. இதற்கும் சாட்சி நான். சாட்சி மட்டுமல்ல. குற்றவாளியும் நானே தான். ஆம், மீராதேவியைத் திரும்பச் சித் தோருக்கு அழைத்து வரச் சொன்ன மகா ராணா எங்கே ராய்மல்லையும் வரவழைத்து விடுவாரோ என்று பயந்தேன். அவனில்லாத போதே தந்தையை ஒழித்துக்கட்டி விட்டு அரசப் பட்டம் பெற நானேதான் ராவல்ஜி யைக் கொலை செய்தேன்.''

''இப்படியெல்லாம் சொல்வதால் நான் இப்போது திருந்தி விட்டேன் என்று ஏமாற வேண்டாம். மீராஜியைக் குற்றவாளியாகக் கண்ட குமுறலில் ஏதோ உண்மைகள் பீறிக் கொண்டு வந்துவிட்டன. மற்றபடி நான் அயோக்கிய உதயனாகவேதான் இருப்பேன். சித்தி இங்கே உள்ளவரை எனக்குப் பெரிய தடங்கல்தான். ஆனால் அவர் நமது சம்பிர தாயப்படி, கணவனை இழந்ததால் தீப்புகுந்து விடுவார் என்று நம்புகிறேன்'' என்றான்— அவளைக் குற்றவாளி என்ற அபவாதம் தீண் டாமல் காத்த அதே உதயன்.

மீராவால் அதை ஏற்கமுடியவில்லை. கண் ணன்தான் அவள் கணவன். ஒரு நாள் கூட ராணாவுடன் மனைவியாக இராமல் இப் போது மட்டும் தீக்குளிப்பது தருமத்துக்கு விரோதம் என்றே கருதினாள். சத்தியத்துக்கு மாறாகச் செல்ல முடியாதவள் அல்லவா மீரா? நித்த மணாளனை மணந்த தன் நித்திய சௌமங்கலியத்தைப் பாடினாள்.

மீரா ஆழ்ந்தாள் ஹரிநிறத்தில்
ஏறுதினி இவ்வுலக நிறம்
குருவடிவாய் வந்து பெருமான் அருளிய
அருண திலகமும் ஜபமாலையும்
மங்காச் சீலமும் திவ்விய விரதமும்
சிங்காரமாயெனைக் காக்குது
வாணாள் முழுதும் கிரிதரனை மணந்து
ராணாவை இன்றெண்ணுவளோ?
உடல் மறைந்தாலும் என்ன மறவாளிருக்க
உடன் கட்டை ஏறுவளோ?

தீக்குளிக்காவிடினும் உதயனுக்கு இடை யூறாக இராமல் மேவாரை விட்டுப் புறப்பட்டு விட்டாள் மீரா — துவாரகைக்குத்தான்.

## அத்தியாயம் 32

# ஜோதியில் கலந்த ஜோதி

மீரா விரைவில் துவாரகை செல்ல முடிய வில்லை. தெய்வப் பிறவியாக அவளைக் காணத் தொடங்கிய மக்கள் அவள் எங்கு சென்றாலும் தொடர்ந்து சென்று தங்களுடனேயே அவளை இருத்திக் கொண்டனர். ஊர் ஊராக அவளை வரவேற்று உபசரித்து வணங்கினர். மெல்ல மெல்லப் பலப்பல ஆண்டுகளுக்குப் பின் மீரா துவாரகையை அடைந்தாள்.

பொங்கி வரும் உணர்ச்சியுடன் துவாரகா நாதனின் ஆலயத்துக்குப் புறப்பட்டாள் மீரா. துவாரம் என்றால் வாயில். பாரதத்தின் மேற்கு வாயிலானதால் துவாரகை அப்பெயர் பெற்றது. தனக்கோ அமரசாம்ராஜ்யத்துக்கான கதவே அங்குதான் திறக்கப் போகிறது என்று மீரா உணர்ந்தாள். துவாரகை ஆலயக் கதவு மூடிக் கொண்டதாக அவள் அறிந்திருந்தாள். அதைத் திறந்து அதோடு தன் நித்திய மணவறையையும் பகவான் திறக்கப் போகிறான் என மீரா நம்பினாள். பாரத யுத்தத்தை முடித்துவிட்டு எம்பிரான் சாந்தமாக துவாரகையில் எழுந்தருளியிருந்ததால் ரணசோட் நாதன் எனப் பெயர் பெற்றிருந்தான். தனது வாழ்க்கை யுத்தம் முடிந்து சாசுவத சாந்தம் கிடைக்கப் போவதும் அங்குதான் என்று மீராவின் ஆன்மா ஆனந்த நிர்த்தமிட்டது. நித்திய கலியாணத்துக்கு மீரா அலங்கரித்துக் கொண்டு புறப்பட்டாள். கலியாணப் பெண்ணின் அலங்காரத்தைக் கேட்டால் நமக்குத் தூக்கி வாரிப் போடும்.

கூந்தலினை மழித்துச் சாந்த வெண்ணீறணிந்து
எந்தலைத் தேடிச் செல்வேன்

துவராடை புனைந்து துவராபதி சென்று
அவரோ(டு) அடைவுறுவேன்

நூறுயிரம் யுகம் மீராவின் ஜீவனை
மாறு(து) அடிமை கொண்டான்

என்று பாடிக் கொண்டு மீரா ஆலயத்துக்குப் புறப்பட்டாள். யாரோ அவள் காலடியில் ஒரு குழந்தையை நெடுஞ்சாண் கிடையாகக் கிடத்தினார்கள்.

யாரோ இல்லை. ராய்மல்தான்.

ராய்மல்லின் முக ஜாடையாகவேயிருந்த குழந்தையை வாரி எடுத்துக் கொண்ட மீரா, தன் அன்புப் பிள்ளையைப் பார்த்தாள். மேவார் மகாராணாவுக்கே உரிய விரவடத்தை ராய்மல் அணிந்திருப்பதைக் கண்டு அவளது கண்கள் விரிந்தன.

''சித்தி, சித்தோரில் எத்தனையோ உற்பாதங்கள் நிகழ்ந்து விட்டன. அப்பாவைக் கொன்ற உதயனின் ஆட்சியை மக்கள் சற்றும் விரும்பவில்லை. 'ஹதியாரோ' (கொலைகாரன்) என்றே அவனைப் பகிரங்கமாக நாடு அழைத்தது. சேனையிலும், மந்திரி சபையிலும்கூட அவனுக்கு ஆதரவு இல்லை. அவனோ அன்பின் வழியில் இணக்கத்தைப் பெற முயலாமல் வன்முறையை நாடினான். பேராசை பிடித்த ஒரு சில ஜாகீர்தார்களுக்கு மேவாரின் பகுதிகளைத் துண்டாடித் தந்து அவர்களுடைய படைபலத்தையும் பெற்றுத் தன் மக்கள் மீதே ஏவினான். இதெல்லாம் போதாதென்று 'சுத்த ரத்தக்காரர்கள்' என்று பெயர் எடுத்த நம் பெருமையைக் குலைப்பது போல், தில்லி பாதுஷாவுக்குத் தன் மகளை மணம் முடித்து அவனது உதவியை ஏற் பெற்று ஊரை அடக்க நினைத்தான். அவன் தில்லி சென்றிருக்கையில் உதயா அத்தை ஆட்களை அனுப்பி என்னைக் கண்டு பிடித்துச் சித்தோருக்கு வரவழைத்தார்.

'' 'ராஜஸ்தானத்திடம் உனக்குச் சிறிதேனும் அன்பு இருக்குமாயின் சொந்தப் பாசங்களைப் பாராமல் இனி நீயே ராஜ்ய பாரம் ஏற்க வேண்டும். தில்லியிலிருந்து திரும்பவும் உதயனை உள்ளே விடாமல் தடுக்க வேண்டும்' என்றார் அத்தை.

'' 'அன்று ஒரு முகமதியன் மாறுவேஷத்தில் மதனியின் ஆலயத்துக்கு வந்ததற்காக அந்தப் பாடுபடுத்தினேன். இன்று சித்தோர் அரசனே முகமதிய மன்னனுக்குப் பெண் கொடுக்கப் போவதை என்னால் தாள முடியவில்லை. காகா சண்டஜியைப் போல் பிரயோபவேசமிருந்து இம்மி இம்மியாக உயிர்விட எனக்குச் சக்தியில்லை..... ஆனால்.....' என்று கூறிய அத்தை, குதிரை மீதேறி அதிவேகமாக வெளிச் சென்றார். நாங்களும் தொடர்ந்தோம். ஆனால் அவரைப் பிடிக்க முடியவில்லை. அவர் ராம பாணம் போல் விறுவிறு வென்று கீர்த்தி ஸ்தம்பத்தின் உச்சிக்கு ஏறினார். 'சித்தோரின் கீர்த்தி என்றும் நிலைக்க, தேவி துர்கே, அருள் புரி' என்று கூறியபடி அந்த உச்சியிலிருந்து குதித்து அம்பிகையிடம் சென்று விட்டார். அதே சமயத்தில் தில்லி பாதுஷாவிடம் திருமணம் நிச்சயம் செய்து கொண்டு திவானிலிருந்து வெளிவந்த உதயன் தலை மீதும் இடி விழுந்தது....''

ராய்மல்லுக்குத் தொண்டை அடைத்தது.

மீராவுக்கோ எல்லாவற்றிலும் கோபாலனின் விளையாட்டுக் கரங்கள் தெரிந்தன.

''சித்தி, சித்தோருக்கு வந்து அதற்கு மீண்டும் உயிர்க்களை ஊட்டு. நீ சித்தோரிலிருந்து வெளியேறியதனாலேயே போரும், குழப்பமும், போதாக் குறைக்குப் பஞ்சமும் மேவாரை வதைக்கின்றன. அப்படித்தான் மக்கள் கருதுகிறார்கள். உன்னைக் கையோடு அழைத்து வரச் சொல்லியே என்னை அனுப்பியிருக்கிறார்கள்'' என்று பவ்வியமாகக் கூறி ஆவலுடன் சிற்றன்னை முகத்தைப் பார்த்தான் ராய்மல்.

எதிலும் ஒட்டாத ஒரு சிரிப்பு மீராவின் முகத்தை அழகு செய்தது.

''அப்பனே, நீ என்னைச் சித்தோருக்கு அழைத்துச் செல்கிறாய் என்றே வைத்துக் கொள். நான் எவ்வளவு காலம் உயிர் வாழ்வேனோ ? நான் போனபின் மீண்டும் சித்தோருக்கு அமங்கலம் உண்டாகிவிடுமா? ராய்மல், நிலையற்ற என்னையோ, வேறு மனிதரையோ நம்பாதே. சாசுவதமான வஸ்துதான் சாசுவத சுகம் தர முடியும். மக்களின் துயர் துடைக்க ஆண்டவனையே பிடி. உனக்காக நானும் அவனைப் பிரார்த்திக்கிறேன்'' என்று கூறிய மீரா, பிரசித்தி பெற்ற பாடலைப் பாடினாள்:

ஹரி, மக்கள் துயர் அபஹரி

துரௌபதை தன் மானம் காத்துத்
துகில் அளித்த தேவே

அருமை செய்த சிறுவர்க்காகப்
பொறுமை நீ இழந்தாய்
அரிமுகனிலைத் தரித்து வந்து
இரணியன் அகம் பிளந்தாய்

கடுநீர் மூழ்கும் ராஜகஜத்தை
மடுவின் மேல் சேர்த்தாய்
அடிமை மீரா: அல்லல் விடுவாய்
அல்லல் எனக்கோ அங்(கு) ஏனோ

மீராவை வணங்கி எழுந்த ராய்மல் குழந்தையை மீண்டும் அவள் காலடியில் கிடத்தினான். அதனை முத்தமிட்டாள் மீரா.

"இவன் ஜானிராணியிடம் எனக்குப் பிறந்தவன். இவனுக்கு ஆசி கூறு. அதோடு உன் வாயால் பெயரிடு" என்றான்.

"குழந்தையே தெய்வம். ஆசி கூற நான் யார்? உன் திருப்திக்காகச் செய்கிறேன். சங்கிராம சிம்மன் என்று நாமகரணம் செய்" என்றாள் மீரா.

ராய்மல் வியப்புடன், 'சித்தி, நீயா இப்படிப் பெயரிடுகிறாய்? சங்கிராம சிம்மன் என்றால் 'யுத்தத்தில் சிங்கம்' என்றல்லவா பொருள்? நீ சாந்தமாக ஏதேனும் பெயர் வைத்து மேவாரில் சாந்தம் காமச்செய்வாய் என்றல்லவா நினைத்தேன்?" என்றான்.

மீரா ஸ்பஷ்டமாகப் பேசினாள்: "ராய்மல், ஆதரிசக் கனவுகளும், லட்சியங்களும் நடைமுறை உலகாக முடியாது. நன்மைபோலவே தீமையும் பகவான் படைப்பு. இரண்டும் கலந்துதான் உலகில் இருக்கும். அவ்வாறே இனிமை, கொடுமை இரண்டும். ராஜ நீதியில் இவ்விரண்டும் கலந்துதான் இருக்கும். உன் பிள்ளை சங்கிராம சிம்மனாக இருக்க வேண்டிய அவசியத்தை உணர்ந்தே அப்படிப் பெயர் வைத்தேன்" என்றாள்.

வருங் காலத்தில் ராஜஸ்தானத்தின் சிரோமணிகளில் ஒன்றாக விளங்கப் போகும் சங்கிராம சிம்மனைத் தூக்கிக் கொண்டு ராய்மல் அகன்றான்.

மீரா ரணசோட்நாதனின் ஆலயவாசலில் வந்து நின்றாள். மூடிய இருக்கதவமும் திறந்து கொண்டது.

ரணசோட்நாதன் விக்கிரகத்தில் கண்ணனே வந்து நின்றான் ஒரு விநாடி. உடனே வழக்கம் போல் அவன் மறையத் தொடங்கினான். தம்புராவையும் கரதாளத்தையும் நழுவ விட்டு, காற்சதங்கைகளும் கழன்று விழ, ஓடிச் சென்று அவன் கால்களை இறுகப் பிடித்துக் கொண்டு கதறிவிட்டாள் – இனிப் பொறுக்க முடியா நிலையடைந்த மீரா.

**மறையாதே மறைவனே**
**பிரியாதே பிரிவறுநீயே**
**ஏகாதே யோகீசா**
**மாகாம் உருகி உன் பதம் பிடித்தேன்**

**பத்திக் காதலின் பாட்டையோ புதிர்;**
**மத்தி வழியில் விட்டு மாயமாகவே (மறையாதே)**

**வாதை போதும்; இனி வாடச் சக்தியில்லை**
**சிதைக்க எண்ணினும் சித்ரவதை வேண்டாம்;**
**உன் தளிர்க் கரத்தால் சந்தனம் அடுக்கி**
**நொந்தவள் எனக்குச் சிதையினை மூட்டுவாய்**

**சாம்பலாகி நான் வெந்து வீழ்ந்தபின்**
**ஆம்பல் மேனியில் ஆரப் பூகவாய்**

**நாதியற்ற மீரா நாதன் கிரிதரா!**
**சோதியில் சோதியை முழுகுவிப்பாய்!**

மீராவின் விருப்பத்தை நிறைவேற்றுவதும் நிறைவேற்றுததும் இனி கண்ணன் வசமில்லை. மீராவின் தாபமே அவளை ஜோதியாகச் சூழ்ந்து கொண்டது. ஜோதியும் ஜோதியும் இரண்டறக் கலந்து விட்டன.

**'விந்தகன் வேங்கடவாணனென்னும்**
**விளக்கினிற்புகவென்னை விதிக்கிற்றியே'**

என்று கோதை பாடினாள். கண்ணன் ஜோதி விளக்காகவே வந்து மீராச் சுடரைத் தன்னில் கலந்து கொண்டான். தம்புராவும் சலங்கையும் கரதாளமும் அந்த ஒளியில் ஒன்று சேர்ந்தன.

இரண்டறக் கலந்த ஜோதிகள் அன்பு வழியின் மதுரத்தை அநுபவிப்பதற்காகக் கண்ணன் ராதை என்ற இரண்டாகி கோலோகத்தில் அமர்ந்திருந்தன. கண்ணனின் பக்கலில் மதுமங்களனும், ராதையின் பக்கலில் லலிதையும் பாங்காக நின்றனர்.

மீராவுக்குக் கண்ணன் திருமணப் பரிசாக அளித்த சலங்கைகளில் ஒன்று கண்ணனின் இடது காலிலும், மற்றது ராதிகாவின் வலது காலிலும் குலுங்கியது. அம்பிகையும் ஈசுவரனும் சேர்ந்து ஒரே இசை வீணையைத் தாங்கி இசைத்திருப்பது போல், கண்ணனும் ஸ்ரீமதியும் லயச் சிலம்பினால் லயித்திருந்தனர்.

நாரதரும், சுகரும், ஆழ்வாராதிகளும், ஜயதேவரும், மற்ற அடியார்களும் அங்கு குழுமியிருந்தனர். யாரோ ஒரு பக்தருக்காக அவர்கள் அனைவரும் வழிவிட்டனர்.

வழி விட்டும் முன்னே வராமல் ஒதுங்கி நின்றார் அந்தப் பக்தர். அவர் வேறு யாருமில்லை – கும்பராணாதான்.

எட்ட நின்றே ராதாகிருஷ்ணனை, மீரா கிருஷ்ணனை பாங்கே விஹாரியாகக் கண்டு பாடினான் ராணா.

**அதர மதனில் குழல்**
**அதனுள் அமுதக் கழல்**
**நானிலம் செழிக்கத் தேனிசை வடி**
**மகிழ்வித்துக் கொள்வான் தன்னை**
**மகிழ்வாள் அதனில் நப்பின்னை**

கோலோகலத்தின் அதிசுகந்தமான காற்றிலே குழலிசை வந்தது. அதில் மாதவன் மகிழ்ந்தான். நப்பின்னைப் பிராட்டியாகிய ராதாதேவியும் மகிழ்ந்தாள். அடியார் திருக்கூட்டமும் மகிழ்ந்தது.

அண்டபகிரண்டம் யாவும் மகிழ்ந்தன.

அது அன்று கோலோகத்துக் காற்றில் வந்த கீதம் மட்டுமல்ல. அகச் செவி திறந்தவர்களுக்கு இன்றும் மூச்சுக் காற்றினிலே இழைந்து வரும் கீதம் அது!

முற்றும்

## எல்லாமே கருகிச் சாம்பலாகிவிட்டது

கவனக் குறைவால், அணைக்கப்படாமல் தூக்கி எறியப்பட்ட ஒரு சிகரெட் துண்டு அனைத்தையும் நாசமாக்கி விட்டது. வருடக் கணக்காகக் கட்டிக் காத்து வளர்க்கப்பட்ட வாணிகம் சாம்பலாகக் காட்சியளிக்கிறது.

உங்களுக்கும் இதுபோன்ற நிலை ஏற்படலாம். இத்தகைய இடர் மற்றும் இன்னல்களினின்றும் உங்களை நீங்கள் காத்துக்கொள்ள முடியும். எல்.ஐ.சி., நெருப்பினால் ஏற்படும் இழப்பிற்குப் போதுமான ஈடுசெய்து பாதுகாப்பளிக்கிறது. விபத்து, கப்பல் மற்றும் மோட்டார் விபத்து ஆகியவற்றிற்கும் இன்சூரன்சு வசதி கிடைக்கிறது.

## எல்லா வகையான இன்சூரன்சுகளுக்கும் எல்.ஐ.சி.



# சொர்க்கத்தை நோக்கி

டி. எஸ். கோதண்டராமன்

சாயங்காலம் ஆறு மணி. திண்ணையில் உட்கார்ந்திருந்தேன். அதைத் தவிர வேறு எதைத்தான் என்னால் செய்ய முடியும்? அறுபத்திரண்டு வயதில் இவ்வளவு திடமாகவாவது இருக்கிறேனே. என் தம்பி சுப்புணி இருக்கிறானே — என்னைவிட மூன்று வயது சின்னவன் — எலும்பும் தோலுமாய் இருக்கிறான். நடையெல்லாம் வீட்டுக்குள்தான்.

நான் முப்பத்தைந்து வருஷங்கள் கம்பெனியில் வேலை பார்த்திருக்கிறேன். வேலை என்றால், இந்தக் காலத்துப் பையன்கள் மாதிரி ஐந்து அடித்ததும் டிராயரை இழுத்துப் பூட்டிக் கொண்டு வெளியே வந்துவிட முடியாது. 'நாளைக்கு' என்று வேலையை மீதம் வைத்தது கிடையாது. அப்படி உழைத்ததற்குப் பலனும் கிடைத்தது. அப்போது. இப்போதும் என் சொல்லுக்கு மதிப்பிருக்கிறது. நான் பெருமைக்காகச் சொல்லவில்லை. சேதுராமன் இருக்கிறானே....

"சார், நமஸ்காரம் பண்ணுகிறேன்..."

"யாரது? கமலாவா?"

"வாம்மா, என்னத்துக்குத் திடீரென்று நமஸ்காரம்?"

"இன்றைக்கு என்ன தேதி?"

"தேதிமாதமெல்லாம் மறந்து போய் ரொம்ப நாளாகிறது!"

"இன்று, முதல் தேதி. முதல் சம்பளம் வாங்கினேன். வீட்டுக்குக்கூடப் போகவில்லை. உங்களைப் பார்த்துவிட்டுப் போக வேண்டுமென்று நேரே இங்கு வந்தேன்" என்று என் எதிரில் ஒரு பையை வைத்தாள்.

"என்னம்மா, இது?"

"பழம், சார். சம்பளம் வாங்கியதும் முதலில் உங்கள் நினைவுதான் வந்தது. உங்கள் சிபாரிசு இல்லா விட்டால் எனக்கு இந்த வேலை கிடைத்திருக்குமா?.."

என் நெஞ்சு நெகிழ்ந்து விட்டது. பாருங்களேன், ஒரு சின்னப் பெண்ணுக்கு இருக்கும் மனப் பக்குவத்தை? ஓர் ஆண்பிள்ளையாக இருந்தால் இம்மாதிரி சொல்லத் தோன்றுமா? நன்றி விசுவாசம் இருக்குமா?...

என்ன சொல்லிக் கொண்டிருந்தேன்? ஆமாம், 'சேதுராமன் இருக்கிறானே' — அவன் பிள்ளை ஒரு எம். ஏ. ஒரு குமாஸ்தாவாக இருந்தான், மாதம் இருநூறு ரூபாய் சம்பளத்தில். கேள்விப்பட்டதும் எனக்குப் பொறுக்க வில்லை.



'போடா, அப்ளிகேஷனை' என்றேன். முகுந்தா கார்ப்பொரேஷனில் இழுத்து விட்டேன். நானூறு ரூபாய் சம்பளம். எல்லாக் காரியமும் இந்தத் திண்ணையில் இருந்தபடியே தான்! ஆனால், அந்தப் பயல், அதற்குப்பின் என்னைத் திரும்பிப் பார்க்க வேண்டுமே? ஒரு கார்டு எழுத வேண்டுமே? ஊஹூம்.....

இப்போது வந்துவிட்டுப் போனாளே அந்தக் குட்டி கமலாவைச் சொல்கிறேன். ஏழெட்டு வீடுகள் தள்ளிக் குடியிருக்கிறாள். அடக்கமான குடும்பம். தகப்பனாருக்கு, மளிகைக் கடையில் கணக்கு எழுதுகிற வேலை. ஆண்டவன் புண்ணியத்தில், இரண்டே குழந்தைகள் — கமலாவும் அவளுடைய அக்காவும். அக்கா பெயர் சீதா. என்ன காரணத்தாலோ, அவள் நாலாம் படிவத்துக்கு மேல் படிக்க வில்லை. வீட்டில் ஒத்தாசைக்காக இருந்து விட்டாள் போலிருக்கிறது.

ஆறுமாதங்கள் முன்பு 'போக்'கென்று போய் விட்டார் மனுஷர் — கமலாவின் தகப்பனார். ஒருவரிடமும் ஒரு வார்த்தையும் பேசவில்லை. கடைக்குப் போகப் புறப்பட்டவர், திடீரென்று அயர்வு உண்டாகவே, நாற்காலியில் உட்கார்ந்தார். உடம்பில் என்னவோ செய்ததாம். அவர் மனைவி, "என்னன்னு?" என்று கேட்டு முடிவதற்குள்ளாகவே தலைசாய்ந்து விட்டது.

வயிற்றெரிச்சல் போங்கள். குடும்பம் நிர்க்கதியாகி விட்டது. கையில் பணமில்லை என்றால் உறவாவது, ஒட்டுதலாவது? அந்த அம்மாளின் அண்ணன் ஒருவன் பம்பாயில் நல்ல ஸ்திதியில் இருக்கிறானாம். கடனே என்று துக்கம் விசாரிக்க வந்து விட்டுப் போனான். 'இனிமேல் சாப்பாட்டுக்கு என்ன செய்யப் போகிறாய்?' என்று ஒப்புக்காகக்கூடக் கேட்கவில்லை. அவன் என்ன தனிக் கட்டையா? பதினெட்டும் பதினாறுமாய் இரு பெண்கள். வளர்த்துக் கலியாணம் செய்து கொடுத்தாக வேண்டுமே?

நல்ல காலமாக, பள்ளிக்கூடத்தில் கடைசி வகுப்பில் படித்துக் கொண்டிருந்தாள் கமலா, அப்போது. எப்போதாவது என் வீட்டுக்கு வருகிறவள் அவள். அப்பாவின் காரியம் ஆனபின், ஒரு மாதம் போல் ஆனபின், என் வீட்டுக்கு வந்தாள். 'பயப்

படாதே' என்றேன். 'பரீட்சை எழுதிவிட்டேன் என்று வந்து சொல்லு. உடனே, உனக்கு வேலை' என்று தைரியம் சொன்னேன். அப்போது அவளுக்கு வெறும் தைரிய மூட்டும் சொற்களாகத்தான் இருந்திருக்கும். ஆனால், சொன்னபடி நான் செய்தபோது அவள் திகைத்து விட்டாள்! மாதம் நூற்றிப் பத்து ரூபாய் சம்பளம். போதாதா என்ன?

நான் திண்ணையில் உட்கார்ந்திருக்கிறேன். சீதா உள்ளே போகிறாள். 'அவ'ளுடன் ஏதாவது அரட்டை அடிப்பாள். கைக் காரியத்தைப் பிடுங்கித் தானே செய்வாள். 'சீதா காப்பி போட்டாலே மணக்கிறது' என்கிறாள் அவள். குஞ்சுவுக்குத் தள்ள வில்லை. 'ஐந்து' பெற்ற சரீரம். மூன்று பெண்கள். இரண்டு பயல்கள். ஒருவன், பாங்க் அக்கௌண்டன்ட். இன்னொருவன், காலேஜ் லெக்சரர். அவனை 'வேறே உத்தியோகத்துக்குப் போயேண்டா' என்றேன். மாட்டானாம். லெக்சரர் வேலைதான் பார்ப்பானாம். வருஷத்துக்கு ஒரு தடவை எங்கோ வடக்கே போகிறான். பரீட்சையாம். அதென்ன படிப்போ, அதென்ன பட்டமோ? அந்தக் காலத்தில் நாங்களெல்லாம் எந்தப் பட்டத்தைக் கண்டோம்? வேலை பார்க்கவில்லை? ஆயிரம் பேர் என் கீழ் வேலை பார்த்தார்கள். வெள்ளைக்காரத் துரை, 'கோபாலனைக் கூப்பிடு' என்பான். பஞ்ச கச்சமும் டர்பனுமாய் நான் போய் நிற்பேன். நாற்காலியில் உட்காரச் சொல்லித்தான் பேசுவான்.

உள்ளே கலகலவென்று சிரிப்புச் சத்தம் கேட்கிறது. சீதா வந்தாலே இப்படித்தான். சிரிப்பும் கும்மாளமும்தான். தன் வயதொத்த பெண்ணா, குஞ்சு? இந்தக் கிழத்தின் தொணதொணப்புக்கு ஈடு கொடுத்துக் கொண்டு, அவளையே எப்படித்தான் சிரிக்க வைக்கிறாளோ?

சீதா ரொம்பவும் சாமர்த்தியக்காரி. முகத்தில் ஒரு களை. கண்ணுள்ள ஆண் பிள்ளை எவனும் கொத்திக் கொண்டு போய் விடுவான். அப்படி ஒரு வசீகரம். அப்படி ஒரு குணம். சொந்த வீட்டில் செய்கிற மாதிரியே, கவனத்துடன் இங்கேயும் காரியம் செய்கிறாள். இத்தனைக்கும், ஒரு பொருளுக்கு ஆசைப்பட வேண்டுமே? ஒரு வாய் காப்பி சாப்பிட வேண்டுமே? மாட்டாள்.

சீதாவோ, சில சமயங்களில் கமலாவோ வந்தால்தான் குஞ்சுவுக்குப் பொழுது போகிறது. இவர்களை விட்டால் வேறு யார், வேலை மெனக்கெட்டு, குஞ்சுவிடம் வந்து பேசப் போகிறார்கள்? அத்துடன், மனமும் ஒட்டிக் கொண்டு விட்டது. ஒவ்வொரு தடவையும் 'இது'கள் வீட்டுக்குப் புறப்படும்போது, 'ஏண்டி, அதுக்குள்ளே?' என்று குஞ்சு கேட்காமல் இருந்தது இல்லை!

என்னய்யா, தபால்காரரே, கடிதாசா?

அட, வெங்கிட்டு எழுதியிருக்கிறான்! '....எனக்கு மாற்றல் உத்தரவு வந்திருக்கிறது. நீங்கள் இருக்கும் ஊருக்கே வரப் போகிறேன். இன்னும் ஒரு வாரத்தில் 'ரிலீவ்' செய்து விடுவார்கள். அம்மாவிடம் சொல்லவும்.....'

இனிமேல் குஞ்சுவுக்கு நல்ல வேலைதான். ஒன்பது மணிக்குச் சாப்பாடு போட்டாக வேண்டும். பத்து மணிக்கு பாங்கி இல்லையா?

வெங்கிட்டு வந்து இரண்டு மாதம்கூட ஆகவில்லை, தம்பு, பெட்டியும் படுக்கையுமாக வந்து நிற்கிறான் ஒரு நாள். 'என்னடா?' என்றேன்.

''உள்ளூர்க் கல்லூரியில் வேலை கிடைத்து விட்டது!'' என்றான்.

''பழைய வேலையை ராஜிநாமா பண்ணி விட்டாயா ?''

''ஆமாம்.''

''இங்கே என்ன வேலை?''

''அதே வேலைதான்.... லெக்சரர்.''



இதற்குள் குஞ்சு பார்த்துவிட்டாள், அவனை. ''வாடா. எப்போ வந்தே? என்ன, திடீர்னு ஒரு கடிதமும் இல்லாமல்...?''

உள்ளே போனான். சட்டையைக் கூடக் கழற்றாமல் பத்து நிமிஷங்கள் அம்மாவிடம் பேசினான், பேசினான் — அப்படிப் பேசினான்! அது என்ன பேச்சோ! என்னதான் சேதி இருக்குமோ!.... ராத்திரி ஆகாரம் பண்ண உட்கார்ந்ததும் குஞ்சு சொல்லுவாள், அவன் விவகாரங்களை. ஆகாரத்தோடு அதையும் நான் ஜீரணித்துக் கொள்ளணும்.

குஞ்சுவுக்குத்தான் சிரமம். இந்தத் தடியன்களுக்கு, வேளாவேளைக்குச் சாப்பாடு போட்டு, காப்பி டிபன் கொடுத்து.... போதும், போதும். 'ஒரு வேலைக்காரியை வைத்துக் கொள்ளேன்' என்றேன். ''என்னத்துக்கு?'' என்கிறாள். 'அக்கம்பக்கத்தில் உன்னைத்தான் திட்டுவார்கள். மகா கருமி மகா கருமி என்பார்கள்.'

''சொல்லட்டும். என் பிள்ளைகளுக்கு நான் செய்கிறேன். அவனவனுக்குக் கல்யாணமாகிற வரையில்தானே?''

நான் வாயை மூடிக் கொண்டு விட்டேன். ஆனால் பாருங்கள், அதிக நாட்கள் மூடிக் கொண்டிருக்க முடியவில்லை. யாரோ, தெருவோடு போகிறவர்கள் எங்கள் வீட்டுத் திண்ணைக்கு எதிரே நின்று எதையோ பேசி என் மனத்தை உசுப்பி விட்டுவிட்டார்கள். யாரோ பணக்கார வீட்டுப்பிள்ளை, தங்கைக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கத் தினமும் வீட்டுக்கு வந்து கொண்டிருந்த இளம் ஆசிரியையைத் தான் மணம் செய்து கொள்வேன் என்று ஒற்றைக் காலில் நிற்கிறானாம்!

இது, என் வீட்டிலும் நிகழாது என்பது என்ன நிச்சயம்? கமலாவும் சீதாவும் வீட்டை வளைய வளைய வருகிறார்கள். வீட்டில் இரண்டு பையன்கள். இனி மேல்தான் கல்யாணம் கார்த்தி எல்லாம். கல்யாணப் பேச்சு என்று ஆரம்பிக்கும் போது, 'நான் சீதாவைத்தான் மணந்து கொள்வேன்' என்று அடம் பிடித்தால் என்ன செய்வது? சம அந்தஸ்து வேண்டாமா? வெறுமே பழகுவது என்பது வேறு; நாட்டுப் பெண்ணாக்கிக் கொள்வது என்பது வேறு. வெங்கிட்டுவுக்கு ஆகட்டும், தம்புவுக்கு ஆகட்டும், பெரிய இடத்துப் பெண்களா கிடைக்க மாட்டார்கள்? மேற்கொண்டு ஏதாவது நடவடிக்கை எடுத்தாக வேண்டும் என்ற தீர்மானத்துடன் குஞ்சுவிடம் சொன்னேன்.

''நீங்கள் சொன்னப்புறம்தான் எனக்கும் படுகிறது. வீட்டுக்கு வராதீர்கள் என்று அந்தப் பெண்களிடம் எப்படிச் சொல்கிறது? இருக்கட்டும். பார்க்கிறேன்.''

குஞ்சுவின் காதுகளில் அந்த விஷயத்தைப் போட்டவுடன் என் பொறுப்பு நீங்கி விட்டது. இனி அவள் பாடு.

வழக்கம் போல் திண்ணையில் உட்கார்ந்திருந்தேன். ''சௌக்கியமா, ஸார்?'' என்ற

---

## அந்தச் சிறுமி இவரேதான்!

''எங்களுக்குத் தெரியவில்லை! நீங்களே சொல்லி விடுங்கள்!'' என்று எண்ணியபடி தானே இந்தப் பக்கத்துக்கு வந்திருக்கிறீர்கள்? நாங்களும் அதையேதான் திரு டி. கே. சண்முகத்திடம் கூறினோம்.

''இன்று பிரபல டைரக்டராக உள்ள ஏ. பி. நாகராஜனே அந்தச் சிறுமி. எங்கள் குழுவில் அந்தக் காலத்தில் பெண் வேடங்களில் நடித்துப் புகழ் பெற்றவர்'' என்று பெருமையோடு சொல்லிக் கொண்டார் திரு சண்முகம்.

திரு ஏ. பி. நாகராஜன் சேலம் ஜில்லாவில் அக்கம்மா பேட்டையில் 1927ம் வருஷம் பிறந்தவர். சின்னஞ் சிறு வயதிலேயே நாடகத்திலே நடிக்கும் ஆர்வம் காரணமாக ஸ்ரீராம சங்கீத பாய்ஸ் கம்பெனியில் சேர்ந்தார். பிறகு நாடகத்துறை மன்னர்களான டி. கே. எஸ். குழுவினரின் ஸ்ரீ பால சண்முகானந்த சபாவில் ராமாயண நாடகத்தில் முதன் முதலாக மேடையில் அந்தக் குழு நடிகராக அறிமுகமானார். ராஜா பர்த்ருஹரியில் நடிகர் டி. கே. பகவதியோடு நடிக்கும் காட்சியையே அந்தப் படத்தில் காண்கிறீர்கள். சிறிது காலம் இயலைப்புப் படையிலும் திரு ஏ. பி. நாகராஜன் பணியாற்றியிருக்கிறார். அதனால்தான் அவரது கனல்தெறிக்கும் வசனங்களும் நம் மனத்தைக் குளிர்விக்கின்றன! மாடர்ன் தியேட்டர்ஸில் சினிமாத் துறையில் நுழைந்தது தொழில் நுணுக்கக் கலைஞராகத்தான்.



திரு ஏ. பி. நாகராஜன்

நாடகத்தின் மீதுள்ள ஆசை அவரை விடவில்லை. ஆகவே பழனியில் விஜய நாடக சபையை உருவாக்கி அதில் தாம் தயாரித்த நாடகங்களை மேடையேற்றினார். சேலத்தில் 1952ம் வருஷத்தில் ஏ. பி. என்.னின் நாடகம் 'நால்வரை'ப் பார்த்த பட அதிபர் திரு வேலு தம் படங்களில் அவரைப் பயன்படுத்திக் கொள்ள முன்வந்தார். 'சம்பூர்ண ராமாயணம்' திரு வேலுவுக்காக அவர் தயாரித்தளித்துள்ள புராணப் படம். இன்று புகழ் பெற்ற டைரக்டர்களில் ஒருவராகத் திகழும் திரு ஏ. பி. நாகராஜன் சமீப காலத்தில் தயாரித்துள்ள வெற்றிப் படங்களைப் பற்றிக் கூற வேண்டியதில்லை; நீங்களே விரல் விட்டு எண்ணி விடுவீர்களே!





ஜனவரி **14** முதல்

பொங்கல் வெளியீடு

சென்னை :

**சாந்தி** (டிலக்ஸ் ஏர்கண்டிஷன்ட்)

**கிரௌன் • புவனேஸ்வரி**

மற்றும் தென்னாடெங்கும்.

விஜய சித்ரா

அளிக்கும்...

# பெண்ணே நீ வாழ்க

G.H.RAO

டைரக்ஷன்

**P. மாதவன்**

B.A.,



உலக உரிமையாளர்கள் :-

**வெங்கடேஸ்வரா மூவீஸ்,** 7, முதல் கிராஸ் ரோட், ஸ்ரீராம் நகர், சென்னை-18.

ELEGANT

கேள்வி கேட்டதும் நிமிர்ந்து பார்த்தேன். கமலா நின்று கொண்டிருந்தாள். இரண்டு மாதங்களாய் வீட்டுப் படி ஏறாத இவள் ஏன் இப்போது வந்திருக்கிறாள்? எனக்கு அவளை வரவேற்க வேண்டும் போல் இருந்தது. நல்ல பெண்! எனக்குக்கூட இவ்வளவு நீண்ட காலமாக அவளுடன் பேசாமல், ஒருவிதமான உதாசீனத்துடன் இருந்தது மனத்தை உறுத்தியது. என்றாலும், என் பையன்களுடைய எதிர்காலம் நன்றாக இருக்கவேண்டும் என்ற கவலை இருப்பதும் நியாயம்தானே?

"என்னம்மா, கமலா! ஆபீசுக்குப் போய்க் கொண்டிருக்கிறாயா?"

"ஓ. போகிறேன் சார்! நீங்கள் ஏற்றி வைத்த விளக்கு......."

"நான் என்ன செய்துட்டேன், பிரமாதமாய்? காசா பணமா? ஒரு வார்த்தை சொல்லி வைத்தேன்."

"அந்த ஒரு வார்த்தையால்தான் எங்கள் வாழ்வே நிலைத்திருக்கிறது."

புகழ்ச்சியை இனி மேல் தாங்க முடியாது. எனவே, பேச்சை மாற்றப் பார்த்தேன். "சீதா எங்கே?"

"வீட்டில் இருக்கிறாள். அவளுக்குக் கல்யாணம் நிச்சயமாகியிருக்கிறது. உங்களிடம் முதலில் சொல்ல வேண்டும் என்றுதான் வந்தேன்."

குஞ்சு, "யாருக்குக் கலியாணம்?" என்று கேட்டுக் கொண்டே வந்தாள். கமலா எல்லாவற்றையும் ஒப்புவித்தாள்.

முன்பு திரும்பிப் பாராமல் ஓடிப் போன மாமா, மனம் மாறி வந்தாராம் கொஞ்ச நாட்கள் முன்னர். 'சீதாவுக்குக் கல்யாணம் செய்து விட்டுத்தான் போவேன்' என்று ஒற்றைக் காலில் நின்றாராம். பரபரவென்று தேடி அலைந்து ஒரு பையனை நிச்சயம் பண்ணி விட்டார். பையனுக்குப் பாங்களூரில் வேலை. போதுமான சம்பளம். எல்லாச் செலவும் மாமாவே செய்கிறார்.

கேட்கக் கேட்க எனக்குச் சந்தோஷமாக இருந்தது. வறுமைப்பட்ட குடும்பம் கொஞ்சம் தலைதூக்கப் பார்க்கிறது என்பதால் மட்டுமில்லை. என் மனத்தை நெருடிக் கொண்டிருந்த எனக்கும் குஞ்சுவுக்கும் மட்டுமே உரிய, ஒரு தர்மசங்கடமான பிரச்னையில் சரிபாதி மறைந்துவிடப் போகிறது என்பதாலும்தான்.... இன்னொரு பாதி?

"அப்போ, உன் கலியாணத்தையும் உன் மாமாவே நடத்திப்பிடுவார்னு சொல்லு."

"பேஷாய்! இப்பொழுதே அவர் அப்படித்தான் சொன்னார். ஆனால், கழுத்தை நீட்ட வேண்டியது நானா, அவரா?"

குஞ்சுவுக்கு ஒரே ஆச்சரியமாய் இருந்தது. ஒரு பெண், தன் கல்யாணத்தைப் பற்றி, அநாவசியத் தயக்கம், ஒளிவு இல்லாமல், குற்றமற்ற தைரியத்துடன் பேசுவதை இப்போதுதான் கேட்கிறாள் அவள்!

"ஏண்டி, நீ கல்யாணம் பண்ணிக் கொள்ளப் போகிறதில்லையா?"

"நானும் பண்ணிக் கொண்டு வெளியூர் போய் விட்டால் அம்மா என்ன செய்வார்? சொல்லுங்கள்."

"மாமா அழைத்துக் கொண்டு போக மாட்டாரா?"

"போவார். அவர் தயவு எதற்கு என்கிறேன். அம்மாவுக்குச் சீதாவைப் பற்றித்தான் கவலை. அது எனக்குத் தெரியும். சீதாவுக்கும் — அவள் சிரிப்பும் கும்மாளமுமாய் இருந்தாளே என்று பார்க்கிறீர்களா?—உள் மனத்தில் என்ன வேதனை தெரியுமா? குடும்பத்துக்குப் பாரமாய்ப் பிறந்துவிட்டோமே என்று, சொல்ல முடியாத தவிப்பு. அதுவும் எனக்குத் தெரியும்! குருவி சேர்க்கிறாற் போல், நான் பணம் சேர்த்து என்றைக்கு அவள் மனக் குறையைத் தீர்க்கப் போகிறேன்? அதனால்தான், மாமா வந்து கேட்டதும், விட்டுக் கொடுத்தேன். அவளுக்குக் கல்யாணமாகிப் போய் விட்டால், அப்புறம் எங்களுக்கு என்ன சிரமம்? நானும் அம்மாவும்தானே? என்ன சார் பேசாமலிருக்கிறீர்கள்?" என்று கேட்டு விட்டுச் சிரித்தாள் கமலா.

"நான் என்ன குழந்தை சொல்கிறது?... உன் வயதில் நான் இருந்த போது எனக்கு இத்தனை அறிவு இருந்ததில்லை!"

"நீங்கள் எப்போதும் என்னை உயர்த்தித்தான் பேசுவீர்கள்! நான் வரட்டுமா? பத்திரிகை அச்சானதும் கொண்டு வந்து தருகிறேன். கட்டாயம் கல்யாணத்துக்கு வர வேண்டும்."

கமலா சென்ற சில நிமிஷங்களுக்குப் பின்னர்தான் எனக்கு உணர்வு வந்தது. பெருமூச்சு விட்டேன். குஞ்சு இன்னும் நின்று கொண்டே இருந்திருக்கிறாள்.

"என்ன பெருமூச்சு?.... கவலை தீர்ந்து போச்சா?"

"இல்லையடி...." என்றேன்.

ஐந்து நிமிஷங்களாயிற்று. குஞ்சு இன்னமும் நின்று கொண்டிருக்கிற மாதிரி தோன்றியது. மெல்லத் திரும்பினேன். அவள் என்னையே பார்த்துக் கொண்டிருந்தாள்!

"குஞ்சு! எனக்கு ஒரு யோசனை......?"

"நான் தீர்மானமே பண்ணி விட்டேன்!"

"நான் சொல்லப் போற விஷயம்...."

"எனக்குத் தெரியாதா என்ன?"

"குஞ்சு, நீதாண்டி வாசுகி! சரி, யாருக்கு என்று தீர்மானம் பண்ணினே?"

"சின்னவனுக்குத்தான்."

"ஏனோ?"

"அன்றைக்குக் கேட்டான், அந்தப் பெண்ணைக் காணலியே என்று. சீதா வந்திருந்தாளே என்றேன். நான் அவள் தங்கையைக் கேட்டேன் என்று பதில் சொன்னான்."

"போடு, சக்கை!.... இவ்வளவு சமர்த்துப் பெண்ணை எவன்தான் விரும்ப மாட்டான்? பணமாவது? பதவியாவது? இப்பவே போய்க் கேக்கிறேன், அவள் அம்மாளை......"

"சரி. அந்தப் பெண் ஒத்துக் கொள்ளணுமேன்னுதான் எனக்குக் கவலை......"

"நானும் வரட்டுமா?"

"கிளம்புங்கோ."

இப்போது நாங்கள் சொர்க்கத்துக்குப் போய்க் கொண்டிருக்கிறோம். கல்யாணங்கள் அங்கேதானே நிச்சயிக்கப்படுகின்றன?

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10.

Managing Editor: T. Sadasivam.

எங்கெங்கிருந்தெல்லாமோ அவை வந்தன, குழந்தைக்குப் பரிசுகளை ஏந்தி. 'என்னுடைய பலத்தை உனக்குக் கொடுக்கிறேன்' என்றது யானை. 'என்னுடைய சுறுசுறுப்பைத் தருகிறேன்' என்றது மான். 'வலுவான என் பற்கள்' என்று முன்வந்தது முயல். 'கூர்மையான பார்வை' என்றது மிஸ்டர் மியாவ். 'உறுதியான எலும்புகள்' என்று கர்ஜித்தது சிங்கம். 'நோய்களை எதிர்க்கும் சக்தி'யைத் தர முயன்றது கரடி.

'இந்த அதிசய அமுல் டின்னிலுள்ள ஆசிகள் அனைத்தையும் வழங்குகிறேன்' என்றது அறிவு முதிர்ந்த ஒரு குரல்.




**அமுல்** பால் உணவு குழந்தைகளுக்குத் தேவையான வைட்டமின்கள் நிறைந்தது.

இந்தியாவின் ஏகபோக விநியோகஸ்தர்கள் : VOLTAS வோல்டாஸ் லிமிடெட்.

ASP/ASF/51-TAM

Registered No. M.
Registered as a Newspaper in Ceylon




பனாமா
ஒரு நல்ல சிகரெட்

செழுமையான
வர்ஜீனியாப் புகையிலை
சீர்நிரவிய கலவை
புதுமை மயமானது



இழுக்க
இழுக்க
இன்பம்
இறுதிவரை




கோல்டன் டுபாக்கோ கம்பெனி பிரைவேட் லிமிட்டெட், பம்பாய்-56.
பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது